உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ ஜ்ஞாநஸம்பந்த பரமாசார்யேப்யோ நம:.

# சைவாகமப்பிராமாண்யம்

## முதல் அத்தியாயம்.

இஃது

அடியாரடிவருடும்,

குளித்தலை - ஸ்ரீமான் - அ. அரங்கசாமி அய்யரால்

இயற்றப்பட்டது.





சென்னை - மவுண்ட்ரோட்,

வைஜயந்தி அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

ஆநந்த௵ கார்த்திகைமீ

*December, 1914.*



[விலை ரூபா 1.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஞானசம்பந்தபரமாசார்யேப்யோநம:

# சைவாகமப்பிராமாண்யம்.

## முகவுரை.

**திருச்சிற்றம்பலம்.**

*என்பே யுருக நின்னரு ளளித்துன்*
*னிணைமல ரடிகாட்டி*
*முன்பே யென்னை யாண்டு கொண்ட*
*முனிவா முனிவா முழுமுதலே*
*யின்பே யருளி யெனை யுருகி*
*யுயிருண் கின்ற வெம்மானே*
*நண்பே யருளா யென்னுயிர்*
*நாதா நின்னரு ணாணாமே.* (திருவாசகம்.)

**திருச்சிற்றம்பலம்.**

கல்லாத புலனறிவிற் கடைப்பட்ட நாயேனையுந் தண்ணருள் கொண்டாண்டு சைவசித்தாந்தப் பசுந்தேனுகரு மன்பாளிக்கூட்டங் களி லொருவனுக்கிய பெருங்கருணையைப்புற்றுக் கசிந்தமனத்தனா யோரோரமையங்களி லென்னைமறந்தியானின்னருளைநினைந் தான்றோர் மொழிகொடு துதிப்பதுண்டு. உலகமடங்கலு முறங்கி நிச்சப்தமா யிருக்கும் நள்ளிரவிலே மாசற்ற வாகாயந்தன்னில் விண்மீன்கள் நிறைந்து விளங்குந் தருவாயில் பெரும்பாலு மிவ்வெண்ணங்க ளென் மனப் புலங்களிற் பாய்வதுண்டு. அந்நேரங்களில் விண்ணை நோக் கிய கண்ணு மிறையை நோக்கிய கருத்துமாக மெல்லமெல்ல வுலா வியு முட்கார்ந்தும் பூரித்த வுள்ளக்களிப்பினா லென்னாவி சச்சிதா னந்த சிவத்தில் லயிப்பதுண்டு. இவ்வுலக மனைத்தையும் முடிவில்

லாக்காலமாளவரினு மின்னேரங்களி லோர்கணத்திற்குமது நிகராகா தென வென்மனங் களிக்கும். இன்புருவனை நோக்கி யிவ்வாறே யென்னாவி யென்றும் அருளில் தைத்துருகிநிற்கவென வேண்டுவேன். கிடைப்பதற்கரிதான விப்பேற்றைச் சென்ற 1911-ம் வருஷம் ஆவணிமாதத்தி லொரு திருநாளிலுங் கிடைக்கப்பெற்றேன். அன்றிரவு ஆகாயம் மாசுமறுவின்றி ஸ்வச்சமாயிருந்தது. சந்திரன்றனது வெள்ளிய தண்கிரணங்களினா லமுதமாரி பெருக்கி யுலகமுழுமையுஞ் "ஜில்" லென்று நனைத்துக்கொண்டிருந்தது. இன்பவெள்ளத்தாழ்த்திய வெண்கிரணப்பிரஸாரங்களின் பொலிவைக் காண்டொறுங் காண்டொறு முயிர்களுள்ளும் புறம்பு மொழிவற நிறைந் தின்பத்தாழ்த்து முன்னவ னருளிற்கு நேரே நிகரென வென்மனங்கரைந்தது. அவ்வழகையு மதனாற்பெறற வின்பத்தையு மொருவன் றனதுள்ளத்துணர்ச்சியிற் கொள்ளலாமேயன்றி யுரைத்தற்கெளிதல்ல. கண்ணிற்கெட்டியவரை யெப்புறஞ்சுற்றிப்பார்ப்பினு மொரேபொலிவுட னமர்ந்த வியற்கையமைப்பின் வனப்பைக் கண்களிமைப்பின்றித் தெவிட்டா துண்டன. மனமெனுந் தடாகம் பூரணமாய் நிறம்பிக் கரைகடந்து ததும்பி வழிவதுபோலிருந்தது "வான்கருணை வள்ளால், நின்னரு ளொளியேயோ, அன்றி நின்கருணை யொழுக்கேயோவிது" வென வென்மனம் விம்மிவிம்மி யப்பனியொளிவழியே சென்றென்னைக் களிவித்த கர்த்தனது கழலடிக ளின்பவாரி மடுத்தது. இன்பவுணர்ச்சிமயமாய்த் திரிந்தவென்னாவி மெல்லமெல்ல வுண்ணப்படுவதை யான்சிறிதுணரவு மெய்ம்மையாளவந்த வெம்பெருவாழ்வாம் வாதவூர் வள்ளலி னருட்டிருவாக்கிலொன்றாம், "இன்பே யருளி யென்னையுருக்கி யுயிருண்கின்ற வெம்மானே" எனுந் தீந்தமிழென்னினைவின்பாற்பட்டது. ஆவிசோர்ந்து, கைகளுயர்த்தி, முழந்தாட்பணிந்து விண்ணை நோக்கியவாறே "கன்னெஞ்சனேனையுங் களிவித்த கருணை வாரிதியே - என்னைப்போலப் பல்கோடியந்தணரிருக்கவு மென்னையே மெய்கண்டானடித் தொண்டர்க்குத் தொண்டனாக்கிய கருணையென்னே! என்னைநின்னி லிழப்பதன்றி யிதற்கிலனோர் கைம்மாறு" என்று குவிந்தேன். முழந்தாட்பணிந்த காரணத்தாற்போலும் கிறிஸ்தவ மாக்களின் நினைவும், அதனுடன் கிறிஸ்து பெருந்தகையாரின் நினைவும் வந்தது. பலஸ்தீன் நாட்டி லந்நாளில் மார்தா மேரி யென்ற பெண்ணரசிகளும், பீற்றர், ஜேம்ஸ், ஜான் முதலிய வின்பச்செல்வர்களும் ஊன்கண்ணு முளக்கண்ணுங் கண்டு களிக்குமாறு யோர்தான் நதிக்கரைமேலுலாவித் தாம்கண்ட மூலகார

ணைப்பற்றிய மூதுரைகளை மொழிந்ததும் நாம்பெரியரென்னு நாட்டமுடையார் நாணப் பச்சிளங்குழவிகளும் பான்மொழிக் கன்னியரும் வறியவரும் எளிதிலுணர்ந்த அப்பெருமானைச் சூழ்ந்துய்ந்தார்கள் என்பதுங்கண்டு என்மனம் நெக்குருகின்றது. யோர்தான் நதிக்கரைசென்ற வென்மனந் திரும்பி யமுனா நதிக்கரையடைந்தது. இது போன்ற ஒரு நிலாநாளிலன்றோ யமுனாநதியின் மணல் மேடுகளிற் றங்கிய சிறுகண்ணனை குழலோசை செவிமடுத்தது மாயர்குலச் சிறுமிகளோடிக் கனிந்தனரென வென்மனங் கலுழ்ந்தது. காளைப் பருவத்து மாரனைவென்ற தீரனும் புண்ணியபுத்திரனும் மன்னுயிர்த் துன்பம் மாற்றலை மிக்கவோ பேறென மனைதுறந்து, மனையாள் துறந்து, மகிழ்ச்சியினுக்கு மாசாட்சியைத் துறந்து, பாதுக்க தூக்கியாய்த் தமது திருவடிமலரைப் பூமகள் சிரத்தின்மீது சூட்டிய பலநாட்களிலானந்தர் முதலானோர்க்குத் தொண்டர்களுக்கமுதவுபதேசஞ் செய்தார்" என்று பலவேறு எண்ணங்கள் சங்கிலித்தொடர்போன்று ஒன்றன்பின்னொன்றாய்த் தொடர்ந்து வந்துகொண்டிருக்கையில் என்னை யறியாதோர் வியஸனமுமுண்டாயிற்று. "அந்தோ! ஒருமதவாதி வேறொரு மதப்பெருமைகளைப் போற்றாது தூற்றுகின்றாரே. மானுடவியல்பென்னாட்டிலும் எந்நாளிலும் ஒருமை யுடைத்தே! பெரியாரெவரு மொருதன்மை யுடையாரே! பாவப்பிணிப்பிறகு உவந்து பலியுண்ட பரமனாகக் கருதப்படும் கிறிஸ்துவும், பேரன்பர் பிரபந்திக்குப் பரிந்து பண்புகாட்டும் பிரானாகக் கொள்ளப்படும் கண்ணனுமெத்தன்மைத்து மொத்தவர்களென வேன் கொள்ளப்படாதோ. ஒருவனே பதியென்று துதியிட்டுரைத்த வுத்தம மகமது மகானின மாக்ஷியை மணத்தலாகாதோ! சள்ளைச் சடங்குகளல்லவோ கொள்ளைச் சண்டையை விளைத்தன. பின்னை யோர்புகுத்திய பிணக்குகளல்லவோ போரை மூட்டின. சடங்குகளைக் களைந்தும் பிணக்குகளை நுணுக்கியும் நோக்கின், பதியின் பண்பெய்திய பல்லாரும் ஸமயத்துவமெய்திய மகத்துவமுடையாரென்பது மணக்கும். பிணங்கு மாந்தர் பெற்றியைப் பற்று துணைமையை யுறுப்பற்றின் நற்றவர்களன்றோவெனத் தெற்றெனப் புலப்படும். கிறிஸ்தவர் பலர்சூழ்ந்தொரு யூபிரேய வாலிபனை, "கடவுள் ஒருவனே, பிதாகுமாரன் பரிசுத்த ஆவி என மூவரில்லை" யெனக் கூறிய குற்றத்திற்காக அவ்வாண்டகையை யுயிருடன் கொளுத்தக்கிளம்பிச் சூழ்ந்து கொழுந்துவிட்டெறியு மந்நெருப்பினடுவே னுயர்க்கிளம்பிக் கிளம்பி உரத்த குரலுடன் சுற்றிநின்ற ஜனங்களையுற்று "கடவுள் ஒருவனே ஒரு

வன் மூவரல்லர்" என்று கூவி "ஒருவனும் என்னப்பனே நினக்கு என்னுயிரை தத்தம செய்கிறேன்" எனறு முதல்வனிடம் தனதான் மாவை யர்ப்பித்ததாக வெனது யூதநண்பரொருவர் பிரயாகையில் நடந்த ஸர்வமதக்கூட்டத்தில் கன்மனததாரையுங கரைந்துப் பிரஸங் கித்த கதை என்ஞாபகம் வநததும, சறறுமுனனநதககடலில் மூழ் கிய வென்மனந துயாக்கடலி லாழநதது. அநநோ "ஐயன் பேரைச் சொல்லி யமர்விளைபபாரு முளரே. இதுவென்ன அநியாயம் என என்மனம வெதும்பிறறு. உரோம் சககிரவர்த்திகளிடத்தி லேழைக் கிறிஸ்தவர்கள் நறுககுண்டதும, மீண்டும் மறறைய மதஸ்தாகளைக் கிறி ஸ்தவபபோபபுகள் சித்திரவதை புரிநததும கணக்கிலகப்படுமோ. சிவ! சிவ!! வனிநத மதசசண்டை" என்று என்மனம புண்ணுயிறறு. கனிமொழியிற (Gospels) கலலல கிடையாவென வென்முழு நம பிக்கை, கிறிஸ்துநாதரே "நீங்களெலலோ நம் கடவுளின் குழந்தை கள் (ye are the sons of God) 'என்னததனும நின்னததனும, என் கடவுளும் நின்கடவுளும" ("My Father and your Father, my God and your God") "என்னதத னெனனிலு மிககான்" (My Father is greater than I) "யானொருபயிர் என்னத்தனே பயிரிடு பவன்" (I am the true vine and my Father is the husband-man) "என்னை ஏனினியோ னென்கிறாய், என்னததனே எல் லார்க்கு மினியவன (Why callest thou me good-there is none good save my Father-in-heaven) "உன்றிருவுள்ளப்படியாகுக" (Thy will be done) "என்னத்தன் பேர்கொடு போநதேன்" (I am come in my Father's name) என்பன வாதி நனிமொழி மொழிநதார்எனக் கனிமொழியிற் கண்டேம. கடவுளருளா லுல குய்யவநத வாண்டகையே கிறிஸ்து வென்பது வெளியாகும. கனி மொழியிற கல்லல் கிடையா வென்றேம். கல்லலயாவும் பின்னையோர் கட்டிவிட்ட துட்டச்சொல்லிலென்பது விள்ளும். கயவர் கட்டிவிட்ட மீளாநரகம் (Eternal Hell) மீக்ஷியில்லா நீக்ஷிபெற்ற வோலக்காக்ஷி (Everlasting cries of souls past redemption), பரமனைப்போலப் பாவிவாழும் பிசாசு (An embodied Devil often upsetting the will of God), குற்றமியறறு வொருவன்மேற் குற்றம் பொறித்தல் (Visiting the sin of a byegone parent upon the innocent descendants) அப்போலிக் குற்றததிறகும் குற்றவாளியை மன்னித் தாவது, அல்லது குற்றவாளியைத் தண்டித்தாவது நீதிபுரிவதை விட்டுக் குற்றஞ் சிறிது மியற்று வொருவனை வருத்தப்படுத்தல் (In-

stead of forgiving the sins of the sinner in mercy, or exacting penalty from the doer in strict justice, putting the innocent to agonies of death and calling that to be mercy or an adequate justice which is neither,) பகுப்பில்லாத கடவுளாரு சித்தைச் சிதைத்துப் பகுத்தல், மீண்டு மொற்றுத்தாய்ச்சி கூறல் (To say that God who is an undivided and indivisible spirit is composed of three persons, one of whom is greater than the other two and yet committing the mathematical blunder that one is either three or equal to three and relegating this to the realm of mystery) முதலிய பசையற்ற வசைக்கொள்கைகளல்லவா கிறிஸ்துநாத னுண்மையைத் தெரியவொட்டாது மறைத்து மவர் மணிமொழிகளைப் பிணிமொழிகளாக்கின கண்டீர். அறிவிலு மன்பிலுமிக்க யூனிடேரியர்களும் ஸர் ஆலிவர் லாட்ஜ் முதலிய சாஸ்திர வல்லுனரும், லியோ டால்ஸ்டாய் (Leo Tolstoi) போன்ற தீரரும், ஆர். ஜே காம்பெல் (R J. Campbell) போன்ற பண்பினமைந்த கிறிஸ்தவர்களும் (Enlightened missionaries), மேரி கொரிலி (Marie corelli) போன்ற உத்தம நற்குணக் கதை வாணர்களும் (Novelist) இக்கொள்கைகளை முற்றத்துறந்தனர். கிறிஸ்துநாதன் பரிபூரணத்துடன் கலந்த நாடொடங்கி அவரைப்பற்றிய பலகொள்கைகள் பரவின. அன்றுமுத லின்றுவரை இன்னும் திரிந்துகொண்டேவரக் காண்கின்றோம். பலநூற்கள் கொளுத்தப்பட்டன. பலநூற்கள் புகுத்தப்பட்டன. இவைகளென்மனதிற் படவே, கண்ணன் விஷயத்திலு மிவ்வாறு பண்டைக்கொள்கைகள் விண்டு பின்னைக்கொள்கைகள் புகுத்துக்கிடக்கின்றனவே யென்று வென்மனமநொந்தது. கண்ணன் கொள்கையைத் தீர்மானிக்கவேண்டுமாயின், அப்பெரியோனது தாய்தந்தை தமர்தாரங்களின் கொள்கைகளையும், மற்றைய விருஷ்ணிகளின் கொள்கை, பாண்டவர்களின் கொள்கை, கௌரவர்களின் கொள்கை, அவர்களின் முன்னோர் கொள்கை, துரோணர், அசுவத்தாமர், கிருபர், பீஷ்மர், மற்றை யிருடி கணங்கள், விராடன்போன்ற விறையோர், மாங்கணிகர், மருத்தர்போன்ற மறையோர் கொள்கை, கண்ணனே பாரதப்போருக்கு முன்னும் பின்னுமிடையிலுஞ் செய்துவந்த வழிபாடுகள், கீதோபதேசஞ்செய்த கண்ணனுடனிருந்து மவன்பார் பார்த்தன் பண்ணிய பாமன்வழிபாடு முதலியவைகளைக் கவனிப்பி னுண்மைகளை யுணரலாமன்றோ. அற்றாயினும் பின்னையோர் புகுத்திய புன்மைகள் பலவா

யிற்றே. என்செய்வது; எம்மதமாயினுங் கட்டுள்ளவரை யீர்க்கும், பள்ளமுள்ளவரைத் தள்ளும், வழுக்குள்ளவரைச் சறுக்கும். கஷ்டத்துடன் கிலிஷ்ட கல்பனஞ்செய்யின் துஷ்டமாகவே முடியும். சகஜமானதும், பரம்பரைப் பொருந்து வருகின்றதுமான கொள்கைகளை யுடைத்தாயின் யாரும் வெறுப்படைந்தாரென்பது தீர்ந்ததேன். ஆயினும் பேர் முழுதும்பிசைந்த பெண்மையினில் வேரூன்றிய பொலிவெய்தியது ஆகாதவது, புறக்கொள்கைகள் என்னுங் களைகளைப் பிடுங்கி நன்மதப்பயிரைச் செழிக்கச்செய்யாது மாத்திரம் பலரோ மதாக்கிரகத்தால் பிடித்ததையே சாதிக்கும் பேராணவத்தி லிடப்பினும், எம்மை யருத்தேகவல் விருட்கருவறையிலிருந்து பெற்றெடுத்துத் தமது பூக்கலாந்த புனமுறுவலை பொத்த பனிநிலவில் விட்ட பேரன்னையே யம்மதக் கரிகளைய நீக்கி, பாளங்களைத் தூர்த்து ஸமத்துவஞ் செய்வாள் என்பது. இதற்கென்ப புதுமதம் புகுத்த வேண்டுவதில்லை. பெருங்கருணைவள்ளலே முன்னுட்களிலேயே முடிந்தமுடிபான தெய்வஞானப்பொன்னை வெளியிட்டருளினர். அந்தத் தெய்வஞானத்தை ஓர் பாஷையில் மாத்திரம் வெளியிட்டதுடன் நில்லாது, எல்லோருங் காணும்படி சிலைகள் கோயில்கள் விக்கிரகங்கள் முதலியவைகளின் மூலமாக வெளியிடவும் விதித்துள்ளார். இவைகளிற் பெறப்படுமுண்மைகள் ஓர் தேசத்தாறதென்றும், ஓர் காலத்தாறதென்றும், ஓர் ஜாதியாரதென்றும் கூறத்தக்கனவல்ல. இக்காரணம் பற்றியே இப்பெருஞானமானது "பதிஞானமென்றும்" "அபரோக்ஷானுபவ ஞானமென்றும்" ;"ஸமரஸ ஞானமென்றும்" சித்தாந்தஞானம்" என்றும் பகரப்படுமென்பதைக் காணலாம். இவைகளிற் பெறப்படு முண்மைகள் எம்மதங்களிலும் பொதிந்து கிடக்கின்றன. ஆயினுமிவைகள் அம்மதங்களிற் குப்பையிற்கிடக்கும் மாணிக்கங்களைப்போதத் துப் புன்கொள்கைகளில் மறைந்து கிடக்கின்றன. இதிற்பெறப்படும் இறை, உயிர், தளையெனும் பொருளிலக்கணங்கள் முன்பின் முரணின்றி எம்மதங்கட்கு மாறுய நிருபணவைகளாகும். இக்காரணம் பற்றியே "[illegible]" தத்க்ஷணமே தக்கதென நம்பிக்கையுண்டாக்குங் கொள்கைகளைக் கொண்டதெனவும், "[illegible]" ஆயாசமின்றி வீடுபேற்றை யளிக்குமெனவு மிதன்பெருமை வெளிப்பட்டது. ஏனெனின் "அன்பை"யே அஸ்திவாரமாகக்கொண்டெழுந்த மதமாதலினுலென்க. அன்பு செலுத்துவதும், அன்பாலின்பம்பெறுவதுங் கஷ்டமின்றாம். இதிற்பெறப்படும் சரியையாதிகளின்றிறமோ "விரும்புஞ் சரியைமுதல் மெய்ஞ்ஞான நான்கு

மரும்பு, மலர், காய், கனிபோலன்றோ பராபரமே" என்ற ஸ்ரீ தாயு மானமுனிவருரைத்தபடி அன்பின் பேதங்களாம். இதிற்பெறப்படும் ஸமஸ்காரங்களாவெனில் பேறனைத்தையளிக்கும் பெருமிதங்களாகும். இஸ்லாமார்க்க மினியசகோதரபாவத்தை யெடுத்துச் சாற்றினுஞ் சுன்னத், "ஜீவஹிம்ஸை" "முடிவில் நரகம்" போன்ற வினைத பலவாம்சங்களை யுடைத்து. கிறிஸ்தவமார்க்கத்திலுஞ் சகோதரமார்க்கஞ் சதுரமாய்ச் சாற்றப்படினும் ஒயின்குடித்தல் மேலாய்நாட்களில் வேண்டப்படும். "(Lord Supper)" முதலியவைகளைக் கவனிக்க அன்றியும் மேற்குறித்த மறைப் புணர்வொன்னைகளும் வேண்டப்படும். ஸௌத்திராமணியிற் சுராபானஞ் சுவைக்கப். வாஜபேயத்தில் மாமசம் உண்ணக்கும். இச் சமஸ்காரங்களுக்கும் ஞானசாதனத்திற்கும் யாதொருதொடர்பையுங் காணோம். ஆயினிவ் வுத்தம ஞானத்திற் பெறப்படும் ஸம்ஸ்காரங்களாவெனில் பௌதிக சாஸ்திரஞானம் பெருகிய விஞ்ஞான உண்மைகளென்று துணிப்பட்ட "ஹிப்னோடிஸம்" "மெஸ்மெரிஸம்" "டெலிபதி" (Telepathy) "கிளாவாயன்ஸ்" (Clairvoyance), பிறர் எண்ணமறிதல் (Thought reading) முதலியவைகளைக் கொண்டெழுந்து முதலவையடைவிக்கும் முழுநலங்களாகும் இக்காலத்தில் மேனாட்டாரதிலேப வியாதிகளைச் சொஸ்தஞ்செய்தல் கேட்கப்படும். இவ்வாறே நிறைந்த வன்பும், பாந்தவருளுங்கொண்ட சிறந்த அற்புத ஆசான்றுணிடையறுத்தியானத்தா லடைந்த பரமனருளொளியைப் பெருக்கி பக்குவனுக்குப் பாசவிமோசனஞ் செய்விக்கும் சாம்பவி, சாக்தி, மாந்திரியெனுந் தீக்ஷைகள் யாவும் தித்திக்கு நீங்கருமபினு மினியதா யாத்மாவிற் செய்யப்படும் "ஆத்மோத்தாரண"ச் செய்கைகளாம். கிரியையொரு விதம், ஞானமொருவிதமென்று கூறி கிரியையொழிப்பதே ஞானமென்றும், ஞானத்திற்கு வைரிபோ காமமென்றும் போதிக்கும் மதங்களைப்போலாது, ஞானமே கிரியையாய்ப் பரிணமித்தும், கிரியையே ஞானத்தைத் தரவல்லதாயுமுள்ள பெரியவழிகளாகும் வாட்டு ஞானமும், மூட்டுகர்மமு மிதிற்கிடையா. இவ்வாறே அன்பொருமதமும் ஞானமொருமதமாக்கொண்டு அன்புயர்ந்தது, ஞானந்தாழ்ந்ததென்றும், ஞானமுயர்ந்த தன்புதாழ்ந்ததெனவுங்கூறி கலாம் விளைக்கும் காரணமிதிலில்லை. எல்லாம் அன்பேயாய், எல்லாம் ஞானமேயாய் விளங்கிநிற்கும். வாளொன்றையும் நம்பத்தான் வேண்டும், விளக்கவொவ்வாதெனக் கூறுவதில்லை. மற்று எவற்றையும் விளக்கியே நிற்கும். சிலமதவாதிகள் கொள்கைகளைக்கூறி விளக்காமல்

நம்பச்சொல்வதுண்டு. கேட்கப்புகின், கடவுளின் ரகஸியமெனக் கூறுவார்கள். கடவுளின் ரகஸியமாயினும், (God's Mystery), கூறவொண்ணாதெனை வொன்றையுங் கழறுவதில்லை. ரகஸிய அனுபவ நிலையையுங்கூட ஒருவாறு விரித்துரைக்க வல்லதாம.

என்றிவவாறு பலவெண்ணங்கள நதிபபிரவாகமபோன் றென் மனத்தின்கண் மேன்மேலும வநதுகொண்டிருக்கும்போது, இவைக ளனைத்தையு மொருங்கே போதிக்கும சைவாகமங்களின் அருமை, பெருமைகளும் என் மனநகண்ணிறகின்றன. ஆ! ஆ! அதன்பெருமையை யார் சொலலவலலார். ஆரியர்க்கேயென றும், அநாரியர்க் கன்றென்றும் ஆடவாக்கேயென றுப மகடூஉக்கன்றென்றும், இறையோர்க்கேயன்றி வறியோாககனறென்றுமு கடவுளின் குழாஙகளை வேறுபடுத்திக் கூறும் சிலநூறகளைப போலாது, ஜாதிகுலம பாராது, நிறஞ்செய லெண்ணாது, ஊர்பேருன்னாது, அன்பர் யாவர்க்குமொரு தலைப்பட பக்குவமே பண்பென்றும, அன்பே அருமைப்பாடென்றும், தாழ்மையே தண்மையென்றும, அறிவே ஆறறலென்றும் மாற்றுவது அண்ணலாகம மொன்றேயாம. ஆயின் கொரான, பைபில போன்ற மதக்கிரந்தஙகளிற ஸாவமானிட ஸோதரதவம பெறப்பட்டதுபோல சிவாகமஙகளிற பெறபபடாமல சாதுர்வாணங்கள் பெறபபட்டதேதென்னில, மனுதர்மாதி நூறகளில ஒழுக்கம நிறைநதுள்ளோரை ஆரியரென றும, அஃதில்லாதாரை அனாரியரென்றும் கூறப்பட்டிருக்கின்றது. மிருதிநூறகள உலகனைத்தையு மாரியர், அனாரியரெனு மிருபகுதியிலடக்கின. சௌசாசாராதிகளைக் கொண்டோர் ஒருபாலாரும், சௌசாசாராதிகளைக் கழிநதோர் மறறொருபாலாருமாக வகுக்கபபட்டார்கள சௌசாசாரங்களு மாநதிரபாஹ்யமென விருவகைத்தாகும. இவ்வாநதிர பாஹ்யாதியாசாரங்களை விரும்பினின்றோர் ஆரியரென்பது ஸ்மிருதிநூறகளில தெறறெனப புலபபடும். இன்னுமிவ்வாசாரங்களைப போறறி வாழ்கின்றவ ராரியரேயென்பது திண்ணம் ஆயினு மாரியாநாரியரென் று மிருதிறத்தாரையும மீடேற்றவேண்டி யுரைக்குமாகமங்கள் சாதிமுறையைச் சாறறவநதில்லை. சாதிக்குரிய சடங்குகளைப போற்றியதின்று. சாதிமுறைப்படி வேற்றுமை யுரைத்ததின்று. பக்குவா பக்குவ நோககிச் சுத்த புவன வாஸிகளென்றும மிச்ரபுவன வாஸிகளென்றும் அசுத்தபுவன வாஸிகளென்றும் மாததிரம கழறியதுண்டு. ஆரியரையு மீடேறறுங்காரணத்தால் அவர்கள்கொண்ட சாதிவேற்றுமையை யநுவாதமுகமாயுரைக்கஙண்மையாவம் சாதியாதி வேற்றுமையைத் தவிர்ப்பதே

யதன்முக்கிய தாற்பரியம். "சாதிகுலம் பிறப்பென்னும் சுழிப்பட்டுத் தடுமாறும்" என்றும் "சாத்திரம்பல பேசுஞ்சழக்கர்காள், கோத்திரமுங் குலமுங்கொண் டென்செய்வீர், பாத்திரஞ் சிவமென்று பணிதிரேன், மாத்திரைக்குள் ளருளுமாற் பேறரே" என்றும் சைவப்பெருந்திருவாளர்கள் கட்டளையிட்டருளியதுஞ் சிவாகமங்களி னாதாரங்கொண்டேயாம். இதனால், சாதி, குலம், கோத்திரங்களைக் களைவதேயதனியல்பு. பாத்திரம் சிவம் என்பதுதான் அதன் முழுக்கருத்தாகும். அனாரியர்களையுற்று ஒழுக்கமுடைத்தாதல், மதுபானம் விலக்கல், மாம்ஸபோஜனந் தவிர்த்தல் முதலியவைகளையுங் கூறுவது போலவே ஆரியர்களையுற்றுச் சாதியைத் தவிர்க்கவே போதிக்கின்றன. ஆரியர்களும் சாதிவித்தியாசத்தைக் கொள்வதெல்லாம் ஒழுக்கங் காரணமாக. சற்றுமுன்வரை ஒழுக்கங் காரணமாகவே சாதியையுயர்த்திவந்தனர் சான்றோர். பிராம்மணர்களாக விரும்பிய சிற்சில வகுப்பினரும் ஒழுக்கத்தைக் கைக்கொண்டே நன்னெறி கைப்பற்றினர். சற்று நிதானித்துணர்மின். சாதியுயர்வுயர வொழுக்கந்தேர்வதை நோக்குமின். முன்னையோர் தின்னவில்லையோவென எசினென்னாம். இவ்வுலகில் பலவகுப்புகளிருக்க யூதர்களையே பரமன் பக்ஷம் வைத்தார்பவர் (The chosen people of God) எனச்சிலர் பகரவில்லையா. முதலில் யூதர்களுக்கென்றும் அதன்பிறகே மற்றையோர்க்கென்றும்(First for the Jews and then for the gentiles) என்று புதியவேற்பாடும் புனைந்ததில்லையா. சாதிமுறையைக் கவனிப்பின், பிரமஞானத்தைக் கைக்கொண்டோர் பெரியாரென்றும், உயிரைக்காப்பாற்றுவர் அவர் கடுத்தவர்என்றும், தர்மத்திற்குப் பொருளீட்டுவோர் அவர் கடுத்தவர்என்றும் கண்டோம். ஆதியிலெவ்வாறு சாதிமுறை வந்ததென்பதைத் தீர்மானிக்கப் போதுமான சான்று தற்காலத்திலில்லை. ஆயினும் பாரத, இராமாயண, புராணாதிகளில் "திக்பலம் க்ஷத்ரியபலம் ப்ரஹ்மதேஜோபலம் பலம்" "பாகுபலத்தைச் சுட்டெறி, பிரும்மதேஜஸே பலம்பலம" என்று வசிஷ்ட விசுவாமித்திரர் கதை வெள்ளிடைமலைபோல் விளங்கக் கிடக்கின்றது. "பாஹுபலம் பலத்தும்" "பணச்செறுக்கு முறுக்கியுமுள்ள" விக்காலத்தில் மேற்றிசையிலுள்ளாரும் அவரைப் பின்பற்றிய கீழ்நாட்டாரும் அவ்வுண்மை கடைப்பிடிப்பாரா! சாதியாலொற்றுமையிலலையென்றும் சதுரிழந்தோமென்றும் புறத்துள்ள காடு, மலை, ஆறு, கடல்முதலியவைகள் குறுக்கிட்ட காரணத்தால் வகுப்பினர்

(Nations) என்று சர்வ சகோதரத்துவத்தைச் சிதைக்குஞ் சிலர் ஞானத்தையும் ஒழுக்கத்தையுங் கண்டு பிரித்த வாரியரைக் குறைகூறுவானேன். சகோதரபாவங் கூறும் மதங்களில் மாம்ஸ பக்ஷணம் மிகைத்தும், மதுபானந் தொகுத்தும வந்திருப்பதற்கும், சாதிமுறைகூறிய விநநாட்டி லவைகுறைநது மிருபபதற் கென்ன காரணங்கண்டு கூறுவாரோ. ஒழுக்க முயர்ந்ததாகக் கொள்ளப் படாதபோது ஏதாவதொன்றை யுயாந்ததாகக் கொள்ளவேண்டும். அஃது இன்றைக்குப பணமாய் முடிநதிருபபதைப் பாருங்கள் பாழும் பணம் பாமனேயும பிடரிபிடித்துத் தள்ளி யரசாக்ஷிபுரிகின்றதே! என்றாலும் ஒழுக்கததை யுயர்த்திப் பேசிய திவ்யாகமமோ, சாதி யைச் சதுர்யுகமவரை நிறுத்தப் பேசியதின்று. மறறு அதனைத் தொலைக்கவே சாற்றியது கண்டீர். சாதியாஞ் சங்கடச் சடங்கைக் கடந்த ஆத்தும ஸம்ஸ்காரத்தைப் போதிப்பதே ஆகமததினியல்பு. அநாரியர்களை நோக்கிக் கூறுவதுயாதெனின் "ஒழுக்கமுட னுற வாடுக, அன்பையும அருளையுங் கைக்கொள்க" என்பதாம். ஆரிய ரையுற்றுக் கூறுவது யாதெனின் "தேகச்சடங்கு எவ்வாறாயினு மாத்ம ஸம்ஸ்காரததை விரும்புக" என்பதாம். சட்டைச் சடங்கு சௌளமாயிலென், அன்னத்தாயிலென், ஸோமபானமாயிலென், ஸுராபானமாயிலென், ஆரியர் அநாரியரென்னு மிருதிறத்தாரும் மாதேவன் மக்கள். இருவரையு முய்விப்பதவர் கருணை. இதனல் நியாயங் காரணமாகக்கொண்டு ஒழுக்கத்தை ஒப்பியதால் "வர்ணாச்ரமாசாரயுக்தா: ஸர்வே ஸ்வாசாரநிஷ்டா:" என்று வர்ணு சிரம தர்மத்தை யொட்டியும் அதைக்கடநதுமெனச் சிவாகமதர்மம் வெளிப்பட்டதறிக. என்றாலு மிதைத்தொடர்ந்த வாக்கியம் "வேதாதிக ஷயமஹாஜ்ஞானம்" என வருமாற்றால் "வேதத்தி லுயர்ந்ததாகப் பெறப்படும் ஞானமே யிதில் விரிக்கப்பட்டதறிக. இதனுல் திவ்யாக மம் "புதுஏற்பாடு" (New Testament) போன்றதாகும். கிறிஸ் தவர்களின் புதிய வேறபாடான து இவ்வுலகத்திருேர் மூலையிலுள்ள ஓர் நாட்டிலுண்டான "கிறிஸ்துவை" நம்பவெனக்கூறியது. இப் புதிய வேற்பாடோ எவ்விடத்துமுள்ள எவ்வான்மாக்களிலும் உண்மையிற்பதிந்த கிறிஸ்துக்களைக்கண்டு பரமனைப் போதிப்பதா கும். அதாவது "தன்னுண்மை கண்டு தலைவனையனுபவிக்கக்" கூறுவதாகும். கிறிஸ்தவர் புதியவேற்பாடும் அறிவாளிகளால் பழ யனவென்று கழிக்கப்பட்டு வேறுபல புதியஏற்பாடுகள் புதுக்கப்படுங்

நிலையினின்றது. திவ்வியாகமமேதோவெனில் என்றென்றைக்குந் தெவிட்டாதுளத்திற் றித்திக்கும் புததமிர்தையே யாக்கும். இதுகாரணம்பற்றியே அடிக்கடி "ஸர்வலோகோபகாராய" எல்லாஉலகத்தின் க்ஷேமத்தின்பொருட்டே யருளப்பட்டதென்றும், "[illegible]" ஜகததிலுள்ளார் உய்யும்பொருட்டே வெளியிடப்பட்டதென்றும் ஆகமங்கூறும இதனாலேயே "[illegible]" இந்தஞானத்தை உலகெங்கணும விரிக்கவென வறிவாளிகளுக்கு ஓர் சாஸனமும பிறநததுணாக. சைவாகமங்களிற பெறப்பட்ட பெருநலமோ எல்லாமதங்களிலாழ்ந்தும, அன்பிற கரைநதவெல்லா வான்றோருமடையும பேறுகளையே வெளியிடுதலாம. "ஒரு நாமமோருருவ மொனறுமிலலாற் காயிரந திருநாமம் பாடிநாமதெளளேணங் கொட்டாமோ" "ஏகமஸதவிபராபஹுதாவதநதி" என்ற மூதுரைகளின்படி இன்னவுரு, இன்னநிறமெனறு கூறவொண்ணாத் தனிமுதலவனை எப்பேரிட்டழைப்பினு முண்மையாய் வழிபடுவோரடையுங் கதியொரே விதமாகும. இவர்களடையு மிகபரபபேறுகள ஒரேவிதமாகும். இங்குப் பேறென யாங்கூறியது தன, தான்யாதிகர்மப் பேறுகளையன்று. உண்மை ஞானிகள, உண்மையன்பர்கள் (The Sages and the Saints) பெறும் பெருமபேறுகளையுற்றேயாம். உள்ளவாறுண்மையா யுள்ளங்குழைந துமபர்பிரானைத தொழுதெழுவார்க ளிம்மையிலே யடையும பேறுகளைத திவவியாகமங்களே அவைகட்குறிய ஏதுக்களுடன், எடுததுரைக்கும. அவையாவையெனின்,

"[illegible]" என்ற ஆகம வாக்கியங்களால், சாந்தி, பிரசாநதி, தீப்தி, பிரஸாதத்வம் முதலியவைகளை யுண்மையன்பர்களடையுமிகப பேறுகளென்றுணர்வாம். இதில் சாந்தியாவது யாதெனில் எவ்வித வாபததுக்கள் வரினும் மனநதளராமை, பிரசாநதியென்பது அகவிருள் புறவிருள்களின் நாசம். அகத்தும் புறத்து மொளியை விரித்தல தீபதியாகும். உள்ளத்திற் றெளிவுடைத்தாகியென்றும் ஸந்தோஷமாய்நிற்றல பிரஸாத

மாகும். அன்றியும் "தேஜ꞉ப்ரபாவோ வீர்யஞ்ச க்ஷமாகாருண்யமேவச" எனும் வாக்கியத்தால், தேஜஸ், பிரபாவம், வீர்யம், பொறுமை, இரக்கமீறுதல் முதலியவைகளு மவர்களுடைமைகளாகும். உண்மை ஞானிகளின் தேகம் வனப்புடைத்தாதலும், ஒளியுடைத்தாதலு முண்டென்பதை ஸ்ரீ சேக்கிழார்பெருமான் தொண்டர்புராணத்தில பற்பலவிடங்களில் தெளிவாய்க்கூறியுள்ளார்.

"பாச மற்றில ராயினும் பார்மிசை
ஆசை சங்கரற் காயின தன்மையால
தேசு மிக்க திருவுரு வானவர
ஈச னைத்தொழு தேதொழு தேகினார்"

என்று ஸ்ரீஞானஸம்பந்தப்பெருமானை யுற்று மிகவும் ஜ்வலிக்குந் திருமேனியையுடையவரென்றும், தூரத்தில் வரும்போதே ஸ்ரீசுந்தரமூர்த்திகளின் திருவுருவம் ஒருபெரிய தேஜஸ்ஸாகவே உபமன்யு முதலிய இருடிகணங்கட்குக் காணப்பட்டதென்றும், விளக்கியருளினர். யோகநூலவல்ல ஸ்ரீகாளிதாஸனும் யோகாப்பியாஸம்புரிபவர்களுக்கு "ஜ்யோதிஃ ப்ரபா விஹாரஶ்ச ஶிரஸ꞉" எனசிரஸினின்று ஜோதியின கிரணங்கள் எங்குமபரவுமென்றும் கூறினர். *இயேசுநாதரும் நாற்பதுநாளவரை யோகாப்பியாசம் புரிந்து அஞ்ஞானமெனு மகவிருட்பிசாசையோட்டித் துறத்தி உல

* ஸர் ஆலிவர் லாட்ஜ் எனும் பண்புடைக் கிறிஸ்தவரும், சாஸ்திரமுதிர்ச்சி யுடையோரும் (Scientist) ஆகிய மகாபண்டிதர் மனப்பான்மையுடன் எழுதிய "Man and the Universe" எனும் கிரந்தத்தில் பின்வருமாறெழுதுகிறார். "The whole Idea of the Manhood (of Christ) is that he was a man like ourselves, subject to human needs, open even to temptation, obedient to pain and death. That his spirit was superior to ours, few deny, but that his body was essentially different, seems to me like superstition His raiment at any rate was made in the ordinary way, yet it too shared in the glory of the transfiguration The transfiguration was a splendid episode, typifying the dignifying and dominating of matter by he indwelling spirit The shining in the eye of genius the almost visible glow pervading the body in moments of exaltation—this raised to a higher power permeated and suffused the poor human body and travelworn peasant garments of Christ, till the few privileged witnesses had to shade their eyes. So it is reported concerning Moses after his solitary communion with Jehovah; so it may have been with Joan of Arc, so it may be again, from time to time, with the most exalted saints."

கத்தாரை ஏடேற்ற வெளிப்பட்டகாலத்தில் ஓர் தினம் "முகம் சூரிய மண்டலத்தின் பிரகாசத்தையும், உடைகள் ஜோதிகளையாகவும்" தனது சீடர்களுக்குப் பிரகாசித்ததனவென்றும், அனேகர்கள் கண்கள் நாதனைக்காணக்கூச அவர்கள் அவனடிவணங்கி, நடுக்குற்றார்களென்றுங்கேட்டேம். ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியும் "[illegible]" நினக்கு தெய்வகக்கண்களைத் தருகின்றேம் "எனது ஈசவாஸம்பந்தமான யோகத்தைப்பார்" என்று அர்ஜுனனுக்கு மொழிந்து விசுவரூபத்தைக்காட்டினதும் அவ்வர்ஜுனன் அநேககோடி சூரியர்களின் தேஜஸ்ஸையுடைய முகமண்டலத்தைக் கண்டனனென்றும், அவனது கண்களும் அவ்வொளியைக் காணக்கூசினவென்றும் கீதையிற் கேட்டேம். இவ்வாறே ரிஷியாதிகள் யோகப்பிரபாவத்தால் தேஜோரூபிகளாய் விளங்கினார்களென லிங்காதிகளிற் கண்டேம். பதினோராந் திருமுறையில் நம்மக்கள் செவியிலிருக்கின்றனவையுமின்றித் நமது கத்தொலிக்குக் கிறிஸ்தவ நண்பர்களெழுதும் பக்தர்களின் சித்திரப்படங்களில் சிரஸ், முகம், தேகம் முதலியவைகளைச் சூழ்ந்து ஒளிகள் மண்டலமிட்டிருப்பதாக அவர்கள் எழுதுவது மேற்றமுடைத்தே. ஸெயிண்டு பிரான்சிஸ் (St Fransis of Azzizzi) எனும் அன்பர் முதல்வனைத் தொழுது திருப்புகாலையில் முன்னிலும் பன்மடங்கு ஒளியுடைக் கண்களுடனும் முகமண்டலத்துடனும் காணப்பட்டார் என அவரது திவ்யசரித்திரத்திற் கூறப்பட்டுளது. இவ்வுண்மையை, திருக்கோயில்களிற் பிரதிஷ்டிக்கப்பட்டு விளங்கும் திருவுருவங்களைச் சுற்றியமைந்திருக்கும் பிரபை பிரபைகளும், உலோக விக்கிரகங்களின் சிரங்களையொட்டியிசைத்திருக்கும் "சக்கரம்" போன்ற ஒளிமண்டலங்களும் நிறுத்தும்; அன்றியும் ஆராதனைகாலங்களில் ஒவ்வொருவகைத் தீபங்களினாலும் "[illegible]" முகம், கண், மூக்கு, செவி, உருவம் முதலியவைகளைச் சுற்றி, பிரணவாகாரமாக ஒளிகளைக்காட்ட விதித்த ஆகமவிதிப்படி அநுட்டிக்கப்படுவதும் இவ்வுண்மையை ஐயமறத் தெளிவிக்கும். மேலும் அடியார்களுக்கொரு தீரமும் உண்டாவதா யுண்மையாகமங்களுரைக்கும். எமது வாதவூர்ப்பெருமானும் "யாமார்க்குங் குடியல்லோம் யாதுமஞ்சோம் ..... ...மேவினோ மவனடியாரடியாரோடு மேன்மேலும் குழைந்தாடியாடுவோமே" என்றும், அப்பர்சுவாமிகளும் "நாமார்க்குங் குடியல்

லோம் நமனையஞ்சோம்.........பிணியறியோம் பணிவோமல்லோம், கோமாற்கே யாமென்றும் மீளாவாளாய்க் குறுகினோம்" என்றும், "அஞ்சுவதியாதொன்றுமில்லை-அஞ்சவருவதுமில்லை" "சிறுமானேந்திதன் சேவடிக்கீழ் சென்றங்கிருமாந்திருப்பன் கொலோ" என்று மடியார்களுக்குள்ள தீரத்தை விளக்கியருளினார்கள். இம்மனோதைரியம் பரமனுக்காட்பட்ட பணியினாலுண்மையில் வருமென்பதை "எளியேன்மேலன் றிருவாலவாயா னிற்கவே" என்று காழிப்பிரான் கருணை கூர்ந்தார். மரணம் நேர்ந்தகாலத்தும் கிறிஸ்துவும் அவர் கொள்கைக்காகப் பலருமுயிரிழந்தார்களென்று கிறிஸ்தவர் கூறிக்கொண்டு பெருமைபாராட்டுவதெல்லாம் அன்பாகக்குண்டாகுந் தன்மைகளென்று சிவாகமங்களிற் கண்டவைகளேயாம்.

இவையனைத்திற்குங் காரணமின்னதென்ச் சிவாகமங்களே செப்பும். உயிர் பளிங்கனைய சித்தென்பது திவ்வியாகமத்தேற்றம். பளிங்கானது எவ்வளவுக் கெவ்வளவு அழுக்கு நீங்கப்பெற்று சுவச்சமாயிருக்கின்றதோ அவ்வளவுக்கவ்வளவு சூரியனது ஒளியை விரிக்கும். சூரியனது ஸந்நிதியில் மிகவும் ஸ்வச்சமான கண்ணாடி தன்னுருவங் காட்டாது ஒளிமயமாகவே விளங்கும். அழுக்கிருந்தால் மாத்திரம் கண்ணாடி தோன்றும் இன்றேல் தோன்றாது. அதுபோலப் பளிங்கனைய சித்தாகிய வுயிரும் ஆணவமெனுமழுக்கு நீங்கப்பெறின் சிறிதும் வேற்றுமையின்றிச் சிவவொளியைப் பிரஸரித்துச் சிவமாய் விளங்கும். உயிர் சார்ந்ததன் வண்ணமென்பதுந் திவ்வியாகமத்தேற்றம். "[illegible]" என்ற வாக்கிய மிதைநிறுத்தும். சிவனைச்சார்ந்தவுயிர் மாலின்னியம (அதாவது ஆணவவழுக்கு) நீங்கின காலத்து "சைவீபிரகஞையுடைத்தாகும்" சைவீபிரக்ஞை யுண்டானதும் தனுகரணாதிகளும் சிவவொளியைத் தாங்குங்காரணத்தால் சிவதனு, சிவகரணாதிகளாய் மாறும். பசுகரணங்கள் சிவகரணங்களாய்ப் பவிக்குமென்று சிவதீக்ஷையிலேதான் கூறப்பட்டது. இவ்வாறெம்மதங்களுமங்கீகரித்த வுண்மைகளத்தனைக்கும் சிவாகமங்களே ஏதுக்களெடுத்துரைக்கும். இதனாலே எம்மதவுண்மைகளுக்கும் அருட்டிறவுகோல் சிவாகமமே என்பது திண்ணம். இதற்குக் காரணம் யாதெனில் பதிநூலாகிய சிவாகமத்தில் இயற்கையில் எவை யுண்மையோ அவையே செப்பப்படுவதாலென்க. ஆயின் "பஸ்மதாரணம்" முதலியவை சைவத்திற்குறிய சிறப்புக்குறிகளல்லவோவெனில்,

சைவத்தினின்றும் பிணங்கி யவர்களுக் கவ்வாறு தோன்றுமேயன்றி வேறல்ல. பஸ்மதாரணம் பசுத்வ நிவிருத்தியைக் காட்டும் குறியென்பது எவரு மெளிதிலறியக்கிடக்கின்றது. திவ்வியாகமங்களிவ்வாறே செப்புகின்றன. ஏனைய மதவாதிகள் பஸ்மதாரணஞ் செய்யாவிடினும், அது அவர்கள் கோட்களுக்கு விரோதமுற்றதன்றாம். மற்று ஒத்ததேயாகும். பூர்வீகமதங்கள்யாவும பஸ்மத்தைப் போற்றியே வந்தன. மோஸஸ் எழுதிய புத்தகத்தில் நீற்றை நிறைபப்பூச விதியுண்டு. ஜொராஸ்டர் "ஜெண்டு" (Zend) நூலும் நீற்றைப் போற்றியதுண்டு. பூர்விக ஈஜிபது நாட்டிலும சாம்பலைச் சேரித்து வைத்தனர். வேதத்திலுள்ளது நீறே. நவீனத்தோராகிய கிறிஸ்தவர்களும் (Ash Wednesday) சாமபற்றிருநாளென வோர் விழாக்கொண்டாடுகிறார்கள். முஸ்லீமான்களின் மசூதிகளில் பூதியளிப்ப தின்னுட்டிலுண்டு. இதனுல எக்காரணத்தாலும் "பூதிசாதனம" ஓரமதத்திறகெனவெழுந்த சிறப்புக்குறியென்பதுதவறு. கட்புலனுககெட்டா கர்த்தனையடையககுறிகளே விரும்பிய எம்மதக் குறிகளுககுமிதுவே மிக்ககுறி. ஆயினுஞ் சைவாகமத்தில் சிறப்பு வழியாய் நீற்றைக்கொள்வதுமுண்டு. உண்மைகளின் குறிகள் (Truths' symbols) என்றும உண்மைகளை (Ultimate Truths) என்றும இருமுறையாக காலவேறுபாட்டையும, பக்குவ வேறுபாட்டையுநோக்கி தீக்ஷாதிகளும், சரியையாதிகளும், திருவுருவாதிகளும கொள்ளப்படுமபோது சாமானியவாசிரியனு லுண்மையின் குறிகளாகவும், பிறப்பையகற்ற முடிவிலவரும் இறைவனுருவாகிய "ஸதகுருவினல்" உண்மையேயாகவும எடுத்தாளப்படும. இவ்வாறுலகமனைத்துமுய்யவேண்டியே உமபர்பிரான் உண்மையாகமஙகளை யுரைத்தருளினர். ஆயின திகாரிகளின்னுரெனை எடுததோதவில்லையோவெனின்பிறபபைக்காரணமாக வெடுத்தெங்குங் கழறியதில்லைகண்டீர். எத்துணைப் பாவமியற்றி வருந்தியிருப்பினும "பஸ்சாத்தாபம்" (பின்னருருகுதல்-Repentence) கொண்டு, தன்னகங்குழைந்து, தனிமுதலைத்தேடினு அதிகாரிகளாவார், பூததையுள்ளோரே யிதறகதிகாரிகள்என்று கூறபபட்டிருககின்றது. கிறிஸ்துநாதன் பரிசேயர்கள் (Pharisees) முதலிய வெளிவேடததாரைக கடிந்து, எப்படிப்பட்ட பாதகியாயினுமகங்குழைந்தழுவாராயி னவரையுமேற்றருதரித்ததுபோன்று சைவாகமும் "[illegible]" (டம்பாசாரங்கடிந்தவனும்) "[illegible] விஹீநஸ்ய" பொய்ஞானம் விண்டவனும்) "[illegible]

ஸ்ருக்ருதம் வாயுநாஷ்டகம் । தத்வஞ்சம் க்ஷேத்ராம்ஹேவசிவஞ்ஞ் ணஞ்சம் தநுஸங்கே ॥" "பிழைத்தவெல்லாம் பொருத்தருள்செய் பெரியோய்" என்று அகங்குழைந்து அழைத்தலறிநிற்பின் சிவதர் மத்திற்கதிகாரி என்று வேதம்வியந்து கூறும். அந்தியஜனாயினும் அதமனாயினும் பாவத்திற்குப் பஸ்சாத்தாபமுபொருந்தினவனாயின் அதிகாரியென்று வாயுசங்கிதைவழங்கும். இதனாற் பெறப்பட்டது யாதெனின் யாவருஞ்சைவராகலாம யாமெல்லோருந் தோஷமுடை யோமே. தோஷமில்லாதவர் யாவருமின்று. இவ்வுண்மை "சதாசிவா திகளுந் தோஷமுடையவர்களே" என்ற "ஸதாசிவாதய ஸர்வே ப்ராயோ தோஷைர்யுக்தாஃ ப்ராயஸ்சித்தவிராமா தோஷாஸ்ஸர்வே வயம் ॥" எனவரும வாக்கியம்நி றுத்தும். இறைவனொருவனே என்றுஞ்சுத்தன் :—

"ஸுராதி ஸர்வம்ஸம்ஸாரம் ஹ்ராஸமாவர்த்தமாநகஃ ।
ஸத்யம் தவசிவோ ஹோநாயம் சிவஉவஸ்தே ॥"

என்ற வாக்கியம் பிறந்தது. அஞ்ஞானம் பழுத்தொழுகி மலப்பிணிப் புண்ட சாப்பிரமங்கள் கூடி நாம்பிரமமெனத்தருக்கி யவஞானம் பேசு வதும், மலமறிதகமும்புமுடலைச் சுமநதவெவ்மனோரிற்சிலர் கல்விச் செருக்கு, பணச்செருக்கு, ஜாதிச்செருக்கு, உத்தியோகச்செருக்கு முதலியவைகளைக்கொண்டு யாம்பெரியாரென்று செருக்குவதுமெற்று க்கோ. "குற்றமே பெரிதுடையேம்" என்றார்குணமெனுங்குன்றேறிய கொற்றவரும். ஆதலின் எத்துணைப் பாவியாயினு மவனையுமாதரித் துப் பாவிப்பஸ்சாத்தாபம் போதித்துப் பாமனுக்காட்படுத்துதலே பண்புடையார் பரிசு. இவன் மாபாவி இவன்கூட்டுறவு கொடிதென் றும், இவள் பெரியவிபசாரி இவளுடனுரையாடலாகாதென்றும் தரு க்குவதெல்லாம் பசுநூற்கொள்கைகள். கண்டவுடன் சீற்றங்கொள் வதுபசுக்களியற்கை. "ஸிவஸ்ஸர்வேஷாம் தஸாயேவசிவ ஸ்ஸதஃ" என்றவசனத்தால் பேரிரக்கங்கோண்டு எம்மனோர்க்கருளுங் குணமுடைத்தாதனேக்கியே எம்மிறைவனுஞ் சிவனெனப்படின், சிவனைச் சார்ந்து சைவராகும்யாமும் அவ்விரக்கங்கொண்டருள் வழி பற்றி அருளுங் குணமுடைத்தாலன்றிச் சைவராகோம். ஆகவே எவ்வகைப் பாவிகளையுங் கடிந்தொதுக்காமற் சைவராக்கவேண்டி யது சைவர்கடமை; அப்படியே எல்லோரும் சைவராகலாம். ஆனல்

சைவரான பிறகு நடைகோணுவது மொழுக்கங் குன்றுவதுங்
கொடிது. மதுபானம் புரிவது மகாகொடிது. மதுபானம் புரிப
வர்க்குக் கடவுள் கொடுத்த அற்புத ஆநந்த வுலகம் பொய்த்து மது
செய்த வுலகம் மெய்த்தும் விடும். ஆதலின் அது கொடிது. அதி
னுங்கொடி துயிர்செகுத்துண்ணல். இவைகளை யறவே யொழித்தா
லன்றிச் சைவராதல் முடியாது. சைதன்னியரெனுந் தன்னியர் இனிய
கானங் கொண்டுக் கடைவழிசென்றபோது கயவர், களவர், கடியர்,
வெறியர், கள்ளுண்டோர், காமங்கொண்டோர், வேசிகள், எல்லோ
ரும் ஓடோடிக் கண்ணீர்சொரியக் கரதாளம்போட்டுக் கனிந்தவரு
டன் குழுமிக்கூத்தாடினர் என்று கேட்டோம். ஆ! என்ன ஆநந்தம்!
சதுரிழந்தார் சாதுக்களானார். ஆனாலன்பாய்த்திரிந்த வன்னார்மீண்டுங்
கோணலைக் காணாராயினர். ஆகையாலுய்யவேண்டினோர்உயிர்செகுத்
துண்ணுமையைக் கொள்ளவேண்டும். எவ்வுயிர்க்கும் அபயப்பிரதானம்
செய்வதைத்தவிர வேறுதானம் கிடையாது. மதுமாம்ச விவர்ஜனம்
சைவர்க்கின்றியமையாதன. அந்தோ! மேற்றிசையிலுள்ளாரும் அவ
ரைப் பின்பற்றிய கீழ்நாட்டாரும் தெய்வஸம்பத் ஆத்மஸம்பத்
தின்றி நன்மைகள்போற்றீமைகளையும், அறிவுபோலறியாமைகளை
யும்பெறுவதைக் காணுறும்போது எந்நெஞ்சம் பதைபதைத்
தந்தோவெனப் புண்ணாகாத போது கிடையாது. உதாரணமாக
கொலைக்களம் (Slaughter house) குடித்துறைகள் (Liquor
shops) முதலியவைகள் எங்கும் பரவிநின்றன. கப்பற்றுறைகளிலும்
ரயில்ஸ்டேஷன்களிலும் கூடிக்கக்கூவியழைக்கும் போர்டுகளையும் பல்
லுயிர்செகுத்து விருந்திறகு விரும்பி யழைக்கும் விளம்பரங்களையுங்
கண்ணுறும்போ தெம்மனம் வெந்துகிடக்கும். "அந்தோ! உலக
மடங்கலு முண்மையுணர்ந்து அன்பை வளர்த்து, அளவளாவி அருளை
நாடி நிற்குமோ, அக்கால மெக்காலமோ, கடவுளின் குழந்தைகளுட்
கலகமொழியுமோ, கபடங்கள் நீங்குமோ, வருத்தந்தணியுமோ,
பிணிகள்பாறுமோ, அங்குமன்பும், இங்கு மன்பும், எங்குமன்புமாய்
என்று தழைக்குமோ" என ஏங்குவேம் புன்மதம் பேசிக் புலப்பு
மொழிகேட்போமாயின் "அந்தோ! இறையையுற்று நிறையன்பில்லா
வாழ்வுமொருவாழ்வா? இறையன்பிறகுதவாத ஞானமுமொரு
ஞானமா? இறையன்பிற் கிணங்காத கிரியையு மொருகிரியையா?
"இறைவன் கழலேத்து மின்பமின்பமே" "சிற்றம்பலமேய செல்வன்
கழலேத்துஞ் செல்வம் செல்வமே" என்பேம். மற்றையின்பத்திற்கும்
செல்வத்திற்கும் உலகர் படும்பாடு என்னென்பேம். தற்காலம் வெகு

சிலர் தவிர மறைறையோர் கண்டதேகாக்ஷி கொண்டதே கோலம் என்று செம்மறிகளையொத்துச செதது வீழ்கின்றனர். படித்தவர்க ளிவ்வாறு பணத்திறகு மிநதிரிய வினபததிற்குமே மாண்டு மண்ணுவதைக் காண்டொறுங் "கல்லாதவரே நலலவாகள் நல்லவாகள் கறறு மறிவிலாப பேதைகளுக் கென்சொலலுவேன்" என்று இரங்கிய நந்தாயுமான பிரபுவின் திருவாக்குமனதிறபடும. மிருகபபிராயாக ளாயுள்ள கல்வியில்லாப பெணடிருடன் கறறறிவுடைய ஆடவாக ளாகியயாம் பிநதுன்பம மலைபோனிறகவும, கறறறிவுடையாடவர் களு மிபபடி அருள்ஞான மில்லாது அவஞானம பேசியும, அருளை மறநதும் நிறபி னக்கோலமெவர்கள மனதைததான் புணணுககாது. இறைவன் கழலேதததுதங்கிசைந்த கலவியை ஆண்பாலா, பெண்பால ரிருவாகளும கற்று அருளை நாடாதவமையில உலகததில் துனப மொழியாது. இவ்வெண்ணங்கள் எமமனதிறபடவே யாமபட்ட துயாமினைத்தெனச் சொலலமுடியாது. ஒருபெரும பூமபொழிலைப போன்ற இபபுவனமானது முடகளமூண்ட பாலைவனமாயிறறே என்று எநநெஞ்சமநொநதது. ஆறுமும பூர்ணசநதிரன்பால மாரி பொழிநது தனது வெண்கிரணஙகளை வீசிவிசிறிநின்று வானையும பூமியையுமொரே யானநத வெள்ளததமிழ்ததியதைக கண்டநும ஒருவாறெமமனநதேறி "பெற்றதாய் ஒருத்தியிருக்கப் பிள்ளைக்குத் துயரேன்"என எம்மனத்துயரமாறியது. ஓர்பக்கநதுயருமோர்பககங் களிப்புங்கொண்ட வக்கணம முதல்வனையுறறு "ஐயனே யருள் பெருகுமா றருளுதி - அன்பே யோஙகுமா றன்னுக - கருணையே யுன்னைக் காணுமாறருளுதி - அன்னுய் என்னை நின்மடிமீதிருத்தி - உயிர்க்குறு துணைவ உலகனைததுமுன்வயமே வரப்புரிவாய் ஒப்பிலா வோருவ ஓலமிதை கேடடருளுதி அருளே! அன்பே! இன்பே!" எனவுடல் குழைநது தலைதாழததி மனததால முதலவன குஞ்சித பதத்தை யிறுகத்தழுவி, முததமிடடு, கண்மலர்சாததி, கறறுவின் மனம்போலக் கசிநதுருக அருள்புரிக என்று மனநெக்கி அவனருள் வழிநின்றேம்.

அன்றிரவுமுதல் எலலாச செமமை நலங்களுக்கு முறைவிட மாகிய சைவாகமங்களின் மாட்சியை யுலகின ருணர்நதுய்யுமா றுப கரிக்க வேண்டுமெனு மடங்காவாசை எமமிதயததிற குடிகொண் டது. சைவாகமங்களின் பெருமையைத திருவருட்டோன்றல்களாகிய "ஞானஸம்பந்தாதி நம்பரமாசாரியார் நால்வர்களுங் குறிப்பாலுய்த் துணர வைத்தருளினர். உண்மை பாஷியக்காரராகிய ஸ்ரீ கண்ட

யோகீந்திர ரிவ்வாகமங்களின் பெருமைகளை மிக்கமகிழ்ந்து போற்றினர். அண்ணலாகமங்களி னருமையை யருணலமுணர்ந்த அரதத்த மூர்த்திகள் அவனியோரறியுமா றகமகிழ்ந்தருளினர். புன்னெறியாளர் பொறாமையுடன் பொறித்த தூடணங்களை நிர்மூலப்படுத்திய ஸ்ரீமத் - அப்பயதீக்ஷிதர் பெம்மானருளிய பெரியவாகமங்களின் பெற்றியை பேரன்பிற் பரிந்து கொண்டாடினர். மற்றும் "பிரம்மவித்யாத் வரீந்திரர்" "நிஜகுண யோகீந்திரர்" முதலிய புனிதவாசிரியர்களிவைகளின் மாட்சியை மணந்தருளினர். வித்தியாரண்யரு மாகமங்களின் இன் சுவையைப் பருகிவாழ்ந்தனர். வேதவித்யா பாரங்கசீலர்கள் வியந்து கொண்டாடும் மெய்யாகமங்களின் மேன்மையை யுணர்ந்துய்ய வழியறியாத பொல்லாப் பொய்மையாளர் புலம்பிய பொய்யுரைகளைக் கடிந்த ஸ்ரீலஸ்ரீ - சோமசுந்தரநாயகர் அவர்களும், தூர்த்த தாமதவாதிகளின் தாக்கந்த துருத்திகளைத் துலைத்து நன்மத நறுமணங் கமழுமாறுகொண்டு வெற்றிக்கொடிநாட்டி இறைபணியி யற்றலே யின்பவாழ்வாகக் கொண்ட வெம்செந்திநாதையர் அவர்களும் சிவாகமநிந்தை புரிந்த சிறியோர்களைச் சினந்தும் தண்டம்புரிந்தும் சீர்ப்படுத்தினர். இவ்வாறுலகோர்செய்த தவப்பயனுண்மையை நிலைநாட்ட வெழுந்த சைவநன்னெறியாளர் நாட்டிய நல்லாகமங்களின்றிறத்தையுணரும் பாக்கிய மடையப்பெற்ற யாமும் சிலகூறுவானொருப்பட்டதற்குமோர் காரணமுண்டு. யாம் பிரபன்னகாயத்ரியென்று வைணவர் கொண்டாடும் "இராமானுஜ நூற்றந்தாதி" பாடிய "திருவரங்கத்தமுதனார்" எனும் வைணவபிரபந்தகர்த்தர் மரபிற்றோன்றியவரேயாம். எமது பிதாமகரும் வைணவப்பற்றும் மாயாவாதஞானமுமொருங்கே கொண்டு கைவல்லிய நவநீதம் ஞானவாசிட்டம் ரிபுகீதை முதலிய நூல்களைக் கனவிலும் மறவாரேயாவர். வழிவழிவந்த வைணவ வபிமானமும் மெய்ம்மை விட்டதின்று. மாயாவாதமல்லவு மெய்ம்மை வாட்டியதுண்டு. வெகுநாள்வரை வேதாந்த தேசிகர் பிரபந்தங்களையும், தென்கலைப் பிரபந்தங்களையுங் கற்றுவந்தேமாயினும் பாரபக்ஷமின்றிப் பல்மதங்களையுஞ் சீர்தூக்கிப் பார்க்கும் பெரும்புண்ணியவசத்தால் சைவநன்னெறியைச் சாரும் பாக்கிய மடைந்தேம்.

யாமாங்கிலங்கற்றத் திரிசிரபுரத்திற் கிறிஸ்தவர் கலாசாலையிற் பயின்றகாலத்தில் கிறிஸ்து மார்க்கத்தைப் படிக்கநேர்ந்தது. அன்றியுமாங்கில நூல்வல்ல ஹக்ஸ்லி (Huxley) டிண்டல் (Tyndall) ஹ்யூம் (Hume) மில் (Mill) இங்கர்ஸால் (Ingersoll) முதலி

நாத்திகர்களியற்றிய நூற்களேயுமதிகம் பாராட்டிவந்தேம். மதவிஷய மாய் எந்தநூலகப்படினும் அவாவுடனுணுறக்கம விட்டு வாசிப்பதெம்மியறகை. திருவருட்பாங கவவழியிலேயே செலுத்தியது. இன்றும் சமாசாரபபத்திரிகைகளே வாசிக்குமபோது நாட்டு விஷயம் மோட்டு விஷயமாதிகளே யொதுக்கி மதவிஷயங்களேதாவது காணபபடினதையே படிபபேம. அநதக் காலததில் எமக்கு சைவசமய மினனதெனவும, சைவ நூறகளிவை யெனவுந்தெரியாது. F. A. கிளாஸில படிததுவநதபோது மதவிஷயஙகளிலதிக ஊக்கங்கொண்டு யாம படிபபதையும பலசநதேகஙகளகொண்டு மனநதளாநது முகமவாடி வருநதுவதையும அடிககடி கண்ணுறற எமது நண்பரொருவா "அனபரே மலேக்கோவிலநூறறுககால மண்டபததில ஒருவா மிகவுந தார்க்கிக நெறிமுறைபபடி நியாயம பிறழாது வெகு அருமையாய்ப பிரசஙகம செய்கிறா ; நாம போய்க் கேழபபோம" என்றுசாவினா அபபிரசஙகியாா யாவரெனின எமமைபபோறபலரையு மீடேற்றுமாறுவநத ஸ்ரீலஸ்ரீ - ஸோமசுநதரநாயகா எனும பெருநதகையாரே அன்று அவாருணலஙகொண்டு பிரசாதிததும "திரிபதாாததம" எனும் பெரியவிஷயமாய. அவாது பிரஸங்கததின் காமபீர்யததையும, மாதுர்யததையும, அனபையும, முன்பின் முறணின்றி நியாயநெறிபபடி மதிநுட்பததுடன் பிரஸஙகிதத வனமையையுங கேட்டது தான் யான் சைவததைபபறறி முதல் முதலில கேட்டதாகும. அபபெரியவருடன் பழகாத பக்ஷததில நாததிகனுயிருபபேனே, அன்றிக கிறிஸ்தவரா யிருபபேனே, அன்றி மாயாவாத மருட்டலேக்கேறி சாதியபிமானங்கொண்டு சதுரிழபபேனே, அலலது ஒனறினும படாதுண்பதுமுறஙகுவதுமாயிருநது காலங்கழிப்பேனே தெரியாது. அபபெருமானுடன மூன்று நாளவரை யிடைவிடாதண்டிப பல கேள்விகளே நாததிகரீதியாகவும, வைணவரீதியாகவும, மாயாவாதரீதியாகவுமவரைக் கேட்டேம. குழநதைகளிடமன்பு பாராட்டுவதுபோல எம்பாலன்புகூர்நது எல்லாவறறிற்குந தகுநத விடையளித்துத் தாமியறறிய "ஆபாஸஞானநிரோத" முதலிய நூறகளடங்கிய ஒரு தொகுபபை (Set) எனக்குதவித் தோன்றுஞ் சநதேக மனைததையுங் குறித்து, அடிக்கடி எழுதியனுபபுமாறு கட்டளேயிட்டனர் பிறகு யாமடைநத பேறுகளே யிங்கு விரிக்கவேண்டியதில்லே. சைவசித்தாந்தமே மெய்யத்துவிதமென மெய்யும் புளகமாக யாமுணர்நதனுபவிபபது முழுமையும் அப்பெருமானுற்ருன்.

இனி யிவைகளுபநிடதங்களிற் பெறப்பட்டவோ வென விசாரிக்கவேண்டியதாயிற்று. சூத்திரர் புனைந்த பிரமாணமற்ற புதுமதமென்றார் பல பிராமணர். வேறுசிலரிதை வேதபாஹ்ய மென்றார். பாஷ்யாதாரமற்ற மதமென்றார் வேறு சிலர். அக்காலத்திற்றான் ஸ்ரீமத். அப்பய தீக்ஷிதமூர்த்திகளருளிய சிவதத்வ விவேகம், பிரும்ம தர்க்கஸ்தவம் முதலிய நூற்களையான் படிக்க நேர்ந்தது. சிதம்பரம் பிரம்ம வித்தியா பத்திராதிபராயிருந்த ஸ்ரீநிவாஸ சாஸ்திரியாரிடமிருந்து அந்நூற்களெனக்குக் கிடைத்தன. உபப்பிரும்மணங்களினேற்றத்தை யது முதலாகத் தானே யானுணர நேர்ந்தது. சங்கரருள்பட மற்றைப் பாடியக்காரர்களெல்லாரும் தவறிப்போய்த் தாறுமாறாய்ப் பிதற்றிய பொய்யுரைகளென் மனத்திற்பட்டது. இப்பாடியக்காரர்களுக்கு முந்திய இலிங்க கூர்ம ஸ்காந்த சைவாதிபுராணங்களில் உபநிடத வுண்மைகள் விளங்கக்கிடந்தமை யெனக்குத் தோன்றியது. ஸ்ரீகண்டரென வொருவர் பிரமஸூத்திரங்கட்குப் பாஷிய மியற்றி யிருக்கிறாரெனக் கேட்டோமேயன்றி அப்படியொரு பாஷிய மிருப்பதாகக் கண்டதில்லை. ஒருவாறு பிரமாணங்களினாதாரங்கொண்டு "சிவோத்கர்ஷம்" பலப்பட்டதேயன்றி சைவசித்தாந்த விஷயங்கள் உபநிஷத்துக்களிற் பெறப்பட்டிருக்கும் விஷயமாராயவேண்டியிருந்தது. இப்படிச் சிலநாளிருக்கையில் ஸ்ரீ ஹரதத்தாசாரிய மூர்த்திகளுடைய "சுருதிசூக்திமாலை" யொன்று "சிவலிங்க பூபதிகள்" வியாக்கியானத்துடன் கிடைத்தது. அதற்குப் பிரதியொன்று யாமெழுதி வைத்துக்கொண்டு சிவதத்வவிவேகத்துடன் ஒத்துப்பார்க்கும்போது ஸ்ரீ ஹரதத்தர் ஆண்ட கக்ஷிகளையே ஸ்ரீமதப்பயதீக்ஷிதர் பெருமானெடுத்தாண்டமை வெளியாயிற்று. திரிபதார்த்த வுண்மையும் வேதசம்மத மென்பதை நன்றாய்த் தெரிந்து கொண்டோம். இச்சந்தர்ப்பத்தில் மன்னார்குடி இராஜு சாஸ்திரிகளவர்களுடைய நல்லபிப்பிராயத்துடன் "முத்துசிவத விஜர்" என்பார் கிரந்தலிபியில் வெளியிட்ட ஸ்ரீகண்டபாஷ்யமு மெமக்குக் கிடைத்தது. சைவம் உபநிஷத்துக்களிற் பெறப்பட்ட தென்பதை யாமுணரவே உபநிஷத்துக்களை மற்றுமொருமுறை யத்தியயனஞ் செய்யத்தொடங்கினோம். அதன்பிறகு சங்கரர், இராமானுஜர், மத்துவர் முதலியவருரைத்த பாஷ்யங்களையும், ஸ்ரீகண்ட யோகிகளின் பாஷ்யங்களையும் உபப்பிரும்மணங்கட்கிணங்கக் கூர்ந்து யோஜிக்கவே, சிலபாடியக்காரர்கள் செய்த சூழ்ச்சிகள் வெட்டவெளியாயின. உபநிஷத்துக்களில் நிர்க்குணப்பிரமம் சகுணப் பிரமமென்பவைகளின் பிரஸ்தாபமே கிடைக்கவில்லை யென்

றும், ஜகன்மித்தை, ஜீவன்மித்தை, ஈஸ்வரன்மித்தை யென்பவைகள் மிகைத்ததில்லை யென்றும், மாயையிறந்தோயுணட ஈஸ்வரன் கிடையா தென்றும், அநேசவராகளாகிய பிருமம விஷ்ணு ருதராதிபசுககள ஈச்வராலலரென்றும், ஸாதநியமாயுரைாநதேம. வேதபாஹ்யமதம "பிரசசன்ன பௌததமே" யன்றி சைவம வேதமய மென்பதையுங் கண்டேம. இவ்வாறு யாமாராய்ச்சி செய்துகொண்டு வருகையில காசிவாசி - செநதிநாதயாா அவாகள 'விஜயதருலஜம" எனும பததிரிகையில உபநிஷததிறகுச சிறியாா செய்தபொய்யுரைகளை யெல்லாம வெட்டவெளி யாககினமை யெமககுக கிட்டியது. அத றகு மறுபபுபோல பிருமமவிதயா வெனும பததிரிகையிலெழு தபபட்டதும எமககுக கிடடின. நாமை நீலலோசனி, விவேகதி வாகரன முதலிய பத்திரிகைகளினும பிருமம விததியா பததிரிகை களினும சைவமாயாவாதககக்ஷிகள வெகுவாய் வநதன. இரண்டை யும பாரபக்ஷமின்றிச சீர்தூககின காலையில வெறறுரைக ளனைத்தை யும் வெறுததுச சைவ விஷயமே சான்றெனககண்டேம. யுக்தி வாதமாக மாயாவாத மததகதை மறுததுயானெழுதிய பகுதிகளு முண்டு எமககிவ விஷயததில ஸ்ரீ செநதிநாதயாா அவாகளுடைய திவயோக்திகள செய்த வுபகாரமெபபடியாற சொலலுந தகைமைத தன்று. ஈச, கேந, கட, பிரசின, முண்டக, மாண்டூககிய, தைததிரிய ஐதரேய, சாநதோக்கிய, பிருகதாரணிய, சுவேதாசுவதர, ஜாபால, அதர்வசிரஸ், அதாவசிகை, கைவல்யாதி, மைததிராயண்யாதி முக்கி யோபநிடதஙகளிற் சைவவுணமையே வெளிபபட்டதன்றி வேறெது வும பெறப்படவிலலை யென்று நனறாய்த தெரிநதுகொண்டு ஸ்ரீகண் டா, ஹரதததா, ஸ்ரீமத் - அபபயதீக்ஷிதர், முதலியவாகளின நூலை கொண்டு "உபநிஷத" விஷயமாக எமமாராய்ச்சியை யொருவாறு எழுதிவைததுண்டு ஒருமநதிரததிறகே பாதி சகுணபபிரம விஷய மென்றும, மறறொருபாதி நிர்க்குண பிரமவிஷயமென்றும எநதவாதா ரங்கொண்டு பிரிப்பது? சகுணப பிரம விஷயங்க ளென்பவை முன் னும,நிறகுணப் பிரம விஷயஙகளென்பவை பினனும வநதிருநதாலும முநதியது பூர்வபக்ஷம்; பிநதியது சித்தாநத மெனக் கொளளலாம. முன்னும பின்னும பின்னும முன்னுமாகக் கிளமபிய வசன சமூகங களிற கொஞ்சமும் நியாயமின்றி எவவாறப்படிக் கொள்வது? ஒரே பாவஸ்துவைக குறிதது "அபஹதபாபமா" முதலிய தர்மங்கள் சொலலபபட்டதுபோல "சத்தியகாம சததியஸங்கல்பாதிகளும்" விரிக்கபபட்டதுண்மை. "இதிஹாஸபுராணுபயாம வேதம ஸமுப

முண்டுவோ" என்றமையே பேறெனப் பெற்றேம். இன்பநிகழ்த்து விதமே யினிய பிருகதாரணிய மொழிந்தமைகண்டு மகிழ்ந்தேம். உபநிஷத்தும் பிரமசூத்திரமும் சைவமணத்தையே கொண்டு கமழ்ந்ததை நுகர்ந்தேம்.

எல்லோருங் கண்டு களிக்குமாறுணர்த்துங் குறிகளான கோயில்களும் திருவுருவங்களு மெய்வுண்மையை விளக்குவன என்றவுண்மைகளையும் ஆராய்வித்தப முயற்சியாயிற்று. பன்னூல்களும் பகர்ந்த சைவசித்தாந்தப்பண்பை யேயிவைகளும் போற்றினமையைப் பார்த்தேம் அன்றே வுத்தமமாகட்டப்பட்டு சைவநெறியே யுய்யு நெறியெனப் படிந்தேம் மெய்கண்டான் வழியே மெய், மெய், மெய், மற்றைப் பொய்கண்டார் புகுத்த பொய்வழிகள் பொய், பொய், பொய், பொய்யே யெனவிண்டேம். மேற்றிசையார்களி லன்புமறிவுங்கொண்டு பொய்களனைத்தையும் போக்கி, மெய்யிது வெனத்தேர்ந்தமையுஞ் சைவாகமவே யிருப்பதை யாவுணருமபோது யானடைந்தவின்ப மிவ்வளவென்று சொல்லமுடியாது "பொய்வந்துழலுஞ் சமயநெறி புகுதவேண்டா" "இராஜாங்கத்தி லமர்ந்தது வைதிக சைவ மழகிதந்தோ" என்ற நந்தாயுமான பிரபுவின் றெய்வவாக்கின் றன்மைதெரிந்தேம் யாகவழி மோகவழி போக்கி, யோகவழி ஞானவழி பற்றினேம். யாம் கஷ்டப்பட்டுக் கனிவடைந்த காரணத்தால் எஞ்சேகோத்தார்களாகிய என்றவெல்லாமாந்தர்களுமிதை யடையட்டுமென்று "புசிப்பதற்குச் சேரவாருஞ் சகத்தீரே" என்ற படிச் சிலசொல்ல வெண்ணினேம். தூத்துக்குடிச் சைவசித்தாந்த நண்பர்களென்னைப் பொருட்படுத்தி யழைத்தபோது "சைவாகமப்பிராமாண்யம்" எனு மிவ்வுபந்நியாஸத்தையே விரோதிகிருது வருஷம் மார்கழீ 3௳ (18-12-911) ஸோமவாரத்தன்று எமசிற்றறிவிற் கெட்டியவரையி லொருவாறெடுத்துரைப்பமாயினேம்.

சைவாகமப் பிராமாண்ய மெனுமிக் கிரந்தத்தில் சைவாகமங்கள் பிரமாணங்களென்பதற்குரிய வைகளையே முக்கியமாய் எடுத்துரைக்க நேர்ந்தது. [சிவாகமங்களிற் பெறப்படும், முப்பொருளுண்மை, நாற்பதவிளக்கம், ஐந்தொழிலியல்பு, அத்துவிதவுண்மை, அத்துவா சோதனை, அவத்தைகளிலக்கணம், தசகாரியம், தீக்ஷைகளின்றிறம், முதலிய பலவிஷயங்களும் மிகுந்த பேரொலிமுழங்கும் மஹாசமுத்திரம்போன்றுக் கிடக்கின்றமையால் விரிவஞ்சி சைவாகமப் பிராமாணம் மென்பதற்கு எவ்வளவுவேண்டுமோ அவ்வளவு வரையிலவைகளை யிதிலெடுத்தாண்டு விரிக்காது விட்டேம். இன்னசிலகாரணத்தால்

வேதநூற் பிரமாணத்தை யொப்பினார்க்கேயிஃது மிக்கபயனை விளைக்கும். முன்னரே யாங்கூறியவாறு சைவாகமங்களிற் பெறப்படும் விஷய மெச்சமயத்தார்களுக்கும் மூலமாய் நின்ற மெய்ம்மையையே கொண்டதாகையால், சமயநோக்கொழிந்து யதனையெடுத்துரைக்கவெண்ணியுள்ளேம். இதுவரையிலுமவ் வுண்மைகளை யொருவாறுஞ் சிலமுணர்ந்தார்களறியுமாறு ஆங்கிலத்திலுஞ் சிலவெழுதியுள்ளேம். யாமாங்கிலப்படிப்பிற் சிறிது தூரஞ்சென்ற வளவிலெமக்குண்டாகிய வையநிகழ்ச்சிகளே யெம்மைப் போன்ற வாங்கிலங்கற்றார்க்கு முண்டாயிருக்கு மென்றெண்ணியே பெரும்பாலு மாங்கிலத்திலுரைக்கப் புகுந்தேம். "நலமொன்றுடைவதற் கிடையூறு நாதனை பலவுளவன்றே" என்றார் பெரியார். இடம், பொருள், ஏவல் முதலியவைகளெம்பா லமைந்திராக் காரணத்தாற் போலும், சைவ வுண்மையை வெளியிட யாங்கொண்ட வெண்ணம் நிறைவேறவில்லை. என்றாலும் மனந்தளராது "முயற்சியின் வாராதுறுதிகளுளவோ" என்ற பட்டினத்தடிகள் வாக்கைக் கடைப்பிடித்துமுயன்றேம்.

யாமிதுகாறு மெழுதியவைகளில் ஆங்கிலத்தில் (1) The Inner Meaning of Siva-Linga (சிவலிங்க விளக்கம்) (2) The Theory of God (இறையையுறறவுரை) (3) The Rationale of Symbolic-Worship (திருக்கோயிற் றிருவுருவாதிகளினுள்ளுரை விளக்கம்) (4) The Ways of Sanctification or the Esoteric significance of the Four Paths (நாற்பதங்களினுட பொருட்குறிப்பு) (5) The Satguru-darsana (ஸத்குருதரிசனம்) (6) The Malatrayas (மலத்திரயம்) (7) Samsara Chakra or the Wheel of Progress என்பவைகளும்; திராவிடத்தில் (1) வைதிகசைவப்பிரபாவம், (2) சைவாகமப்பிராமாண்யம் (3) மலத்திரயம் (4) ஸித்தாந்தசைவமென்பவைகளுமாம். இவைகளித் தக்ஷிணதேசத்திற் கூடிய சைவமகாஸமாஜங்களிலும், ஆங்காங்குள்ள அங்கசபைகளிலுமெம்மாற் பிரசங்கிக்கப்பட்டன. பிரயாகை (அலகபாத்) யில் நடந்த விரண்டாவது "ஸர்வமதமகாஸபைக்கெம்மைச் சைவத்திற்குப் பிரதிநிதியாகச் சைவஸமாஜத்தார், அனுப்பியபோது ஆங்கிலத்தில் "Symbolism—a Study of its Rationale" எனும் விஷயத்தை யொருவாறு சுருக்கிக் கூறினேம். இவை எஞ்சிற்றறிவுக்கெட்டியவரையில் "புறச்சமயிகளுண்றி விசாரிக்காத காரணத்தால் நஞ்சமயத்தின்மீது பொறித்ததுருக்திகளைத் துலக்கி யுண்மைகளெவ்வாறையமறப் பிறருக்குப்போதிக்கப்

படவேண்டுமோ அவ்வாறு தக்குந்த பிரமாணங்களுடன் எடுத்துரைக்கப் பட்டவைகள். கல்கத்தா ஹைகோர்டு ஜட்ஜ் ஸ்தானத்தை மிக்க தண்மையுடன் வகித்துக்கீர்த்திபெற்றவரும், இப்போதும், தேசத்திற்கும், மதத்திற்கும், விடாதுழைத்துவருபவ வீர தீர சிகாமணியாயிவ்விந்தியாவிற்கோர் இரத்தினமாகிய "ஸாரதாசரணமித்திரா" சிறீயேம் பிரயாகையிலுரைத்த விஷயத்தை "The Best Essay on Hinduism" "ஹிந்துமத விஷயத்திலெழுதிய பலவியாஸங்களிலுத்தமமானது" என்று கௌரவித்தார்கள். மீண்டும் அவர் எமக்கன்புடன் வரைந்த நிருபத்திலும் பின் வருமாறுரைக்கின்றார்:—

85, Grey Street,
CALCUTTA, 20th MAY, 1912.

Dear Rangaswami,

Many thanks for your letter of the 11th May. Your thesis was really interesting and almost new of its kind so far as North India was concerned. You will do a service to the Hindu Religion if you explain the meaning of the symbols of our religion and so far as I am concerned I shall help you with all my heart

Yours sincerely,
(Sd.) SARADACHARN MITRA.

"(பிரயாகையில்) நீங்கள் படிக்கப்பட்ட விஷயமுண்மையில் குதூகலத்தை யுண்டாக்கிற்று வடவிந்தியா சம்பந்தப்பட்டவரை இதுவேற்கக்குறைய மிக்கபுதிதாகும் நஞ்சமயத்திலுள்ள விக்கிரகாதிகளிலுள்ளுரையை மிக்கவிளக்கினீந்து ஹிந்து மதத்திற்கே யுழைத்ததாகும் என்னைப் பொறுத்தமட்டில், என்னிருதயபூர்வமாக யானித்தற்குதவிபுரிகின்றேன்" எனவெழுதியுள்ளார்.

மேற்கண்ட விஷயங்கள் முக்கியமாய் வெளிப்படுத்தத்தக்கவை என்பதற்குச் சீமையிலிருந்து, ஆரியமதப் பண்டைநாட் பரிசுக்குப் பரிந்தெழுதும் புண்ணியவானுகிய புகழ்பெற்ற ஆநந்த. கே. குமாரசுவாமி என்பாரும் பின்வருமாறெழுதுகிறார் :—

2-6-12. 39, Brook field, West Hill, High Gate, N.

Dear Sir,

I am very glad to hear of your intention to publish a work on the Iconography of Indian Art. It is very

much needed * * * You could send a paper on the subject to the Royal Asiatic Society or the Indian antiquary I hope to hear from you about the work and wish you every success.

Yours sincerely,

(Sd.) ANANDA K. COOMARASWAMY.

"விக்கிரகங்களினுள் ஞரையைப்பற்றிய புஸ்தகமொன்று வெளியிடப் போகிறதாகக்கேட்டு மகிழ்ந்தேன். அஃது மிகவும் வேண்டற்பாலதொன்று........ராயல் ஏஷியாடிக் ஸொஸைடிக்காவது, இண்டியன் ஆண்டிக்குவெரிக்காவது ஒருவியாஸமெழுதியனுப்பலாம். இக்கிரந்தத்தைப்பற்றிக் கேட்கவெண்ணுவல். இம்முயற்சிகை கூடுமாறு விரும்புகிறேன்." என எழுதியுள்ளார்.

வேறனேகர்களுமெழுதிய நற்சாக்ஷிப்பத்திரங்களுமுண்டு. "காசிநாதஸஹ" எனும் வங்காளநண்பர் பிரயாகையால் "சக்தி" விஷயமாயெழுதிய படித்துள்ளார் அவர் யானெழுதிய சக்தி ஸொரூபத்தை விரும்பிப் பல கடிதமெழுதியுள்ளார். இவ்வாறே விஷ்ணு விக்கிரக விளக்கத்தை விரும்பினர் வேறு சிலர்.

இத்தனைக்கும் காரணமெம்மைச்சென்ற பதினைந்தாண்டாக வெவ்விஷயத்திலும் பொருட்படுத்தி முன்னுக்குக் கொண்டுவர முயன்றுவருமெமது அத்தியந்த ஆப்த நண்பரும் உலகப்பிரசித்தி பெற்ற சிவஞானசிகாமணியுமாகிய ஸ்ரீமான் - நல்லசாமிப்பிள்ளையவர்களின்றூண்டுதலேயாம். அவரது பிரேரணையின்பேரி லவரது ஆங்கில சித்தாந்ததீபிகைப் பத்திரிகையிலிவைகளிற் சிற்சில வம்சங்கள் வெளிவந்தன. ஆனால் மாதாந்தப்பத்திரிகையிற் கொஞ்சங் கொஞ்சமாய் வருவதாயின் காலநீடிப்பதனால் இடம் பொருளேவலொன்று மியற்கையிற் பொருந்தாதவனாயினும் திருவருட்டுணையை முன்னிட்டே யாரம்பித்த வித்துணிவைச் சிவநேசர்கள் முற்றுவிப்பார்களென்பது எம்முழுநம்பிக்கை. பேருக்கங்கொண்டு பெருமானருமைகளை வெளியிடக்கங்கணம்பூண்ட வன்பர்களின்றுணையின்றி யாமொன்றுஞ் செய்யவல்லேமல்லேம். எம்மை யிவ்விஷயத்தி லுற்சாகப்படுத்தி யூக்கமுண்டாக்கிய சென்னை இராயப்பேட்டை ஸ்ரீபாலசுப்பிரமணிய பக்தஜனசபையார்க்கும் தூத்துக்குடி சைவசித்தாந்தசபையார்க்கு மெம்மனமுவந்த வந்தனத்தைக் கனிவுடனளிக்கின்றேம்.

முடிவிற் சைவ நன்னெறியாளர்க்கு யாந்தெரிவிப்பதொன்றுண்டு. யாமவடநூல் வல்லேமல்லேம். தென்மொழி தெரிந்தேமல்லேம் சைவசித்தாந்தப் பெருஞ்செல்வர்க்குத் தொண்டுபூண்டொழுகுங்காரணத்தாற் சில கற்றுளேம் சொற்சுவை, பொருட்சுவைகளை யெங்குற்றமமலிந்த வெற்றுரைகளிலெதிர் பாராது சில சொல்லேவே மென வெழுந்தவெஞ் சிறுமையையும் பொறுத்து, பெருமான் விஷயமுமிதிலுண்டெனப் பெருமை படுத்துமாறு பிரார்த்திக்கின்றேம்.

இங்ஙனம்.

சைவசித்தாந்தச்செல்வர்க்கடிமை,

அ. அரங்கஸாமி அய்யர்.

**காழிப்பிரான் கருணை பாலிப்பாராக.**

மெய்கண்டதேவன் றிருவடி வாழ்க.

சுபம்.



॥ ஶிவோம் ॥

ஸ்ரீ ஜ்ஞானஸம்பந்த பரமாசார்யேப்யோ நம: ॥

# சைவாகமப்பிரமாண்யம்.

## நூல்.

திருச்சிற்றம்பலம்

இன்னவுரு வின்னநிற மென்றறிவ தேலரிது நீதிபலவுந்
தன்னவுரு வாமெனமி குத்ததவ நீதியொடு தானமர்விட
முன்னைவினை போமவகையி னுனமுழுதுணர்ந்து முயல்கின்ற முனிவர்
மன்ன விருபோது மருவித்தொழுது சேரும்வயல்வை காவிலே.

ஈசனெ மையாளுடைய வெந்தைபெருமா னிறைவனென்று தனையே
பேசுதல செயாவமணர் புத்தரவர் சிந்தமனையாவவனிடந்
தேசமதெலா மருவிநின்றுபரவித்திகழ நின்ற புகழோன்
வாசமலரானபல தூவியணையும் பதிநல்வை காவிலே.

அத்தகுபொருளுண்டுமில்லையுமென்றுநின்றவர்க்கச்சமா
வொத்தொவ்வாமைமொழிந்துவாதிலழிந்தெழுந்தகவிப்பெயர்ச்
சத்திரத்தின்மடிந்தொடிந்துசனங்கள்வெட்குறநக்கமே
சித்திரக்கெளியேனலேன்றிருவாலவாயரனிற்கவே.

(ஸ்ரீ ஞானசம்பந்தர்)

திருச்சிற்றம்பலம்.

மனிதர்காளிங்கேவம்மொன்றுசொல்லுகேன்
கனிதந்தாற்கனியுண்ணவும்வல்லிரே
புனிதன்பொற்கழலீசனெனுங்கனி
யினிதுசாலவுமேசற்றவர்கட்கே.

வானந்துளங்கிலென்மண்கம்பமாகிலென்மால்வரையுந்
தானந்துளங்கித்தலைதடுமாறிலென்றண்கடலும்
மீனம்படிலென்விரிசுடர்வீழிலென்வேலைநஞ்சுண்
டுனமொன்றில்லாவொருவனுக்காட்பட்டவுத்தமர்க்கே.

திருச்சிற்றம்பலம்.

காணப்படு மிவ்வுலகம் யாது? காண்போனாகிய "யான்" யார்?—என்னு மிவ் வினாக்கள் எனது பிரயத்தன மின்றியே என்

னுள்ளத்தில் நிகழ்கின்றன. இச்சைதுவேஷம்; இன்பம் துன்பம்;
கம். ஆ॰॰தின்
முதலிய வெண்ணங்களென்பானிகழவும், இவ்வெண்ணங்கட் கேறப யாவொழுகியும் வரவும், இவையனைத்து மின்றி என்னுற் சேஷ்டிக் கப்படும் நிலையிலிருக்கின்ற இவ்வுலகம்; அன்றியும் யான் காணும் போதும், கேட்கும்பொதும் சில காக்ஷிகள் சில கேள்விகளோடு மாத்திரம் அமையாமல் யான் காண்கிறேன, கேட்ககிறேன் என்னும ஓர் உள்ளுணாவும் நிகழகின்றது அமமட்டோடு மமையாமற் பின் னும் யான் விருமபினதிகம் காணவும், கேடக்கவும, விரும்பாவிடின் காணமலுங் கேட்காமலிருக்கவு மோர்சுதந்தரமெனக்கு வாய்ததிருக் கின்றதையும யானுணர்கிறேன். இவவாறே நன்றிது தீதிதென்றுண ருஞ் சக்தியும அதறகேற்ப வொழுகவும, வொழுகாமலிருககவு மோா "சுதநதர" மெனக்குண்டென்பதையும. இசசுதநதரமெனக் குண் டெனபதை யுணருஞ்சக்தி விசேஷமொன்றென்பாலமாநதுள தென் பதையும யான் உணர்கின்றேன எனவே "யான" என்பது "சேதன மாகிய" ஒருபொருளென்றும, "எனதெனு மிப்பொருள்" ஜட மாகிய வேறொரு பொருளென றும இசசடப பொருளை யொருவாறு சேட்டிக்கவும் அறியவும ஓர்சிறுதொழிலும சிறறறிவு மிச்சேதனப் பொருளிலமைநதுள தென்பதும் பெற்றும இக்காரணம பறறியே "சைதந்யம் த்ருக்க்ரியாரூபம் ததஸ்த்யாத்மநி ஸர்வதா" சைதன்ய மென்பது அறிவுந தொழிலு முடைததாநதன்மை. அத் தன்மை ஆன்மாவினிடமுள்ள தென்று" திவ்வியாகம முரைததது. இதனுல் அறிவுந தொழிலு மான்மாவினிட மமைநத தன் மைகளென்றும, ஆ॰॰தின்மை ஜடமாகிய அனுத்மாவின் றன் மையென்பதுந தேர்நதாம. இவ்வுண்மையையே, கணுதர், கௌதமர், முதலியவர்கள் தாங்களியற்றிய வைசேஷிக நியாயஸூததிரங் களில் எக்காலத்தவரு மெளிதி லுணருமாறு ஸூத்தரிததுள் ளாாகள். ஸ்ரீ கௌதமருமபிரசஸ்தபாத பாஷியத்தில் ஆத்மாவி னுண்மையைச் செவ்வனே விளக்கி யுள்ளார் "ஆத்மத்வாபிஸம்பந்தாதாத்மா। தஸ்ய ஸௌக்ஷ்ம்யாதப்ரத்யக்ஷத்வே ஸதி கரணை: ஶப்தாத்யுபலப்த்யநுமிதை: ஶ்ரோத்ராதிபி: ஸமதிகம: க்ரியதே। வாஸ்யாதீநாமிவ கரணாநாம் கர்த்ருப்ரயோஜ்யத்வதர்ஶநாத் ஶப்தாதிஷு ப்ரஸித்த்யா ச ப்ரஸாதகோ நுமீயதே, நஶரீரே

னும் ஏககாலத்திலேலாவிதச் சேர்வுமின்றிக் கண் செவிமுதலிய இந்திரியாதிகளின் வியாபாராதிகளினு லொருவாறுணரப்படும். இவ்விந்திரியாதிகள் நியாமகனாகிய ஒரு புருஷனுடைய செய்கைக்குரிய கருவிகளே யென்பதற் கையமின்று. சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரஸம், கந்தம் முதலியவைகள் விஷயீகரிக்கப்படும்போது, அதாவது ஸ்வீகரிக்கப்படும்போது, இவைகளை ஸ்வீகரித்த வொருவனுளன் என்பது சரியான அநுமானமேயன்றி வேறின்று. இவ்வாறு சப்தாதிகளை ஸ்வீகரித்தது சரீரமன்று, இந்திரியமுமன்று, மனதுமன்று; ஏனெனில் அவைகளிடத்தில் "ஸ்வீகரித்தநுபவிக்கிறேன்"மெனனும் அறிவுகாணப்படாமையான். இச்சரீரமோவெனில் உயிரற்ற, அறிவற்ற, சேட்டையற்ற ஜடவணுக்களின் கூட்டம். பானை சட்டியைப் போன்றது. மேலும் சரீரத்திற்கே உண்மையில் அறிவுண்டெனின், மரணத்திற்குப் பிறகு அறிவு நிகழக்காணகிலேம். இந்திரியங்களுக் கறிவுண்டெனில் முதன்முதலில் இவ்விந்திரியங்கள் வேறும்பொருளான சப்தாதிகளை ஸ்வீகரிப்பதற்குரிய கருவிகளே யன்றி வேறில்லை; மேலுமிவ்விந்திரியங்களுக்கூனமுண்டாகில் அறிவின்றி நிற்கவேண்டும்; அதாவது கண், குருடானகாலத்தும், காது செவிடான காலத்தும், வாய் ஊமையானகாலத்தும், மற்று மங்கஹீனமுண்டானகாலத்து மறிவு நிகழாமலிருக்கவேண்டும். அன்றியும் பிணத்திற்கு மிவ் விந்திரியங்களுள வாகையாலப்போதும் அறிவு நிகழவேண்டும். கண் கெட்ட பிறகு காக்ஷிமுடியாதாயினும் முன்னம் கண்டபொருளை நினைத்தல் சாலும்; அன்றியு மிவ் விந்திரியங்களைத் தன்னிஷ்டப்படி யடக்கியாண்டு நினைத்த மாத்திரத்தில் மூடவும் திறக்கவும் சக்தியுடைய வேறொரு வஸ்து வொன்றுளது. இனிமனமாதிகளறிவுடைத்தெனில் அப்போது, ஓரிந்திரியத்தின் வழிச்சென்றபோது, மற்றொரு இந்திரியம் வியாபாரமின்றி நிற்கக்காணகிறோம். ஆகையாலிவைகளை யடக்கியாளும் வஸ்து எதுவோ அதுவே ஆன்மா வெனப்படும். இவ்வாத்மாவானது முதன்முதலில் ஒரு இரதத்தை நடத்தும் சாரதி போன்றது. சாரதி தனது சாமர்த்தியத்தினால் குதிரைகளை யடக்கி யாண்டு தன்னிஷ்டத்தை நடத்துவதுபோல, பிரவிருத்தி நிவிருத்தி (வேண்டுதல், வேண்டாமை) முதலிய விஷயங்களில் தனக்கின்பங் கொடுக்கக்கூடிய வஸ்துக்களி லாசக்தியுண்டாயினதற் கேற்றபடி சரீரேந்திரிய மனதுகளை யேவி யிஷ்டத்தைப் பூர்த்திசெய்து கொள்ளுகிறது. இரண்டாவது கொல்லனொருவன் துருத்திவழியாய்க் காற்றை யுள்வாங்கி அக்நியைவளர்ப்பதுபோன்று ஆன்மா உச்வாச

நிச்வாசாதிகளால் நற்காற்றையுள்வாங்கி, துற்காற்றை வெளிக்கிளப்பி எல்லாத்தேகவுறுப்புகளையும வளரச்செய்கிறது. மூன்றாவது, விநோதியொருவன் ஸூத்திரங்களி (கயிறுகளி)னாற் பதுமைகளை யாட்டுவிப்பதுபோல இமைத்தல் முதலிய எல்லாவியாபாரங்களிலும் நரமபுமுதலியவைகளைச் சரிவரநடாத்துகின்றது. நான்காவது, சில்பியொருவன்உள்ள சிலகருவிகளைக்கொண்டு அப்போதைக்கப்போது வீட்டைப் பழுது பார்த்துவருவதுபோல் ஆன்மா தேகத்தை வளர்த்துப் பழுதுபார்தது வருகின்றது. ஐந்தாவது, ஒரு சிறுகுழந்தை சிலபூச்சியையெடுதது மூலைக்கு மூலையாய்க கொண்டுபோய் விளையாடுவதுபோல ஆன்மா ஜாக்கிரசொபபன சுழுததியாதிகளிற் கருவியாதிகளை யொடுக்கியும் விரித்தும வருகின்றது. ஆறாவது, ஒரு அதிகாரி உயர்நத மேடையிலுடகாாநதுகொண்டு வீட்டின் ஜநநலகளின் வழியாக வெளியில்நடககிறவைகளைக கவனிபபதுபோல ஆன்மா இவையனைத்திற்குஞ் சாக்ஷியாய் நின்றுகாண்கின்றது. ஆகவேயாத்மா சரீரத்துடனொன்றியும், சரீரத்திற்கந்தர்யாமியாய்நின்றும், சரீரத்திற்கதீதமாய் சாக்ஷியாய் நின்றும எல்லாததன்மைகளையு மொருங்கே கொண்டு விளங்குகின்றது. ஒரு பழமொன்றைக் கண்ணாற் கண்டபோது, அதனுருவம் நிறம்முதலியவைகளைக் கண்டதுமாத்திரமன்று. அவ்வித பழத்தை முன்னாநுநதியிருபபின் அதனது ருசியும் மனதிற்குக் கொண்டுவரபபடுகின்றது. உடனே நாவில் ரஸமூறுகின்றது. இஃதான்மாவின் செய்கை. இவ்வாறே எவைகளிலும் இச்சை, சுகதுக்கவுணர்வு, பிரயத்னம், தர்மாதர்ம விவேசனம, புண்யபாபவிவேகம், எண், பரிமாணமுதலிய அளவைகளை யுணர்தல், "இருக்கிறோமென்னுமுணாச்சி," விருபபு வெறுபபுகளைக்கொண்டு ஒன்றுதல் பிரிதல, அன்புமருளுங்கொண்டு உயிர்க்கிரங்கல், இன்பதுன்பாதிகளை நுகர்தல் முதலியனயாவும ஆத்மாவின் குணங்களேயன்றிப் பிறிதொன்றின் குணமல்ல.

இனிபபூதவணுக்களின் சேர்க்கையினாலுண்டாவதே அறிவென்னுஞ் சாராரைநோக்கிச் சிவாகமங்கள் கூறுவது யாதெனின், அப்படியாயின் அப்போதைக்கப்போது மாததிரம ஓர் வெளிச்சம்போன்று அறிவுண்டாகவேண்டுமேயன்றி, சென்றகாலங்களில்நிகழ்நதவைக பற்றிய நினைவுண்டாக ஏதுவேயில்லை. இப்படி வெகுநாளைக்கு முன்னுண்டான வியாபாராதிகளைப் பிரயத்தனததுடன் கூாந்துயோஜித்து நினைவுக்குக் கொண்டுவந்து பிரவர்த்திதது பிரகாசிப்பதால், காயத்திற்கு வேறான வொருவனுளன்" என்று மிருகேந்திரம்கூறுகின்றது.

" [illegible]
[illegible] "

ஆகமோபப்பிரமாணமாகிய வாயுசங்கிதையும் பின்வரும் வினவிடைகளையெடுத்து விளக்கிநின்றது

[illegible]

புத்தி இந்திரியம், சரீரம்இவைகளுக்குத் தனியாக ஆன்மாவென விளிக்கப்பட்ட ஒருவஸ்து எவ்வாறு கொள்ளப்படும் என்று இருடிகள் வினவப்பின்வருமாறுச் சுருக்கமாக விடையளிக்கப்பட்டது.

[illegible] ॥ "

இதன் முக்கிய தாற்பரியம யாதெனின், நிஸ்சயமாகபுத்தி, இந்திரிய சரீரங்களுக்குத் தனியாக ஆத்மா என்று சொல்லப்பட்ட வஸ்துவொன்றுளதே. அதற்கு எது அல்லது காரணம் மிகுந்த கஷ்டமெடுத்துக்கொண்டு விளக்கினும் அறியற்பாலதன்று புத்தி இந்திரியம, சரீராதிகளுக்கு ஆத்மதத்தன்மை ஸத்துக்களால் அங்கீகரிக்கப்படுவதன்று. மறுபடியும் நினைவுக்குக் கொண்டுவருவதாலும், தடையின்றிச் செல்லும் அறிவு அன்பு முதலியவைகளினாலும், தேகாதி சுட்டி யறிவதனாலும், அனுபவித்தவைகளை உணருகின்றவ

ளுய் அறியப்படுமெல்லா விஷயங்களையுமறிபவனும், வேதவேதாந்தங்களில் உள்ளிருந்து செலுத்துபவன் என்று பாடப்படுபவனும், அவனில் (தேகேந்திரியாதிகள்) எல்லாமிருந்தும் (தேகஇந்திரியாதி) எல்லாவற்றிலுமவனிருந்தும் ஒருவனாலும், ஓரிடத்தும், தனியாயறியப்படாதவனாகவும், கண்ணினாலும் மற்ற இந்திரியங்களினாலும் மறியப்படாதவனும், நன்றாக விளக்கப்பட்ட மனதினால் மாத்திரம் ஒருவாறு தெளியக் கூடியவனாகவும், ஆண் பெண் அலி அல்லாதவனும், மேல் கீழ் நடுபக்கமில்லாதவனும், அழியக்கூடிய சரீரத்திலழிவற்றவனும், அநேக முகமாய் அறியப்படுபவனுமுள்ளவன் ஒருவன் உண்டு. அதிகஞ் சொல்லுவதாலென்; புருஷன் தேகத்திற்கு வேறானவன் யாவர் தேகத்திற்கந்நியமாக ஆன்மாவைக் காணவில்லையோ அவர்கள் ஆன்மாவைக் காணாதவர்களே (அவர்கள் மதம் பொய் என்பது பொருள்) என்று விடையிறுத்தார்.

தேகத்திற்கு வேறாக "ஆன்மா"வைப் பார்க்காத மதத்தின் கொள்கையைக் காமிகாகமத்தில் "[illegible] ஹ்ருச் சரீர வ்யதிரேகிண: । [illegible] ॥" என்னும் வாக்கியங்களால் வெளியிடப்பட்டுள்ளது. அன்றியும் ஸுஷுப்தியிலாத்மா இல்லையென்பாரையுமு "ஸுஷுப்தே [illegible] ஸுஷுப்தாவஸ்திதி: [illegible] ஸுஷுப்தஸ்ய ஸுகேநாஹம் [illegible] ॥" "ஸுஷுப்தியில் ஜீவனில்லையெனில், தூங்கிவிழித்ததும் நான் ஸுகமாய்த் தூங்கினேன் என்று ஸுஷுப்தி சுகத்தையனுபவித்தவன் யார்" என்று காமிகம் கூறுகிறது. ஸ்வாராஜ்யஸித்தியெனும் நூலில் பின்வருமாறு காணப்படுகிறது:

"பால்யாதிஷ்வவஸ்தா ஸஹஸ்ரேஷ்வபி [illegible]
[illegible] நிஜஸஹஸா [illegible]
[illegible] ஸௌவ்யா
திஸாக்ஷீ [illegible]
[illegible]"

பால்ய, யௌவன, கௌமார, விருத்தாப்யாதி பலதிசைகளிலும் ஏகரூபனும் அதாவது வேறுபடாதவனும் ஒரு ஆத்மாவே நான்

நான் எனுமுணர்ச்சியுடன் நிற்றலாலே, (அதாவது இவ்வவஸ்த்தைகளோறும் அனுபவித்தவன்றானெனவே யுணர்தலாலே) ஸுஷுப்தியிலுமிவ்வான்மா அனுபவியாய் நிற்றலாலனுமான்மா அறிஞன்

"யுவா த்ராந் ஊர்வாணம் விய தீதவ தரோஜாத்ரஸ்த்ரீ திவ்ய வீதி ।
வராஜோநைக்யம் ஸுஷுப்தௌ நிமேஷ திவ்ய ஜாநந்த ஸம்விஷ
வேந ஜவ்வ த்ராயாநநக ப்ரத்யேதி ஜகதிவிதீந வஸ்வ ரோவெஜிஹாஸா ।
யஸ்வஸ்த்ராஸ்ஸனர்ப்தே திவஸ்வஹய திதர்த்ஸௌவந்தாஸ்ஸவந்தா ॥"

"எப்போது மிருப்போமென்று விரும்புவதால் மாறுதல்களைக் கண்டு கடந்து நிற்குமான்மா சுகரூபி" இன்னும் விளக்கப்புகின், ஸ்தூல திருஷ்டியால் சமையலறை, ஸ்நாநசாலை, சயனசாலை, பூஜாஸ்தானம், முதலிய பலவித விடுதிகளமைக்கப்பெற்ற ஒரு விசித்திர கிரகத்தைக் கண்டதும் இக்கிரகத்தில் வசித்து, அதை அனுபவித்துப் பாதுகாத்து வரும் கிரகஸ்தனொருவனுளனென்றும், அக்கிரகம் வேறு அதை அனுபவிக்கும் கிரகஸ்தன் வேறென்றும், அக்கிரகஸ்தனது போஜனம், ஸ்நாநம், சயனம் முதலிய வியாபாரத்திற்காகவே அக்கிரகத்தில் அந்தந்த விடுதிகளமைக்கப்பட்டனவென்றும் எவ்வாறறிகிறோமோ அவ்வாறே பல்வேறுதொழில்களுக்குரிய கருவி கரணாதிகளமைக்கப்பெற்ற இச்சரீரத்தைத் தாங்கிய சேதனன் வேறென்றும், சரீரம் வேறென்றும் இச்சரீரத்திற்றங்கிய சேதனனுடைய அனுபவத்திற்கே இப்பல்வேறு இந்திரியங்களும் கரணங்களும், மனோவியாபாரங்களுமமைக்கப்பட்டிருக்கின்றனவென்றும் அறிந்துகொள்கிறோம். இவ்வுண்மையையே "ஏஷ ஹி த்ரஷ்டா ஸ்ப்ரஷ்டா ச்ரோதா க்ராதா । ரஸயிதா, மந்தா, போத்தா கர்த்தா விஜ்ஞாநாத்மா புருஷ:" புருஷனாகிய இவ்வாத்மா கண்ணினால் காண்பவன், "சாமத்தினால் ஸ்பர்சிப்பவன், காதினால் கேட்பவன், மூக்கினால் நுகர்பவன், நாக்கினால் ருசிப்பவன், மனதினாலெண்ணுபவன், புத்தியினாலறிபவன், அவயவங்களினால் செய்பவன்," என்று பிரசிநோபநிஷத்தம் கூறிற்று. இவ்வாறே ஒவ்வொரு மனிதனிடத்தும் தான்றான் செய்யுங் கிருத்தியங்களுக்குத் தான்றானே "உத்தரவாதி" (Responsible Agent) எனுமோர் அகவுணர்ச்சியமைந்துளதென்பது கண்கூடு.

ஆன்மாவொருவனுண்டென்றுணர்ந்தோம். அனான்மாவாகிய விச்சடங்கள் இவ்வான்மாவிற்குக் கருவிகரணங்களாயமைந்தமையு

முணர்ந்தோம். இனி இவ்வாறேனமைந்தது? யாரமைத்தார்" எனும் வினாக்களிதன்மேலுண்டு. ஏனமைந்ததென்னு மிவ்வினாவிற்கு விடை, இவையமையாமலிருந்தவமயத்தையா முற்று நோக்கின் வெளியாகும். அவ்வமயஞ்சரீராதிகளைப் பெற்றபின்னா கிட்டுவதரிதாயினும் அதற்குரிகொனச் சொல்லத்தகுந்த வமயமிங்குண்டு அது சுழுப்தியேயாம். சுழுப்தியில் ஞானேந்திரிய கர்மேந்திரியங்களும், ஒருவாறந்தக்கரணங்களும் சேவலை செய்யவில்லையென்பது நாமுணர்வோம். "[illegible] ஸ்வப்ந [illegible] ஷுப்தி [illegible]" என்றபடி மூன்றுமறியாதிருந்த வவசரமேயது. அவ்வவசரத்தில் ஆத்மாவிற்கிருந்த துணைக்கருவிகளில்லை. துணைக்கருவிகளில்லாததினால் அறிவின்றியும் செயலின்றியுங்கிடந்தது. இவ்வாறறிவற்றுச்செயலற்றுக்கிடந்தவான்மாவிற்கு, அந்தக்கரணங்கள் சேர்ந்ததும் ஸ்வப்நாவஸ்தையுண்டாகிறது. அப்போது ஏதோசிலவற்றையுணர்கின்றது. இந்திரியங்களுடைய சேர்க்கையையுமடைந்தபோது, அதாவது ஜாக்கிராவஸ்தையையடைந்தபோது ஆன்மாவிற்குஅறிவுசெயல்கள் விளங்கிடக்காண்கிறோம். இதனால் கருவிகளாகுதிகளின் சேர்க்கையால் நாமடைந்த பிரயோசனமின்னதென ஒருவாறறிகிறோம்.

ஆன்மாதம ஸ்வரூபமாகிய இச்சாஞானக் கிரியைகள் வெளிப்படும் பொருட்டென்று நாம் அறியலாம். ஆன்மாதனது நிலையில் நிற்கும்போது அதனது இச்சை ஞானக்கிரியைகள் விளங்காமலிருந்தமையும் அந்தக்கரண ஞானேந்திரிய கர்மேந்திரியங்களின் துணையைக்கொண்டு அவைகள் விளங்கினமையும் பெறற்கும் "ஐஶ்வர்யாபேக்ஷயா [illegible] க்ஷணம் । [illegible] காரணஸா பேக்ஷவா [illegible] பவபந்தந: ॥" எனும் பௌஷ்கராகம வசனம் விளங்கும். "ஆத்தயக்ஷணம்" என்பது சாதாரணப் பொருளறிதலையுற்று மாத்திரங் கூறியதன்று; மற்று "அறம்பொருளின்பம்வீடென்னும்" புருஷார்த்தங்களை அறிதலையுங்குறிக்கும். இச்சாஞானக்கிரியைகள் சைதன்ய தர்மங்களாயினும் இவை விளங்காமைக்குக் காரணமவைகளை விளங்காமற் பண்ணுந் "தடை" யொன்றிருப்பதனாலென்க "ஸர்வஜ்ஞாஸர்வ கர்த்ருத்வம் வ்ரீயதே" என்ற வாக்கியத்தின்படி தடையொன்றினாலேயே அவை விளங்காமை வெளியாகும். இதனால் "திரோஹிதோஹி ஸாயேஷு நவாண: ஸம்வ்ருததே" மறைப்பொன்றினால்

மறைவுண்டுயிர் செய்கையின்றிக்கடந்தது என்று பௌஷ்கரமும், "அவ்யாபாரம் அவ்யாபிதா [illegible]" மலத்திறை தடையுற்ற ஞானக்கிரியைகளை யுடைத்தாதலால் அதைச்சேதிக்கும் பொருட்டே அஞ்சவஸ்தைகளென்று ரௌரவாகமமும், "[illegible]" என்று செய்கையற்று, அறிவற்றுக் கிடந்தமையினால் இவ்வான்மா "போத்தியனாகவும் (எழுப்பப்படவேண்டியவனாகவும்) சோதியனாகவும்" (சுத்திசெய்யத்தக்கவனாகவும்) இருக்கின்றான் என்னும் "[illegible]" என்ற வாக்கியத்தின்படி மலமென்னுந் நித்திரையில் விசேஷமாக மூடத்தன்மை கொண்டு அறிவின்றிக் கிடத்தலால் இவ்வான்மா "மலநித்திரையினின்று எழுப்பப்படவேண்டிய நிலையிலிருக்கின்றது" இதனாற் பெறப்பட்டது யாதெனில் கருவிகரணங்களையாவும் ஆன்மாவின் அறிவை மறைத்த மலப்பிணியை யகற்றுங் கருவிகளாகும் மலத்தைச் சேதிப்பதனால் ஆன்மாவின் அறிவிச்சை செயல்கள் தடையின்றி பிரகாசிக்கும். இவ்வாறு பிரகாசிப்பதும் ஆன்மா புருஷார்த்தங்களை புணர்வதற்கேயாம் புருஷார்த்தங்களை புணர்தலாவது நன்றிது தீதிதென்றுணர்தலும் அதற்கேற்ப நன்னெறி கைப்பற்றியுய்ப்பும் வழி தேடுவதுமே.

எம்மையே எமக்களித்த விபேருபகாரம் யாராலேற்பட்டது அறிவற்றுச் செயலற்றுக் கிடந்த அறிவுஞ் செயலு மெழுப்பப்பட வேண்டிய நிலையிலிருந்தயானே செய்துகொண்டேனென்பதற்கு வழியின்று. எல்லாநலங்களுமமையப்பெற்ற விதத்தன்மையில் அதாவது மானிடஜன்மத்தில் எனக்கமைந்த அங்கஹீனங்களையும் அறிவீனங்களையும் மாற்றிக்கொள்ள வகையறியாதபோதானே அறிவற்றுச்செயலற்றுக் கிடந்த பந்த வவஸ்தையில் அறிவுஞ் செயலுமுண்டாக்கிக்கொள்ளும் வகையறிந்து தேடவல்லேன்! மற்று விகாரித்துத்தொழிற்படுந் தன்மையிலிருக்கும் ஜடமிதையுண்டாக்காது. அன்று காந்தத்தின் சந்நிதியில் இரும்பு சேஷ்டிப்பதுபோல் சேதன ஆன்மாவின் ஸந்நிதியில் அசேதனந் தொழிற்படுமெனில், அறிவுஞ் செயலும் பிரகாசிக்குந் தன்மையிலது பொருந்துமேயன்றி, ஆன்மாவுக்குரிய சிற்றறிவுஞ் சிறுதொழிலும் மாண்டு "சார்ந்ததன்

வண்ணமாதலினால் மலத்துடனிருந்து மலமாகவே நின்று ஸ்வரூபமே கெட்டிருந்த வத்தன்மையிலிது பொருந்துமாறு யாங்ஙனம்? சிறுதொழிலுஞ் சிற்றறிவும் வெளிப்பட்டேவ கருவிகாரணாதிகளின்றுணையை எதிர்பார்த்து நிற்குமிவ்வான்மாவிற்கு அசேதனங்களைத் தொழிற்படுத்து மாற்றலென்னவிருந்தது. இருந்துழி இவ்வவஸ்தைகளைப் பேதாபேதப்படைந்து பிறகே அறிவுஞ்செயலுந் நிகழவேண்டிய வவசரமேனோ? தனுவாதிகளையடைந்து அறிவென்று பிரகாசிக்குமவதாரத்திலும் "பற்றினது பற்றாயழுந்தி" இந்திரியங்களுக்கடிமையாய் நிற்குமித்துதானே, அறிவற்றுச் செயலற்றுக்கிடந்த மூர்ச்சாவஸ்தையில அசேதனத்தைத் தொழிற்படுத்துமாற்றல் வகித்தது? அன்றியும் அதன் சந்நிதியென்பதிருந்தாலன்றோ தொழிற்படும். மலங்குறுக்கேநின்று மறைத்து ஸ்வரூபந் தெரியவொட்டாது தடுக்குமபோது ஸந்நிதியேது? ஸூக்ஷ்மக்கருவிகளாம் சிற்றொளியால் மலமெனுமகல் தகர்ந்தபின்னரன்றோ சந்நிதியுண்டாயிற்று. "இதனால புருஷன ஸந்நிதியில பிரகிருதி தொழிற்படும" எனவும் ஸாங்கியக் கொள்கை இங்கு பொருந்தாதென்க. தநுகரணாதிகளைப் பெற்றபின்னர், ரக்தோட்டம், உச்வாசநிச்வாசம், நிமேஷோன்மேஷம், ஜீரணஞ்செய்தல் முதலிய பலதொழில்கள் சேதனவான்மாவின் சந்நிதியில தொழிற்படுமென்பது உண்மையே ஆன்மா புருஷத்தன்மையையடைந்து புருஷனான பிறகன்றோ பிரகிருதி யதன்ஸந்நிதியிற் தொழிற்படும. புருஷத்தன்மையையடைவதற்குமுந்திச் சில ஸூக்ஷ்மதத்துவங்களுடன் சேர்ந்தல்லவோ புருஷனாகிறான். இதனாலான்மாவுந்தானே ஒருவிதப்பிரயத்தனமுஞ் செய்துகொள்ள சக்தியற்றிருந்தது. ஜடத்திற்கறிவே கிடையாது. அப்போது ஆன்மாவினுடைய இச்சாஞானக்கிரியைகள உள்ளவாறு பிரகாசிக்குமபடி தத்துவங்களையுடன்கூட்டிய பேருபகாரம புரிந்தவன் யார்?

எவனொருவனெனக்குப் புறம்பே பல்லாயிரங்கோடி மைலகளுக்கப்பாலந்த ராகாயத்திற்சுற்றிச் சுழன்றுவருமிவ்வண்ட கோடிகளையுண்டுபண்ணியவனோ அவனேதான் இத்தத்துவங்களை அறிவற்றுச் செயலற்றுக்கிடந்த வான்மாவுடன் கூட்டி அறிவையுஞ் செயலையுந் நிகழுமாறு கருணைபுரிந்திருக்கவேண்டும். எவனொருவன் சூரியன், சந்திரன், பூமி, மற்றைய கடல், மலைமுதலியவைகளை யுண்டுபண்ணினானோ அவனே தானென்னை யெனக்களித்திருக்கவேண்டும். அப்

ளனோ?

கேவலம அனுமானப்பிரமாணத்தாலேயே பற்பல பௌதிக சட்டதிட்டங்களை "இபபடித்தானிருக்கவேண்டும்" "அப்படித தானிருக்கவேண்டும்" என்று நம்பும் நவீன வானசாஸ்திரியொருவர் தமது தூரதிருஷ்டிக்கண்ணாடியா லாகாயத்தைத்துறுவித்துறுவிப் பார்ததும் கடவுளைக் காணவில்லையென்றாராம்! பௌதிக சாஸ்திர ஞானத்திற்கும் முக்கியமான அனுமானபபிரமாணத்தை யெடுத்தாண் டிடின் கடவுளை நிஸ்சயஞ்செய்ய வருமென்றுணர்ந்தே பிரத்தியக்ஷப் பிரமாணத்தாற கடவுளை யில்லையென்று சாதிக்க முநதினர் போலும்! அனுமானப் பிரமாணம் நிஸ்சயமாக "ஈசுவரன்" ஒருவனுளன் என் பதைதத தீர்மானிக்க உபயோகமாகுமென்பதை நியாய வைசேஷிகாதி ஸூத்திரங்களையியற்றிய கௌதம கணாதாதிமகரிஷிகள செவவிதி னுணர்த்தியருளினா. "அனுமானபபிரமாணம்" இறைவனில்லை யெனபதறகு ஓர் எட்டுணையும பிரயோஜனப்படாது. ஆகையால் முற் றிலுமனுமானப பிரமாணததையே யெடுததிசைப்பதிலும் வேறு வழிகளினுலிவ்விஷயத்தையுற்று நோக்குவதுந தகுதியென்றெண்ணி யவ்வழியையும் பற்றுவேமாயினேம.

ஒவ்வொருகாரியத்தை யியற்றும்போதும யானிரண்டுவித தர் மங்கள் அல்லது தன்மைகளைககொண்டே யியற்றுகின்றேன். ஒன்று உணர்ச்சி (Feeling) மற்றொன்று ஊகம (Reason). இங்கு உணர்ச்சி யென்பது அன்பின் றன்மையென்றும் ஊகமென்பதறிவின் நிகழ்ச்சி யென்றுமோர்க இவ்வுணாச்சியே யொன்றிலாஸக்தியை யுண்டாக்கு வது. ஊகமென்பததனைப்பற்றி யாலோசிப்பது "உணர்ச்சி"யின றேலொன்றிலு மாஸக்தியெனக் குண்டாகாது. இவ்வாறே "யூக" மின்றேல் பல வேறுஉணர்ச்சிகள் அல்லது ஆஸக்திகளில் விழுந்து மானிக்க முடியாது திகைககவேண்டும். உணர்ச்சியென்பது மன் னுத்மா பற்றும குணமும, ஊகமென்பது பறறி யதைததீர்மானிக்குங் குணமுமாம். இவ்விரண்டிலு மாஸக்தி அல்லது உணர்ச்சியே முநதிய தாகும். யானேரிடத்தைவிட்டு வேறோரிடத்திற்கேகவேண்டுமென் றெனக் குணர்ச்சி அல்லது ஆஸக்தி முன்னருண்டாகி அவ்வா றேகுவது சரிதானென்று ஊகம் பின்னர் ஒபபி, அதற்குறிய வழி முதலியவைகளைப்பறறி யுற்றுநோக்கும். ஒவ்வொரு காரியத்திலு மிவ்விரண்டின்பிரேரணையின்றி யானொன்றும் நடத்துவதில்லை. இனி "ஈச்வர" விசாரத்தில் இவைமுறறுப் பெறுகின்றனவோ வென் பதைவிசாரிப்பாம். வெறுமூகமேயென்னை ஈச்வரவிசாரணையி விழுத்த தன்று. எம்முணர்ச்சி ஈச்வரவிஷயத்திற்ப ற்றியபின்னரே, எம்மூக

மதையங்கீகரித்தது. எம்முணர்ச்சி "ஈச்வரவிஷயத்தைப்" பற்றியதுண்டோவெனின், கூறுதும். முதல்முதலில் "யாமிருக்கிறோமென்று தர்க்கித்துப்பார்த்துத் தீர்மானித்தபிறகா யாமிருக்கிறோமென்று கொள்ளுகிறோம். அன்று. யானிருக்கிறேனென்று முதலில் யானுணர்கிறேன். பின்னர் அவ்வுணர்சசி வழியிலேயேசென்று யென்னூகமுமொப்பியது. எனவே "யானொருவனுண்டு" என்று இருவகையாலும் ஸித்தித்தது. என்னுணர்ச்சிக்கு ஊகம் மாறுபடினுன்றுஞ் சித்தியாது. இவ்வாறென்னுணர்ச்சி காணப்படாக் கடவுளைப்பற்றியதா ?

சிலருரைப்பதாவது : "ஆதிகாலத்தில் நாகரீகங் குறைவாயிருந்தகாலத்தில் இடிமுழக்கதனைக்கேட்ட வொரு அறிவீனன் பயந்து யாரோவொருவன் றன்னைக்கொலல யத்தனித்து அவ்விடிமுழக்கத்தை யுண்டுபண்ணுகிறான் என்று நினைத்துத் தன்னைக் கொல்லாவண்ணம் பயந்து வேண்டினான். இதுதானீச்சவரக்கொள்கைக்குக் காரணம்". இதையே வைத்துக்கொள்வோம். இடியே இடிக்கட்டும். இதனாற் கானாத வேறொருவனுடைய வெண்ணமேன் புதிக்கவேண்டும். இடியை இடியென்றுணரட்டுமே. அல்லது பெருஞ்சப்தமென்றுணரட்டுமே. அதற்குப் பயந்து அவன் ஒளிந்து கொள்ளட்டுமே ! "தன்னைக் காப்பாற்றிக்கொள்ளும் பொருட்டு அவ்வாறு செய்தான். தற்காப்பென்பது மிருகாதிகளிடத்து முண்டு" எனின் — "தன்னைக் காப்பாற்றிக்கொள்ளும் பொருட்டு ஓடியொளித்தாற் போதாதோ ; காணாத வேறொருவனைப்பற்றிய நினைவு ஏனுண்டாகவேண்டும். மிருகாதிகள் திடுக்கிட்டுப் பயநதோடுகின்றன. விலங்கு வேறொரு புருஷனைப்பற்றி நினைக்கின்றதா ? நினைந்து வழிபடுகின்றதா ? பின்னர் மாந்தர்க்கேனவ்வித உணர்ச்சி யுண்டாகவேண்டும் ! "தன்னைக் காப்பாற்றிக்கொள்ளும்பொருட் டப்பேருணர்வுண்டாயிற்று" என்பது பெரிய வுண்மைதான். எல்லாமாந்தர்களும எல்லாக்காலத்திலும் கடவுளொருவ ருண்டென்றுணர்ந்து வழிபட்டு வந்தார்கள். பெரும்பான்மையோராவது வழிபட்டு வருகின்றார்களென்பது ஸித்தம். ஏனவ்வாறு கொண்டார்கள் ? பயத்தினாற் கொண்டார்கள்; மூடத்தன்மையினாற் கொண்டார்கள்" என்பது 'ஏன் கொண்டார்கள்' என்பதற்கு விடையாகாது. கேட்டதையோ அல்லது கண்டதையோ கேட்டபடியே அல்லது கண்டபடியே கொள்வதைவிட்டுக் கண்டதிலோ அல்லது கேட்டதிலோ ஒருவரையோ அல்லது பலரையோ நுழைத்து ஏன் பற்றினார்கள் என்பது

தான் கேள்வி. இதற்குத் தகுந்த விடைகாணின், ஈச்வரேச்சை வேண்டியதா, வேண்டாததா, நியாயமா அநியாயமா வென்பதற்கு விடை கண்டுவிடலாம். வேறொருவனைப்பற்றி நினையாமலும், அவ் வேறொருவனை வழிபடாமலுமுள்ள விலங்குகளைக் குறுக்கே கொண்டுவந்து போடுவது சரியன்று. பயத்தினாற் சிலர் பற்றியிருப் பின், வேறு சிலர் அற்புதவானந்தக் காக்ஷியையும், அழகையும் பெரு மையையுங் கண்டு மனங்கரைந்தன்பினாற் பற்றியிருக்கலாம். பயந்து ஓடித்தன் தாயினது முழந்தாளைப் பற்றுவதுமுண்டு. ஆநந்தத் தாலோடி கட்டித் தாயைத்தழுவி சந்தோஷிப்பதுமுண்டு. பயத்தி லிருந்து காப்பாற்றுந் தாயே ஆநந்தத்திற்கு முறைவிடம். பயங் காரணமாயிலென்? - அன்பு காரணமாயிலென? புகுமிடம் வேறொரு காணுதகடவுளென்றேன் கொண்டார்கள் என்பது தானுரைக்கத் தக்கது.

இனியுண்மையாதெனின், "தன்னுண்மை தலைப்பட்டவுடன், அதாவது தானிருக்கிறேமென்னுஞ் சிறிது ஞானமுண்டானவுடன் பரிதிருச்யமான விபிரபஞ்சம் தோன்றுகின்ற காரணத்தாற் றன்னை யறியாமலே ஆன்மாவின்கண்ணோர் நிகழ்ச்சி அதாவது ஒரு கேழ்வி யுண்டாகின்றது. இந்நிகழ்ச்சியே கடவுளைப் பற்றிய வுணர்ச்சியா கும். இன்றேல வியப்புண்டாகக் காரணமில்லை வியப்புண்டாகு மிடத்தில் ஒருவனது சாமர்த்தியங்கொள்ளப்படும். இவ்வியப்பு அல லது உணர்ச்சிதான் "கடவுளைப்பற்றிய உணர்ச்சி". இவ்வுணர்ச் சியே வூகத்தினாற்றிருடீகரித்துப் பலபல சமயங்களாய் நிலவியது. இதுதானுண்மை. தற்காலத்தில் மாந்தரிற் பலரிக்கேள்விகளைவாய் விட்டுக்கேட்காவிட்டாலும், மனதிலுணாந்து, அக்கேள்விகளுக்கேற்பபல பலமதங்களைத் தங்கள் பெற்றோர்களும், தேசத்தார்களும் கொண் டிருப்பதால் அவ்வுணர்ச்சிக்கேற்பச் சரேலென்று அவ்வவ்மதங்களைச் சிரமமின்றி யப்படியப்படியேபற்றி யொழுகுகின்றனர். இக்கேள் வியைக்கேட்டா, மாந்தரெல்லோரும் மதங்களைபபற்றுகின்றனர் என்று சந்தேகிக்கவேண்டாம். தனக்குமிவ்வித பிரபஞ்சத்திற்கு முள்ள ஒருவிதத் தொடர்பை யுணர்ந்தபின்னரே பற்றுகின்றனர் என் பது ஸத்தியம்.

இவ்வுணர்ச்சியின் சொரூபத்தை யொருவாறாகிப்பாம். இவ் வுணர்ச்சி எங்கிருந்துண்டாயதெனில் "ஆத்ம சொரூபத்தினின்று மென்பது" ஸத்தியம். கேவல மிருகத்தன்மையாகிய உண்பது உறங் குவதினின்றுந் தாண்டி அறிவறியுந்தன்மை யடைந்தவுடனே, ஒவ்

வொரு மாந்தர்க்கு மிவ்வுணர்ச்சி நிகழ்கின்றது. நாஸ்திகர்களுங் கூட எங்கும் நீலநிறமாயிருக்கு மாகாயத்தில் பல்கோடி நக்ஷத்திரங்கள் பிரகாசிக்கும்போதும், பூரணசந்திரன் பிரகாசிக்கும்போது மதனைக் கண்டு ஆ! ஆ!! என்ன அழகிது, என்ன ஆநந்தமிது என்று எக்காரணத்தைக்கொண்டு தமமைமறந்து யாதுருகி யவ்வானந்தத்தில் அமிழ்கின்றார்களோ அதேவுணர்ச்சிதான் இங்கும் நிகழ்கின்றது. இக்கேள்வியை ஒவ்வொருவனுடைய ஆதமாவுங் கேழ்க்கின்றது. அதற்குவிடையையு மொருவாறுணர்கின்றது. இதற்கு வேதமானது [illegible] ।"—"ஏ! ஸர்வசாமர்த்தியமுடையவனே கன்றுகள் தாய்ப்பசுவைத்தொடாவதுபோல இவ்வுலகத்திற்கீசனான விண்ணிலுறைநின்னை வணங்குவோம" என்றது. இவ்வாக்கியம்கர்மகாண்டத்தின் மந்திரிதிலும், ஞானகாண்டமா முபநிஷத்திலுமுண்டு.

பரிதிருச்யமான இவ்வுலகத்தில ஆரம்பித்தவிடம முடிவிடமென்பனவின்றி எங்கும் பரந்தவிண்ணையும், அதில் நக்ஷத்திரங்கள் பல்லாயிரங்கணக்காய் பிரகாசிக்கவும், சந்திரசூரியர்கள் மனதிற்கெட்டாதபொலிவுடனுமொளியுடனும் பிரகாசிக்கவும, கரையென்பதுதட்டாமல் நீலநிறத்துடன் வெகு கம்பீரமாய்ப் பரவிநின்றமகாசமுத்திரங்கள், உயர்ந்தபனிமூடும் மலைகளிவைகளைக் கண்ணுறும்போது தனதுசிறுமையுமவைகளின் பெருமையுநதோன்ற வுணர்கிறான். ஓரோர்கால் பச்சைப்பசேலெனற பசும்புற்றரைகள்கூட வென்னைமறக்கசசெய்கின்றன. இவ்வற்புதவாநந்தக் காக்ஷியானது தோன்றவே ஓருணாசசியுண்டாகின்றது. இவ்வுணாச்சி அல்லது அகமகிழ்ச்சி அல்லது வியபபு (அதைஎபபேரிட்டழைப்பினுஞ்சரி) என்னை யிறைவனிடந தூண்டுகிறது. அவ்வுணர்ச்சி நிகழுங்காலத்தில் யான் தர்க்கிப்பதின்று. காரணந்தேடுவதின்று ஊகிப்பதின்று. குழந்தைதாயைபபற்றுவது தர்க்கித்தா? காரணமுணாந்தபின்னரா? இவ்வற்புதவாநந்தத்தையென்று மறுபவிபபாய் என்றகாலத்திலெனக்காநந்தமும். "நீசாவாய்" என்று கூறுமபோது எனக்குத்துக்கமுமுண்டாகின்றது. எது எனக்குத்துக்கத்தை விளைப்பதோ அது வெனக்கு ருசிக்காததாய், எனக்குப் பொருநதாததாய், அதாவது என்னியற்கைக்கு விரோதமுள்ளதாய், அதாவது பொய்யாய் இன்மையாய் ஒழியும். எதுவெனக்குப் பொருந்தியதோ அதுவுண்மையாகும். அதுவே என்னியற்கைக்குப் பொருந்தியதாகும். அக்கா

லத்தில் "வாலாக்ரஶதபாகஸ்ய ஶததா கல்பிதஸ்ய ச । பாகோ ஜீவ: ஸ விஜ்ஞேய: ஸ சாநந்த்யாய கல்பதே ॥" வெகு சிறுமையாயுள்ள ஜீவன் "ஆநந்த்யாய"— (Eternity) முடிவென்பதின்றி மகிழும் என்ற உபநிஷத்தின் காம்பீர்யந்தலைப்படுகின்றது. இத்தகைய வுணர்ச்சியே ஈச்வரனைப்பற்றுவதாகும்.

உணர்ச்சி சென்றவழியே "யூகமுஞ்செல்லும். உணர்ச்சியின் வழியிற செல்லாத தூகமுமன்று. (அது யாதாயிருக்குமோ அதற்குப் பெயரென்னவோ) உணர்ச்சி சென்றவழியே யூகமுஞ் செல்லுமென்றோம். இனியூகமெவ்வாறு நிர்த்தாரிக்கின்ற தென்பதை யாலோசிப்பாம.

உணர்சசியா லுணர்வது போலவே அறிவால் ஆலோசிப்பதும் மாநதரிடத்தமைநத சக்திவிசேடமேயாம. உணர்சசியைப்போலவே யிதுவுமியறகையிறபொருநதிய தொன்று. விலங்குகட்கும் மாநதர்கட்குமுள்ள வேற்றுமையாவும் இவ்வூகமெனுஞ் சக்திவிசேஷமொன்று மாநதரிடத்தமைந்த காரணத்தாலேயேயாம். எந்தவிலங்கு புண்ணியபாப மினைத்தெனவுணருமா? எநதவிலங்கு நன்றிது தீதிதென்று உணருமா? எந்த விலங்கு அரசுரிமை நாடும? எநத உயர்தர விலங்கு "நீதி நூறறெரிக்கும"? விலங்குகட்கெனச் சட்டங்களுண்டோ? நியாய சாஸ்திரங்களுண்டா? மற்றெதுதா னுண்டு? இப்பகுத்தறிவென்னும் பண்பால சிருஷ்டிவர்க்கததுற றலைமையெய்தினவனுக "மனிதனன்றோ" பிரகாசிக்கிறான். இங்ஙனமஊன்றி விசாரிக்குஞ் சக்தி மானுடரித்துச் செயறகையாலமாநததா? இயறகையிலமர்நததா? எனின் இயற்கையிலமர்நததைச் செயற்கையில் விருத்திசெய்பலாமன்றி, இயற்கையிலமையாததை விருத்திசெய்யமுடியாது. நூற்களும், கல்விச்சாலைகளு மியற்கையிலூன்றி விசாரிக்குங்குணமுள்ள மாந்தர்க்கேயன்றி மற்றைவிலங்குகடகல்ல கணிதசாஸ்திரம், வானசாஸ்திரம் முதலிய அற்புதஅறிவுபயிற்சி நூற்களில் வல்லவன் மானுடனன்றோ? மாநதர்க்குஇயற்கையிலமைந்த அவ்வற்புத வூகசக்தியால், மாந்தர் செய்வது யாதெனின் "இது என்ன, இது ஏன், இது எற்றுக்கு, இதென்னசெய்யும்;" என்பனவாதி வினுக்களை வினவுகிறான். இப்படி யொவ்வொன்றையு மூன்றி விசாரிக்குங்காரணத்தினலேயே இவனையுண்டாக்கிய ஸர்வசக்தியானது உண்பன, உடுப்பன முதலிய எல்லாவிஷயத்திலுமிவனை யுழைத்தே அதாவதறிவை யுபயோகித்தே விர்த்திக்கும்படி விட்டு ஊகமில்லா விலங்கு

களுக்குப் புல்லையுந் தழையையும் உணவாக்கி அவைகளின் மடித்த தோலகளையே உடையாக்கிவிட்டது கண்டீர். அது மாத்திரமா. இப்பௌதிகத்தன்மையையடக்கி, அறிவையே ஆதாரமாகக்கொண்டு அறிவுநூல்களையே நினைக்கவும்பேசவும் வல்லவனாயிருக்கிறான். அறிவாற்பெற்றபய னறிவுநூற் பழகுவதன்றி வேறுயாதென்பேம்! "அறிவறிவதறிவே" என்றார்பிறரும.

இத்தகைய ஆழ்ந்து அறியும் கூர்நது யோசிக்குங் குணத்தாலொவ்வொருமனிதனும் "யாமார் எமக்கிவ்வுடலேது" என்ற பெருங் கேள்விகளிலிறங்குகிறான். இப்படி யிறஙகுவதினாலேயே அறிவினாலிவைகளைச் சோதித்து முடிவுகாணலாமென்பது ஸித்திக்கும். அறிவுடை யொருவனுக்கு அறிவின் பயிற்சி, அறிவின் முயற்சியினாலடையத்தக்க வின்பமே வின்பமாகும. இவவின்பததிறகல்லவா அறிஞர்களும அன்பர்களும் பாடுபட்டனா.

இவ்வா றெத்தன்மையிலுங் காரியத்திற்குக் காரணங்கண்டு பிடிக்க வல்லஇவன் இப்பிரபஞசத்தையுநதன்னையுங்கண்டு காரணந் தேடாதொழிவானோ! அவவாறு "காரியத்தைக்கண்டு காரணத்தைத் தேடுமேறிவு இவன்பாலமையாதிருந்தாலன்றோ" இவனவ்வாறு கேட்பதினின்று மொழிவான. அபபோதிவனை யிநத பிரயோசனமற்ற அலுவலினின்று ஒழிநது நில்லென்றொருவரு முரைக்கவேண்டுவதில்லையே!!! ஏன்? அநதஞானமே யில்லாதபோது யாரெடுத்துரைக்கநேரும்!

ஆழ்நது யோஜிக்குமறிவின லிபபிரபஞ்சமான காரியத்தைக் கண்டதும் காரணமுண்டோவெனச சோதிக்கின்றான். சோதிக்கும் போது பலவுண்மைகளையறிகிறான். முதலமுதலில தேகத்தையே பார்ப்போம்: கண்ணொன்றை யெடுத்துக்கொள்வோம். இக்கண்ணினமைப்பைப் பாருங்கள். படமபிடிபபவனை (Photographer) க்கேட்டால் உருவமமைவதறகு வேண்டியவைகளை யெடுத்துரைப்பன். படம்பிடிப்பவன் படம்பிடிக்கும் மூடுபெட்டியொன்றையும், ஒளிகளைபிடிக்கும் கண்ணாடிகளையும்,மற்றுமுள்ளகருவிகளைக்கொண்டு தூரத்திலோ சமீபத்திலோஒருவாறு திட்டஞ்செய்து உருவமெடுக்கிறான். இவ்வாறு கண்ணில் ஒளிகளைச் சிதறவிடாது வாங்கும் இருபக்கமு மூடிகளையொத்த விமைதோல்களைக்கொண்ட கண்ணாகியபெட்டியும்அதிலடங்கிய ஒளிகளை யேற்கும் வளைந்தகண்ணாடி (Chrystalline lens) போன்ற (Aqueous humour,) எனப்பட்ட ஒரு மினி மினிப்புச் சதையும், (Vitreous humour) என்று சொல்லப்பட்ட உருவமைக்

கும் கண்ணுடி (Refracting lens) யும் Retina என்னும் விழி Ground glass என்று சொல்லத்தகுந்த ஒருவகைக் கண்ணுடி முதலியவைகளுடன் இருபக்கங்களிலுள்ள கண்ணின் போர்வைகள் தூரத்திலிருக்கும் வஸ்துக்களையும், சமீபத்திலுள்ள வஸ்துக்களையும் காண்பதற்குத்தக்கவாறு விரிந்தும் குவிந்தும் வர்த்திக்கின்றது. உள்ளிருக்குமாத்மாவே படம்பிடிப்பவன (Photographer) ஒரு உருவமமைவதற்குப் படம் பிடிப்பவன் எவ்வளவு கருவிகளைக்கொண்டிருக்கிறன். இவ்வாறே ஓசையைக்கேட்கும் காது மதத்தளத்திற் கமைந்த பூச்சுகளைப்போன்று சில பூச்சுகளையும கொண்டது இப்படியொவ்வொரு இந்திரியங்களும, மற்ற எல்லா வுறுப்புகளும எவ்வளவு திறமையான வேலைப்பாடுட னமைந்திருக்கின்றன. மலையிலருவிகளோடி நதிகளாகி வழிவிட்டுக் கொண்டதைபபோல விவ்வமைப்புக்களைச்சொல்ல முடியுமா. எவ்வளவு முனயோசனையுடனும, கூாந்தபுத்தியுடனும், கார்யாகார்யந்தெரிந்த ஒரு பேரறிவாலிது விளைந்திருக்கவேண்டும். ஆண்பெண்ணமைப்பும் மற்ற கருவிகளினமைப்பும. ஆஹா! இதைவிட வேறு வியபபு என்ன விருக்கின்றது. அந்தோ! இவைகளை எவன் பிரயோஜனத்திற்காக அமைக்கபபட்டன வோ அவனையே யில்லையென்று வேண்டுமென்றே சுழலில வீழ்ந்து மயங்கி மடிகின்றவர் காணப்படாத கடவுளை மறபபது ஆச்சரியமன்று!!!

"The adaptation of means to an end is the mark of Intelligence"

இன்னபடிதான் மியற்றபபட வேண்டுமென்று முன்னுணர்வுடன் அதாவது ஒரு உருவங்காணப்பட வேண்டுமானல இவ்வளவு கருவிகளின்னின்னவழியாயமைக்கபபட வேணடும என்று முன்னுணர்ந்தே யல்லவா எல்லாம் வல்லபேரறிவுள்ள ஓர் சக்தியமைத்திருக்கவேண்டும். இவ்வளவு பேரறிவு நிகழத்தக்க ஓர் அற்புதச் செயலைக்கண்டும் நாமப்பேரறிவை நம்பாவிடின், சமயலறை, ஸ்நாநசாலை, முதலியபல விடுதிகளமைந்த ஒரு கிரகத்தைக்கண்டு, போஜனம், ஸ்நாநம் முதலியவைகளைசசெய்யும் புருஷனுடைய வஸதிக்காகவே, இவைகள் அமைந்ததென்றுணரும்புத்தி எற்றுக்குண்டாயிற்று? அதைப்போலவே ஒருவனதுபார்வை, கேள்வி, நினைப்பு, முதலியவைகளுக்காகவே கருவிகரணங்கள் அமைந்தன. அவன் குடியிருக்கும்பொருட்டே அக்கிரகம் ஒருவனாலமைக்கப்பட்டது போலவே, இவ்விசித்திர வமைப்புள்ள தேகமும் அமைக்கப்பட்டிருத்தல் வேண்டும். ஆயினிவ்வீட்

டைக்கட்டினவனை நான் காண்கிறேனே. இறைவனைக்காணவில்லையே யெனின், காணவில்லையே யென்று மாத்திரங்கூறலாமேயன்றி, காணுததாலில்லையென்று கூறுதல்பொருந்துமோ! காணுவிட்டாலும் இவ்வாறமைத்த சக்தியொன்றுளதுயென்றுநாங்கொள்வோமாணுல் அஃது பேரறிவுடையது, பேராற்றலுடையதுஎன்று நாங்கொள்ளவேண்டும். இப்பிரயோஜனத்துடன் அமைந்த விவ்வமைப்பையும், அப்பிரயோஜனத்தை யடைந்தனுபவிக்கும புருஷனையுங்கண்டும் பிரயோஜனத்தை முன்னுணர்வுடன் புரிந்தவஸ்துவை யில்லையென்றுவது, அல்லது குருட்டுச சக்திகளொன்ரேடொன்று முட்டிக்கொண்டு இவ்விதவமைப்பை நிகழத்தியதென்று கூறுவது நாம்வேண்டுமென்றே கண்ணைமூடிக்கொண்டு ஒரு வஸ்துவைக் காணமாட்டேனென்று கூறுவதை யொக்கும். அவ்வாறுரைப்பது அறிவைப்பெற்றயாமவ்வறிவின் பிரயோஜனத்தை யிழப்பது போலாம்.

இனிக்கடவுளைக் கண்ணுறக் காணவில்லையே என்றவாசங்கையைப்பற்றிச் சிறிதாராய்வாம். ஊன்கண்ணுக்கு விஷயமாகாததெல்லாமில்லையென்று கூறுவதாயின் அப்போது அனேகவஸ்துக்களை நம்பாமலிருக்கவேண்டிவரும். காற்றென்றிருப்பதை நாம் ஏன் நம்பவேண்டும். அஃதோ கண்ணுக்கு விஷயமாகவில்லை ஏன் அஃதிருப்பதாகநம்பவேண்டும். நம்மேல் காற்றடிப்பதை ஸ்பர்சததாலுணரவில்லையோ வெனின், கண்ணுக்கு விஷயமாக வில்லையே? மரமுதலியவைகள் அசைவதைக் கண்டோமேயெனின் காற்றினது காரியமாகமரமசைவதைக்கண்டோம என்பதுண்மையே. ஆனுல் காற்று கண்ணுக்கு விஷயமாகவில்லையே? அதனுல் கண்ணுக்கு விஷயமாகாத காற்றை எவ்வாறு நாடுவது? இனியாம வீணை வாசிக்கக்கேட்டேம். அதனுலுடலம் புளகாங்கிதமாகிச் சந்தோஷமடைந்தேம. வீணுகானத்தைக் கண்டோமா? அது எமமை இன்பததாழததுவா்னன. ஐம்புலன்களுக்கு விஷயமான சுவையொளியூறேசை நாற்றமென்பவைகளில் ஒன்றுக்கு விஷயமாவது மற்றென்றுக்கு விஷயமாவதில்லை. இதனுல் ரூபமொன்றையே கிரகிக்குங் கண்ணிற்கு வேறு சில விஷயமாகாததினுல் அவையில்லையென்றெவ்வாறு கூறலாம். ஐம்புலன்கள் நிற்க, ஒன்றும் ஒன்றும் இரண்டென்றேன். ஒரு முக்கோணத்தின் மூன்று மூலைகளுஞ் சேர்ந்து சரிமத்தியில் நேராக வெட்டுண்ட இரண்டு கோடுகளினுலாய நான்குமூலை களிலிரண்டு மூலைகளுக்குச் சமானமென்றெண்ணினேன். இஃது ஐம்புலன்களுக்கும் விஷயமாவதில்லை. இவ்வாறே அங்ககணிதம், பீஜகணிதம் மற்றெவ்வகை அளவை

கள் ஆகிய இவைகளுண்மை யென்பதற்குத் தடையென்ன. இஃது கேவலமந்தக் கரணங்களின் வியாபாரம். அன்றியும் நான் ஒருவனைக் காண்கிறேன். காணும்போது அவனுடைய ரூபம் என்கண்ணுக்கும் அவனது சப்தம் காதுக்கும், அவனது ஸ்பர்சம் என் உடலுக்கும் விஷயமாகின்றன. நான் பிறர் எண்ணமறிதல் முதலிய ஸூக்ஷ்ம அறிவுவிஷயங்களிற் பயின்றிருப்பின், அவனது மனோஎண்ணங்களைச் சொல்லவல்லேன். அவ்வாறு சிலர்சொல்லக் கண்டிருக்கிறேன். இதை மனோவியாபாரம் அல்லது அறிவின் வியாபாரமென்னலாம். அவ்வுடலைத்தாங்கிய சேதனனை நான் காண்கிலேன். ஏன் காணவில்லை. இஃதவன் குற்றமுமன்று. என் குற்றமுமன்று. "சேதனன்" கண்ணிற்கு விஷயமாகான் "நைவ வாசா ந மனஸா ப்ராப்தும் ஶக்யோ ந சக்ஷுஷா । அஸ்தீதி ப்³ருவதோऽந்யத்ர கத²ம் தது³பலப்⁴யதே" என்ற வசனப்படி இந்திரியாதிகளுக்கு விஷயமாகாத ஜீவனை எவ்வாறு அவ்விந்திரியாதிகளுக்கு விஷயமாக்குவது. சப்த, ஸ்பர்ச, ரூப, ரஸகந்தாதிகளும் கண், காது, முதலியவைகளும், சேதனாத்மாவுக்கு விஷயமாகும. சேதனாத்மா இவைகளுக்கு விஷயமாகாது. இவ்வாத்மாவே கண்முதலியவைகளுக்கு விஷயமாகாதாயின், பரமாத்மா எவ்விதமாக கண்ணுக்கு விஷயமாவன். "ரூபரூபவிவர்ஜிதாத்மா தஸ்ய ரூபவிவர்ஜித: ஶிவ:"— "காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போற், காணவுளத்தைக்கண்டு காட்டலின்" என்று சிவஞானபோதம போதிக்கின்றது. முழுதும் பார்ப்பவனை முழுதும் அறிபவனை எவ்வாறுஇந்திரியாதிகளுக்கு விஷயமாக்குவது.

"யேநேத³ம் ஸர்வம் விஜாநாதி தம் கேந விஜாநீயாத் விஜ்ஞாதாரமரே கேந விஜாநீயாத் ந த்³ருஷ்டேர் த்³ரஷ்டாரம் பஶ்யே: ந ஶ்ருதே: ஶ்ரோதாரம் ஶ்ருணுயா: ந மதேர் மந்தாரம் மந்வீதா²: ந விஜ்ஞாதேர் விஜ்ஞாதாரம் விஜாநீயா: ஏஷ த ஆத்மா ஸர்வாந்தர:" எவனுலிவைகளை யறிகிறோமோ அவனை எவ்வாறறிகிறது. எல்லாமறிபவனை எவ்வாறறிவது. கண்ணின்காக்ஷியைக் காண்பவனை எவ்வாறு காண்பது. செவியின் கேள்வியை கேட்பவனை எவ்வாறு கேட்பது. மதியின் நினைவை நினைப்பவனை எவ்வாறு நினைப்பது. அறிவின் அறிவை அறிபவனை எவ்வாறு அறிவது. "அவ்வாத்மாவே எல்லாவற்றிலுமுள்ளான்" என்று பிருகதாரணியம் கூறிற்று. இவ்வுண்மையை ஸ்ரீமாணிக்கவாசகசு

"நினைப்ப தாக சிந்தை செல்லு மெல்லை யேய வாக்கினாற்
றினைத்த னையு மாவ தில்லை சொல்ல லாவ கேட்பவே
யனைத்து லகு மாய நின்னை யைம்பு லன்கள் காண்கிலா
வெனைத்தெ னைத்த தெப்பு றத்த தெந்தை பாத மெய்தவே."

என்றுபதேசித்தார்.

பின்னவனை யெவ்வாறுதான் காண்பது? "யத்ஸாக்ஷாதபரோக்ஷாத் ப்ரஹ்ம ய ஆத்மா ஸர்வாந்தரஸ்தம் மே வ்யாசக்ஷ்வ" என்று யாக்ஞ வல்கியமுனிவரை ஸர்வத்திலுமுள்ளிருக்கும் பரமாத்மாவை யருளிச் செய்கவென்று சாக்கிராயணர் கேட்டகாலையில் "ந த்ருஷ்டேர் த்ரஷ்டாரம் பச்யே:" என்று ஆரம்பித்து "ந விஜ்ஞாதேர் விஜ்ஞாதாரம் விஜா நீயா ஏஷ த ஆத்மா ஸர்வாந்தர:" காக்ஷியைக்காணுமொருவனை எப்படிக்காண்பது. அறிவையறியு மறிவுடையானை எவ்வாறு அறி வது - அவன் "ஸர்வாந்தரன்" (எங்குமுள்ளான்) என்று விடை பிறந்தது. இதில் "ஸாக்ஷாத் அபரோக்ஷாத்பிரம்மய ஆத்மா ஸர்வாந் தர:" என்றபகுதியால் ஸர்வாந்தரனுயுள்ள பரமாத்மாவான பரப்பிரமம் அபரோக்ஷத்தாலறியத்தக்கதென்று வெளியாயிற்று. பரோக்ஷஞான மெனில் இந்திரிய துவாரா அறியுமறிவாகும். அபரோக்ஷஞானமெனில் அறிவிலூறுமன்பினுல் (அவ னருள்தன்னை) விழுங்கிக்கொள்ளத் தா னனுபவிப்பது. இதையே "ஸர்வமாத்மைவாபூத் தத்கேந கம் ஜிக்ரேத்"

எ௬

தாரம் அரே கேநவிஜாநீயாத்" என்று "எல்லாமாய்நின்று எல்லா வற்றையும்பார்த்து, அறிந்துநிற்கும் பேறறிவாளனை எவ்வாறறிவது என்றது, உபநிடதம். "ஸர்வமாத்மைவாபூத்" என்றதையே மணி வாசகப்பிரான் "அனைத்துலகு மாயநின்னை யைம்புலன்கள் காண் கிலா" என்று திருவாய்மலர்ந்தார். அபரோக்ஷத்தினாலேயே யறியத் தகுந்தவன் பிரானென்பதை,

"புணர்ப்ப தொக்க வெந்தை யென்னை யாண்டு பூண நோக்கினாய்
புணர்ப்ப தன்றி தென்ற போது நின்னொ டென்னொ டென்னிதாம்
புணர்ப்ப தாக வன்றி தாக வன்புநின் கழற்கணே
புணர்ப்ப தாக வங்க ணாள புங்க மான போகமே."

என்று மாணிக்கவாசகமூர்த்தியே யெடுத்திசைத்தார். "ஸைஷா ஆநந்தஸ்ய மீமாம்ஸா பவதி" என்றும், "ஸுவிரா

க்ஷாவாந்ந: ப்ரத்யக்ஷாதந்யக்ஷா ந்ருவிஷ்ய்தி” என்றும் பெறப் பட்ட திவ்வியாகமவாக்கியங்களால் ஹேதுபதேசாதிகளால் பெறப் படுவது பரோக்ஷமென்றும், “ அன்பினாலவனை யன்புமயமாயிருந் தனுபவிப்ப தபரோக்ஷமென்றும் பெற்றேறும்.

இவ்வுண்மையே சிவஞானபோதத்தில் “ ஸத்ஸந்நிதௌ ஸதஸத் வோ ஸத்ஸந்நிதௌ ஜ்ஞாநம் ஸம்ஸ்ருதிர்யோகேந ஜ்ஞேயம் ரூபம் விதம்பயோ:” “ உணர்உரு அசத்தெனின், உணராது இன்மையின், இருதிறன் அல்லது சிவசத்தாமென, இரண்டுவகை யின் இசைக்குமன் னுலகே” என்று 6-ம் சூத்திரத்திலும் “ஜ்ஞாநத்ருஷ்ட்யா த்ருஷ்டஸம்” “ஊனக்கண் பாசம் உணராப் பதியை - ஞானக் கண்ணிற்சிந்தை நாடி ” என்று 9 - ம் சூத்திரத்திலும் பெறப்பட் டது. இதனுண்மை யாதெனின், காணுமறிவாகிய தானும் காட்டுமறிவாகிய பேறறிவு மத்துவிதமாய்க் கலந்து புணர்ப்பதன்றி தனித்தனியாய் பிரிந்து நிற்பதொன்றன்று. அற்றாயினும் காணு மறிவு காண்பதேயாகும். காட்டுமறிவு காட்டுவதேயாகும். அதா வது, “ ஞாதா ” ஞாதாவே, “ஞேயம” ஞேயமே. இவ்வுண்மையே “பதிம் பாஶாத் பஶுஞ்சைவ தத்க்ஷணாத்ரக்ஷிதாரம் ஜ்ஞாதாரம் ஜ்ஞாநேந தேநைவஜ்ஞாதாரம் ஜ்ஞேயம் ஸம்ஸார: ஜ்ஞாநம் வஸ்து நிஷ்டம் தத் விஶேஷம் தத்” என்றபடி, ஞேய சிவனை ஞாதா வாகிய தன்னி லனனியமா யனுபவிப்பதாகும். தேவிகாலோத்தரத் தில் “ந ஸ்தூலம் ந ஸூக்ஷ்மம் ந ஶூந்யம் ஜகத் ஜகத்காரணம் ஜகத்ரூபம் ஜகந்நாதம்” பாசம்போற் ஸ்தூலமுமன்று, பசுவைப் போற் ஸூக்ஷுமமுமன்று, அன்றிச் சூனியமுமன்று, பின்னர் ஜகத் துக்கெல்லாம் பெரியபந்துவாகிய பதி அறிவொன்றையே உருவாக் கொண்டவன் என்றது. இக்கூற்றையே பின்வரும் வேதவாக்கியங் களும் நிறுத்தும் “நஸந்த்ருஶே திஷ்டதி ரூபமஸ்ய நசக்ஷுஷா பஶ்யதி கஶ்சநைநம் । ஹ்ருதா மநீஷா மநஸாபிக்லுப்தோ ய ஏதம் விதுரம்ருதாஸ்தே பவந்தி ॥ ” இவனதுருவம் கண்ணினுற்காணப்படுவ தன்று. இவனைக் கண்கொண்டு காண்பதின்று. ஹிருதயத்தினல் யாவர் அறிகின்றார்களோ அவர்கள் அமிர்த ராவார்கள். “ஏஷ॥ கோநவிதம் வதிவேதிதம்ந: கோநவர்ண: வர்ணந:

ப்ரைதி யுக்த: । கேநேஷிதாம் வாசமிமாம் வதந்தி சக்ஷு: ஶ்ரோத்ரம் க உ தேவோ யுநக்தி" எவனால் ஏவப்பட்டு மனம் பற்றுகின்றது - எவனாலேவப்பட்டு வாக்குகள் பேசுகின்றன - இவைகளைச் சேர்த்த கடவுள் யாவன்? "ஶ்ரோத்ரஸ்ய ஶ்ரோத்ரம் மநஸோ மநோ யத் வாசோ ஹ வாசம் ஸ உ ப்ராணஸ்ய ப்ராண: சக்ஷுஷ: சக்ஷு:" அவன் கண்ணுக்குக் கண், செவிக்குச் செவி, பிராணனுக்குப் பிராணன். "ந தத்ர சக்ஷுர்கச்சதி ந வாக்கச்சதி॥" அங்கு கண் செல்லாது, வாக்குகள் செல்லாது. "யச்சக்ஷுஷா ந பஶ்யதி யேந சக்ஷூம்ஷி பஶ்யதி । ததேவ ப்ரஹ்ம த்வம் வித்தி நேதம் யதிதமுபாஸதே" (கேநோபநிஷத்) கண்ணினாலெதைக்கண்டாயோ அது பிரமமல்ல, எவனால் கண்காணுமோ அது பிரமம். "த்ருஶ்யதே த்வக்ர்யயா புத்த்யா ஸூக்ஷ்மயா ஸூக்ஷ்மதர்ஶிபி:॥" (கடோபநிஷத்) கூர்ந்த புத்தியினால் நுண்ணறிவாளர்களால் அறியப்படும். "தமாத்மஸ்தம் யே(அ)நுபஶ்யந்தி தீராஸ்தேஷாம் ஶாந்தி: ஶாஶ்வதீ நேதரேஷாம்।" ஆன்மாவிலுறைபவனை எவர் காண்கிறார்களோ அவர்களுக்கே சாந்தியுண்டாகும்.

"திவ்யே ப்ரஹ்மபுரே ஹ்யேஷ வ்யோம்ந்யாத்மா ப்ரதிஷ்டித: । தத்விஜ்ஞாநேந பரிபஶ்யந்தி தீரா: ஆநந்தரூபமம்ருதம் யத்விபாதி॥" பிரமபுரத்தில் ஆகாயத்தில ஆன்மா தங்குகிறான. அதை புத்திமான்கள் விசேடித்த அறிவினாற் காண்கிறார்கள்.

"ஹிரண்மயே பரே கோஶே விரஜம் ப்ரஹ்ம நிஷ்கலம்।"

நிஷ்களமான பரப்பிரமம் இரண்மயமான இருதயகோசத்திற் காணப்படும்.

"ப்ரபஞ்சோபஶம: ஶிவோ(அ)த்வைத ஏவமோங்கார ஆத்மைவ ஸம்விஶத்யாத்மநா(அ)த்மாநம்॥"

ஆன்மாவே ஆன்மாவினால் எல்லாவற்றிற்கும் புகலிடமாகிய பரமான்மாவில் நுழைகின்றது.

"தஸ்மிந் யதந்தஸ்ததுபாஸிதவ்யம்।"

உள்ளிலிருப்பது பாவிக்கத்தக்கது.

"तस्मिन्यदन्तस्तदन्वेष्टव्यम् ॥"

உள்ளிருப்பது தேடத்தக்கது.

"एतज्ज्ञेयं नित्यमेवात्मसंस्थम् ।"

என்று மான்மாவிதுறைபவனை அறியத்தகுந்தது.

"सूक्ष्मं [illegible] । भावैकगम्यमजडं शिवतत्त्व[illegible]"

எண்ணத்தால் அடையத்தகுந்த சிவதத்வம் ஜடமன்று, வெகு சூக்குமமானது.

"भावग्राह्यम्" எண்ணத்தாலடையத்தகுந்தது. எனப் பல வசனங்களெழுந்தன.

இதனாற் பெறப்பட்டது யாதெனின், கண்ணினாற் சில வஸ்துக்களினுண்மையை யறிகிறோம். காதினாற் சில வுண்மைகளை யறிகிறோம். கண்ணாற் காணத்தக்க வுண்மைகளைக் காதினா லறியமுடியாது. அவ்வாறே மனதினா லறியத்தகுந்த வுண்மைகளை இந்திரியங்களா லறியமுடியாது. திரஷ்டாவாகிய வான்மாவைக் கரணாதிகளா லறியமுடியாது. ஆன்மாவை யதன்றன்மையாகிய அறிவினா லறியலாம். அறிவினாலறியவேண்டிய வொன்றை இந்திரியங்களா லறிய முடியவில்லையேயென்று கூறுதலடாது. எதனெதன்றொழில்களெதற்கமைந்ததோ அவ்வாறுதான் 'நடக்கும். ஸ்வச்சமான அறிவானது கடவுளைப்பற்றவும், அவனைப்போற்றவும், "ஸர்வேச்வரன்" என்றுசொல்லவும், மனந்தாழவும், இவ்வுடலையே மறந்துன்னதநிலையினிற்கவும், தன்மைவாய்த்து அப்படியே தொன்று தொட்டுப் பலகோடி மாந்தர்க ளவனை வழிபட நூல்களையும், கோயில்களையும், குரு சிஷ்ய பரம்பரைகளையுங்கொண்டு குணப்படுகின்றார்கள். பலவித நியாயங்களும் பலவித ஒழுக்கங்களும், பலவித அன்பைக் காட்டு மறச்சாலைகளு மவ்வோருவன்றன்னையேபற்றி இவ்வுலகில் ஆதிகாலமுதல் நிகழ்கின்றன. மதங்களினாற் சில கேடுகளுண்டாயிற்றென்று சிலமாந்தர் கூறுவ தவர்களறியாமையையே தெரிவிக்கின்றது. ஒருமதஸ்தன் வேறொருமதஸ்தனைக் கொலைச் செய்யும்போதும், வருத்தும்போதும், கடவுளையும், மேனோக்கங்களையும் வேண்டுமென்றே கைநழுவவிட்டு இவ்வுலகவாழ்க்கைக்கும், செல்வாக்குக்கும், அரசுரிமைக்கும், ஆற்றலுக்கும் இரத்தவெறிக்கு மடிமை

யாகித் தீயகுணங்களுக்குத் தாஸனாகிப்புரிந்தார்களேயன்றி வேறல்ல. இவ்வுண்மையை யறியமாட்டா மாந்தர்களே கடவுளையும், கடவுளைப் பற்றிய மார்க்கங்களையுங் குறைகூறுவார்களென்க. கடவுளுண்டென்னு ஞானத்தால் என்றும் நன்மைகளே விளைந்தன. விரிக்கிற் பெருகும். இவ்வாறறிவினாற் கடவுளைப் பற்றத்தக்க தண்டன்மைகளை யிறைவ னெம்மிடமமைத்துள்ளான். அது கெடாவண்ணம் பாதுகாப்பதே எம் முக்கியச்செயலாகும். அவன் அறிவிததாலன்றி யறியாவுளங் களாகியயாம் அவனை அன்பினா லறிவிற பற்றுவதன்றிக் கண்ணுக்கு விஷயமாகும் கல்கட்டைகளைப்போன் றெவ்வாறு காண்பதாகும்? எம்மிலந்தர்ப்பூதமாய்நின்று எம்மை எமக்குக்காட்டு நாதனை சுட் டற்ற சுகாதீத நிலையிலே யனுபவிப்பதன்றி எமமாற் சுட்டி யறியப் படும் பாசஜாலங்களைப்போல எவ்வாறறிவது? ஓர்கால் பிரமசமா ஜத்தலைவராகிய "ராஜாராம் மோஹனராய்" என்பவர் கல்கத்தாவி லிருநதகாலையில, ஒருத்ஸவத்திற் பல இந்துக்கள் விக்கிரகங்களைத் தூக்கிசசெல்லுஞ் செய்தியை யவருடைய நண்பர்க ளவரது காதிற போட்டபோது, அவர் "ஐயகோவென்று தேமபி யழுதுக் கண்ணீர் வடித்தாராம் மோஸஸ், மகம்மது, நாநக், தயாநநதர் முதலிய வன்பர்க ளிக்காரணம்பற்றியே விக்கிரகாராதனையைக் கண்டு மனம் வெதும்பினார்போலும். இறைவனைக் கண்ணாறகாண விரும்பினோர் இறைவனைப் பாசமாக்க விரும்பினதாகும. அன்னோர் "ஊனக்கண் பாசம், உணராப்பதி" என்பதை யுணர்வாராக.

மரமசைதல் முதலிய காரியத்தைக்கண்டு காரணமாகிற காற்றை ஸ்பர்சேந்திரியத்தா லுணர்வதுபோலவும, தேக மீடுபடல் முதலிய காரியத்தைக் கண்டுக் காரணமான இனிய கானத்தின் செய்கை யீதென்று செவியினாலுணர்வதுபோலவும், மிகவும் விசித்திரவமைப் பாகிய காரியத்தைக்கண்டு, இன்னின்ன திவ்வா றமைக்கப்படவேண் டுமென்று முன்னுணர்நதமைத்த காரணனை முதல்வனைச் செவ்வறி வினாற் பற்றுவோம். புத்திமானாகிய வொருவனாலேயே முன்னுணர் ந்து நடத்தவேண்டியவைகளை நடத்துவதைக் கண்டிருக்கிறோம். எமக்குப் புறம்பேயுள்ளவைகளை யிந்திரியாதிகளாற் கண்டோம். எமக்குள்ளிருந் தெல்லாவற்றையு மெமக்குக்காட்டும் முதல்வனை அறிவினாலன்றிப் பின் னெவ்வாறுதா னறிவது?

"உலகத்தில் புத்திமானொருவனே இன்னின்னகாரியம் நிறைவே றுமபொருட் டின்னின்னவிதமாகத்தான் செய்தல்வேண்டுமென்ற

முன்னுணர்வுடன் செய்வதைக் கண்ணுற்றேம். அசேதனங்கள் அவ்வாறுசெய்யக் காண்கிலேம்: ஆயினிப்புத்திமானுந் தேகேந்திரியகாரணங்களைக் கொண்டல்லவோ செய்யக்காண்கிறேம்" எனின் கூறுதும். இவ்வாசங்கையை மிருகேந்திராகமமே "காயஸம்ஶரீரஸ்ய கேந க்ருதாவ்யாவ்ருத்தஸ்யசேதஸ: ஸோஜ்ஞாதுரம்ஶே ஜ்ஞேயரூபம் கர்த்ருத்வஸம்ஶயதாதிபிர:" என வெடுத்திசைதத்து. இவ்வினைவை யுற்றனேராக்கின் இறைவன்கண்ணுக்கு விஷயமாகவில்லையே என்று ஏங்கியவன் "இறைவனைப்" பாசப்பொருளாக்க நினைந்தது போன்று, இவ்வாசங்கைநிகழ்ந்ததுவோ னிறைவனைப் "பசு" வாக்க நினைந்தவனுவன். பசு அல்லது ஜீவன் விஷயத்திற்கூட, ஜீவன் தநுவாதிகளைப் பெற்றபின்னர் அதனது சந்நிதியில் உச்வாச நிச்வாசம, நிமேஷோன்மேஷம, முதலிய பலதொழில்கள் பிரயதனமின்றி நிகழ்வதைக் கண்ணுற்றேம். மற்ற தசேந்திரியாதிகளாற் செய்யப்படுவனவற்றைமாத்திரம் கருவிகாணுதிகளைக்கொண் டியற்றுகின்றதென்றுணர்நதேம். இவ்வாறு ஜீவனுக்கு ஏற்பட்டகாரணந்தான் யாதோவெனின், முன்னரே யாங் கூறியவாறு "ஆத்மா மலாவிருதன் அமமலத்தைச் சேதிக்கும்பொருட்டும் அதனிச்சா ஞானக்கிரியைகள் விளங்கும்பொருட்டுஞ் சில ஸூக்ஷும தத்துவங்கள் சேர்க்கப்படுகின்றன. இன்றே லாத்மாவே யில்லையென்றுசொல்லுந் தன்மையிலேயே நிற்கின்றது. ஸ்ரீ பௌஷ்கரத்தில்,

"ததஸ்ஸம்ஸ்காரயோகாத் ஸம்ஸாரீ த்விஜ இஷ்யதே । ... " என்றும், பராக்கியையில் "... " என்றும், வாயுஸம்ஹிதையில் "... நியதிஸ்ச நியாமிகா" என்றும் காலம், நியதி, கலை, வித்தை, ராகமாதி ஸூக்ஷும தத்துவங்களினுலேயே ஆத்மாவிற் காத்மத்தன்மையாகிய சைதன்யப் பிரஸாரமுண்டாயினமை வியக்தம்' இவ்வாறு இத் தத்துவங்கள் சேர்க்கப்பட்ட பின்பு ஆன்மாவினது நிஜஸ்வரூபமான கிஞ்சிஞ்ஞதை வெளிப்பட்டது. இக் கிஞ்சிஞ்ஞதைக்குத் துணை சேர்ந்தாலன்றி அதனது இச்சாஞானக்கிரியைகள் முற்றுப்பெறு

வெனக்கொண்டு அந்தக்காண, ஞானேந்திரிய, கர்மேந்திரியாதிகள் சேர்க்கப்பட்டன. அதனுலிச்சா ஞானக்கிரியைகள் விளங்குகின் றன. எமக்கிவைகளைத் தந்தருளுகின்ற பேரறிவாளனுகிய ஸர்வேச் வரனுக்கு எற்றுக்கோவித்துணைகள்? அவனது சைதன்யமும் ஜீவசைதன்யத்தைப்போல் மலப்பிணிப்புடையதோ? "மாயைதான் மலத்தைப்பற்றி வருவதோர் வடிவமாகும்" என்றார் பெரியார். மலமிருந்தாலன்றோ முதல்வனுக்கு மாயையிற் றநுவாதிகளும், அவைகளைப்பெற்ற பின்னர் இச்சாஞானக்கிரியைகளின் நிகழ்ச்சியும் வேண்டப்படும். வாயுசம்மிதையில், மலப்பிணிப்பினுலேயே ஜீவ னுக்கு விஷயங்களை யறிவதற்கு மாயையிற் றநுவாதிகள் வேண் டப்பட்டமையும், அஃதின்மையால் சிவனுக்கவை வேண்டப்படா மையு மோரிடத்திலேயே குறிக்கப்பட்டுள்ளன.

"ஈஶாய ஜ்ஞாநவிஜ்ஞப்த்யை திரோதிர்விஷயேஷ்வபி । ப்ரகாஶ ஹாவிநாஶாவாஸ்யஸ்ய ஸ்யக்ஷாநபேக்ஷத: । அணவோபி ஜ்ஞாநஶக்தி ரோபாணவரோத்த: । ஸ்வதஸ்ஸர்வத்ர ஸர்வஜ்ஞ ஜ்ஞாநஹேதவ: । யத்ய்யாவஸ்யதம் வஸ்துத ஸ்வயோஸ்வஸ்ய ஶிவ: । யதோநவஜ்ஞாநாதிகலா ஸ்வஜ்ஞஉபதே ॥" என்பதனு லறிக.

எனக் காத்மாவெனப் பெயரமைந்தது "வசித்திட வரும் வியாபி யாய்" இவ்வுடலில் எனக்கு வியாபகம் ஏற்பட்டு தேகஸ்பந்தனம் முதலியவைகளை என்னிஷ்டப்படி யான் செய்தல் கூடுமாப்போல, ஸர்வேச்வரன் எங்கும் வியாபியாகி எல்லாஞ்செய்ய வல்லவனாத லுனுக்கி யவன் பரமாத்மா எனப்பட்டான் யான் செய்வதென்பொரு ட்டு. அதாவது ஸ்வப்பிரயோஜனக்கருதி. அவன் செய்வதுமென் பொருட்டுத்தான். ஆனுல் அது பரப்பிரயோஜனத்தின்பொருட்டு. "த்ருணாதிஶிவபர்யந்தம் விஶ்வஸ்யாதிஶயக்ரம: । ஸந்நிகர்ஷக்ரமேணாஸ்ய வர்த்ததே ஶிவஶக்தித: ॥ ஸர்வாநுக்ராஹகோ தேவ ஸர்வஶ்ரேயோவிதாயிநே" "புல்முதல் சிவதத்துவம் வரையுள்ள விச்வத்தின் கிரமமானது சிவசக்திகளினுடைய சந்நிதியிற்றுனே நடைபெறுகின்றது. எல்லாவற்றையுந் தன்னிடங்கொண்டு எல்லோர் க்கும் நன்மையை விளைவிக்கிறார்கள்" என ஈச்வரசொரூபம் வெளியா

பெருமானாகிய பேரறிவன் சந்நிதியிலேயே எல்லா வுலகமுஞ் சேஷ்டிக்கின்றது. எல்லாந் தத்தந்தொழில்களை நடத்துகின்றன. சூரியன், ஸமுத்திரங்கள் மேகங்கள், ஆறுகள், நதிகள்—எல்லாம் அவன் புகழைக்காட்டி எமக்கே யுதவுகின்றன. சூரியன், சந்திரன், ஓஷதிகளெல்லா மவன் பெருமையைக்கூறி யெமக்குப் பிரயோஜனத்தைச் செய்கின்றன. அவனெங்கு மிருப்பதனாற்றான் எல்லாமிருக்கின்றன; இயங்குகின்றன. அவனுடைய கிரணமரீசிகளே யெங்கும் பரவி நிற்கின்றன. ஒரு ஸமுத்திரத்தில் மீன் முதலிய ஜலசரங்க ளெவ்வா றுயிர்வாழ்கின்றனவோ, எவ்வா றவைகளுக்குப் புகலிடம் வேறின்றோ அவ்வாறே அவனது கிரணமரீசிகளாகிய மகா சமுத்திரத்தில் எக்காலத்து மெத்தன்மைத்தும் எல்லா முயிர் வாழ்கின்றன. இல்லாவிடினிருத்தலே யமையாது. அவைகளவைகளின் றொழில்களை யியற்றா. இஃது ஜீவலோகமாகாது ஆதியில் கேவலம் ஜடமாத்திரமிருந்துழி (பூதங்களாகவோ அல்லது பரமாணுக்களாகவோ, அல்லது பராகாசமாகவோ இருக்கட்டும்) அவையப்படி யப்படியே யிருக்கவேண்டுமே யொழிய பரிணாமாதிகளையும், சலனாதிகளையுங் கொண்டு சாதக சாத்தியங்களா யமையா. ஜீவனு மொன்றையு மியற்றாது. எம்மறிவு மவனைப்பற்ற நேரிடாது; இது சத்தியம், சத்தியம், சத்தியம்.

இப் பெருமசோதிக்குத்தான் பரமவியோமம் என்றும் சிதாகாசமென்றும், சிதம்பரமென்றும் பெயர். இதிலேயே பஞ்சகிருத்தியங்களும் நிகழ்கின்றன. இவ்வுண்மையையே "தைத்திரீயம் கொஹ்யேவாந்யாத்க: ப்ராண்யாத்யதேஷ ஆகாஶ ஆநந்தோ ந ஸ்யாத்" "இவ்வாகாயம் ஆநந்தமல்லாவிடின் எவன் நிலைபெறுவன், எவனுயிர் வாழ்வான்" என்றது.

"ஸவா அயமாத்மா ஸர்வேஷாம் பூதாநாமதிபதி: ஸர்வேஷாம் பூதாநாம் ராஜா தத்யதா ரதநாபௌ ச ரதநேமௌ சாரா: ஸர்வே ஸமர்பிதா: ஏவமேவாஸ்மிந்நாத்மநி ஸர்வாணி பூதாநி ஸர்வே தேவா: ஸர்வே லோகா: ஸர்வே ப்ராணா: ஸர்வ ஏத ஆத்மாந: ஸமர்பிதா:॥" இந்த ஆத்மா எல்லாப் பூதங்களுக்கு மதிபதி. எல்லாப் பூதங்களுக்கும் அரசன் எவ்வாறு ரதத்தின் ஆரக்கால்கள் சக்கரத்தின் உடற்கட்டையிலும் நேமியிலும் பற்றி நின்று சுழல்கின்றனவோ அவ்வாறே எல்லாப் பூதங்களும்,

எல்லாத் தேவர்களும், உலகங்களும், எல்லாப் பிராணிகளும், இந்த எல்லா ஆத்மாக்களும் நிலைபெறுகின்றன" என்று பிருகதாரணியகம் கூ/

"ஸஜஸ்ரம் விஸ்ருஜதே கரணைஸ்ஸ்வைரஜஸா ।
கரோதி ஸர்வதா க்ருத்யம் யதாயதுபயுஜ்யதே ॥" இவ்வாறு தடையற்ற வல்லமையுள்ள கருவிகாரணங்களாகிய ஸ்வசந்திகளால் பஞ்சகிருத்தியங்களையும் எச்சமயத்திற் கெவ்வாறு செய்யவேண்டுமோ அவ்வாறு எப்போது மியற்றுகிறா" என ஆகமம் போதித்தது.

சற்றுமுன்வரை மேற்றிசையிலுள்ள சில பௌதிக சாஸ்திர வல்லோர் கூறிவந்தது யாதெனில் "ஜடமேயிருந்ததாம். அந்த ஜடத்திற்குப் பல சத்திகளுண்டாம். அப் பல சக்திகளுமொன்றை யொன்று முட்டிக்கொண்டுக் கடைசியில் இவ்வத்புத வமைப்பை அறிவின்றியே யுண்டாக்கியதாம். இஜ்ஜடசத்தியே எப்படியோ முட்டி மோதிக்கொண்டு ஒரு சிறு அறிவைத்தாங்கி நகரும் ஒரு சிறு ஜந்துவை யுண்டாக்கிற்றாம். இதனோடு நிற்காமல் இவ்வாறு பல ஜந்துக்களுண்டாயினவாம். இப் பல ஜந்துக்களும் முட்டி மோதிக்கொண்டு அதைவிடச் சிறிது அறிவிற்சிறந்த ஒரு பிராணியை யுண்டாக்கினவாம். இப்படியே பல அறிவுடைப்பிராணிகளுண்டாகி, முட்டி மோதிக்கொண்டு அதிலுஞ் சிறந்த ஒரு அறிவுள்ள பிராணியை யுண்டாக்கிற்றாம். இப்படியே வெகுதூரம்வரையிற் சென்று வெகு அறிவின்பேதங்களை யுண்டாக்கிக் கடைசியில் அறிவிலும் அன்பிலுஞ் சிறந்த மனிதனை யுண்டாக்கினதாம்." அறிவும் அன்புமுள்ள பிராணிகளை யுண்டாக்கிய அந்தச் சக்திமாத்திரம் அறிவற்றதாகவும் அன்பற்றதாகவும் இருககவேண்டியதென நாம் எண்ணவேண்டுமோம். இவையெல்லாம் ஒன்றோடொன்று முட்டி மோதிக்கொண்டு நிலைத்தவைகளாம். யாங் கூறுவது யாதெனின், ஒரு சக்தியே யூடுருவிச் சென்று அவைகளை ஒன்றோடொன்று புணர்த்தியும், சுற்றச்செய்தும் ஏவிநடாத்தியது உண்மை அவ்வொரு சத்தியே அறிவையும் அன்பையும் மேன்மேலும் வளர்த்து உயர உயரச்செய்ததும் உண்மை. ஆனால் அச் சக்தி ஜடமுமன்று; அன்பற்றதுமன்று. அன்பிற்கும் அறிவிற்கு முறைவிடமான பேரறிவும் பேரன்புமுள்ள அருட்சத்தி. அஃது அறிவு கொண்டும் அன்புகொண்டும் நன்றாய்த் தெரிந்து நம்மை வேண்டு மென்றே கைதூக்கி நம்மைக் காப்பாற்றுகின்றது. இல்லாவிடினிருக்க விருக்க உயர்வானேன்? அன்பும் அருளும் அறிவும் விருத்தியாவா

னேன்? அச்சத்தியின் சிறுகாரியமாகிய யாமே நம்மின் மெலியாரை நோக்கி அன்பு மறிவுங்கொண்டே கைதூக்கி விடவேண்டுமென்னும் பூர்ண எண்ணங்கொண்டு புரியவில்லையா? நாம் பிறக்கும்போதே நம்முணவிற்குத் தாயினது அமிர்தகலசம்போன்ற ஸ்தனங்களிற் பாலை நிறப்பிவைத்த பெருங்கருணையைக் கருணைசத்தியன்றென்போமா! இவ்வாறே எல்லாவிதக் கருவி காரணங்களையும் அமைத்த ஒரு கிருபாசக்தியை அன்பற்றதென்போமா! அல்லது அறிவற்றதென்றுதான் கூறுவோமா! அறிவை வெளிப்படுத்துவதுடன் ஒவ்வொரு அமைப்பும் அன்பையுமன்றோ தெரிவிப்பது. அச்சத்தியின் அன்பல்லவோ முந்தி நிற்கக்காண்கிறோம். ஆகையா லச்சத்தி அருட்சத்தியேயன்றி வேறன்று. இதைக்கூர்ந்து சித்த சமாதானத்தோடு கவனிப்பின் உண்மை விளங்கும். ஆதிமுதலச் சத்தியினோக்கம் "உயர்விக்க வேண்டுமேென்பதே. அன்பையே வளரச் செய்யவேண்டு மென்றும், அறிவை விளங்கச்செய்ய வேண்டு மென்றும் நோக்கத்துடனேயே அறியாமையை அறிவிற்குணவாக்கியும், கேவலம் பாகுபலத்தை அறிவு பலத்திற்கூறுகாயாக்கியும், மறத்தை யறத்திற்குணவாக்கியும் வருகின்றது. குரூரம் முதலிய குணங்களைக் கொண்ட மிருகத்தன்மையெல்லாம் அன்புள்ள மாந்தர் தன்மைக் கடிமையாகின்றதல்லவா? சர்வ சகோதரத்வம், சர்வ சமாதானத்வம் முதலிய எண்ணங்களல்லவோ மாந்தர்பால் தேறுகின்றன. இவைகளை யாங்கவனிக்கும்போது — (நன்று யூன்றி விசாரிக்கும்போது) நம்மை வாழ்விக்குஞ் சக்தியினுடைய ஏற்பாடு (Plan) பேரறிவினும் பேரன்பினுமே மேற்பட்டது வெளியாகும். இதனாலேயே "அருளது சத்தி யாகும் அரன்றனக் கருளை யின்றித், தெருள்சிவ மில்லை யந்தச் சிவமின்றிச் சத்தி யில்லை, மருளினை யருளால் வாட்டி மன்னுயிர்க் களிப்பன் கண்கட், கிருளினை யொளியா லோட்டும் இரவியைப் போல வீசன்" என்றார் எமது ஞானாசாரியர். "அருளெங்கு மான வளவை யறியார், அருளே நுகரமு தானதுந் தேரார், அருளெங் கருமத்தி னதிசூக்க முன்னார், அருளெங்கும் கண்ணுன தாரறி வாரே" என்றார் திருமூல யோகிகளும்.

இத் திருப்பாடலில் "கிருபாநோக்கமே யச்சத்தியின் அளவை என்றும், அக் கிருபையையே எல்லோருமடைந்து அனுபவிக்கின்றார்களென்றும், அதிஸூக்ஷ்மமாக எல்லாத் தொழில்களிலுங் காருண்ணியத்தையே கருத்தில்வைத்து இச் சத்தி நடாத்துகின்ற

தென்றும் தோன்றிய விப்பிரபஞ்ச முழுமையிலும் அச்சத்தியின் கருணையையே காணலாமென்றும். திருமூலநாதனருளினு லுணர்த்தினர்.

இம்மட்டோ! அருளிலே பிறந்தோம். அருளிலே வளர்ந்தோம். அருளிலே யிளைப்பாறினோம். (இதையே மரணமென்பர்; இதையே அழிப்பிளைப்பாற்றல் என்றும், "ஸம்ஹாரம் ஸர்வஜீவாநாம் விஶ்ராமம் சைவ" என்றும் வரும் அநுபூதிவாக்கியங்கள் விளக்கும். ஈண்டு விரிக்கிற் பெருகும்) இவ்வுண்மையையே ஸ்ரீ மூலநாதர்;

"அருளிற் பிறந்திட்டு அருளில் வளர்ந்திட்டு
அருளி லழிந்தி ளைப்பாற்றி மறைந்திட்டு
அருளான வாரமுதத தானந்த மூட்டி
அருளா லென்னந்தி யகம்புகுந் தானே"

என்றருளிச்செய்தார். ஆன்மாக்களுக்காக்கல், அளித்தல், அழித்தல், மறைத்தல, அருளல் என்பன அருளினுலேயே நடக்கின்றன வென்பதை திவ்வியாகமங்கள் விளக்கும "ஸர்வாநுக்3ரஹ ஹேதவே ஸ்ருஷ்ட்யாதி3 பஞ்சக்ருத்யாநி ஹேதோ:" (பௌஷ்கரம்)

(1) ஶிவஸ்ய பரிபூர்ணஸ்ய பராநுக்3ரஹமந்தரா ।
நகிஞ்சித3பி கர்தவ்யம் இதி ஸாயம் விநிஶ்சிதம் ।
பரம்ஸர்வாநுக்3ராஹ்யம் பஶ்வாத்மகம் ஜக3த் ।
பரஸ்யாநுக்3ரஹாயாஸ்ய பத்யுராஜ்ஞா ஸமுத்3யத: ।
பதிராஜ்ஞாபக: ஸர்வாநுக்3ரஹணாதி3 ஸர்வதா"

(வாயு - பூர்வ)

(2) பரிபூர்ணஸ்ய ஸர்வத்ர நித்யதே3நாஸ்ருஷ்ட்யாதி3யோஜநம்
பராநுக்3ரஹணாயாஸ்ய ஶம்ஸர்வஸ்ய காரணம் ॥

(வாயு - உத்தர)

(3) ஸ்ருஷ்ட்யாதி3யோஜநாஹாநெ பராநுக்3ரஹணவஹி ।
ஸ்ருஷ்ட்யாதி3யோஜநம் ஸம்ஸ்தாநாம் காரணாநாம் பரமேஶ்வர: ॥

(கூர்மபுராணம் - உத்தரம்)

"பரானுக்கிரகத்தின்பொருட்டே பரமபதிக்கு எல்லாத்தொழில்களுமேயன்றி, எல்லாம் நிறையப்பெற்ற அவனுக்கு ஐந்தொழிலெற்றுக்கு" என்பனவாதி வசனங்களெழுந்தன.

## ஸைவாகமப்பிராமாண்யம்

இதிலான்மா தன்னைக்காப்பாற்றிக்கொள்ளும்பொருட்டுக் கடவுளொரு மெண்ணங்கொண்டதென்று சிலர் சொன்னது முண்மையே. "பேரின்பமதாய்ச்செறியும் பொருணீ, நின்னையன்றிச் செறியாப்பொருளுன்" என்றார் தாயுமானார். இதனால் கைதூக்கும் காருண்யசத்தி அருட்சத்தியேயன்றிப் பௌதிகர் கொள்வதுபோல் ஜடமன்று.

தெய்வகதியாக எந்தப் பௌதிகசாஸ்திரக் குழுவினருட் சிலர் "ஆன்மா வில்லை, ஈச்வரனில்லை, பரகதியில்லை, இருப்பது ஜடந்தான்" என்று கூறிவந்தனரோ அவர்களுள் முக்கியமானவர்களாகிய "மையர்ஸ் (F. W. H. Myers) க்ரூக்ஸ் (Sir William Crookes) ஆலிவர் லாட்ஜ் (Sir Oliver Lodge) முதலிய முதன்மைப்பண்டிதர்களும், ஆத்மவஸ்து பரீக்ஷாவான்களும் (Psychical Research Society) ஆன்மாவுண்டென்று நிஸ்சயித்ததுபோலவே எங்கு மனுஸ்யூதமான சித்சக்தியொன்று தாய்போல் வளர்க்கின்றதென்று கண்டார்கள். ஆன்மா கடவுளுண்டென் றன்னோர் கூறவே ஆஸ்திகர்களுடைய மனங்களித்தது. ஆனந்தத்திலமிழ்ந்தார்கள். பிறரெண்ணமறிதல், (Thought Reading) தூரத்தில் நடப்பவைகளைக்காணல், (Telepathy) தூரத்திலிருப்பவர்களுடனுரையாடல் (Clairvoyance) (Clairaudiance) முதலிய வுண்மைகளும வெளிப்பட்டன. யாமே "Thought Reading" பிறரெண்ணமறிதல் முதலியவைகளினுண்மைகளை மூவர் நால்வர்களிடம் பிரத்தியக்ஷமா யனுபவித்திருக்கிறோம். உபாஸனையின்பலத்தா லாச்சரியப்படக்கூடிய பல வற்புதங்களையுங் கண்டிருக்கிறோம். இவையனைத்தும் யோகசாஸ்திரத்திற்கண்டகாக்ஷிகளும் ஸித்திகளுமேயாம். சைவாகமங்களிற் றசகாரியங்களில் "ஆத்மதரிசனம், பரைதரிசனம், சிவதர்சனமாதிகள்" அனுபவிக்கத்தகுந்தவைகளாகவே யெடுத்தாளப்பட்டன. இவ்வபரோக்ஷானுபூதியை ஸித்தித்துக்கொள்ள "யோகஞானமியற்றிடென்று" ஸ்ரீமத் - சகலாகம பண்டிதமூர்த்திகள் உபதேசித்தார் கொஞ்சநாளைக்குமுன் இப்பௌதிகக்குழுவினருள் ஒருவர் (Atoms) "பரமாணுக்களென்பன கிடையா. எல்லாம் (Energy) சத்தியே" யென்றாராம். இவ்வாறே ஜோதிவடிவான Radium முதலியவைகளைக் கண்டிருக்கிறார்கள். இஃது சைவசித்தாந்தத்திற்குப் புதிதன்று. இறைவன் "கேவலம் கிரியாசத்திமயமாய் ஸர்வதேஜோமயமாய் எங்கும் பரவியுள்ள பிந்து சக்தியால் எல்லாவற்றையு மியற்றுகின்றானென்று "[illegible] [illegible]

[illegible] ||” என்றும் “[illegible] ||” என்று கோடிசந்திரன்போன்ற பிந்துவை யுபாதானமென்றும், ஈச்வரனது சக்தியைத் துணைக்காரணமென்றும், ஈச்வரனை நிமித்தகாரணமென்று மாகமங்கூறும். இப் “பிந்து’ வின் ஒளிகளே தேஜோதிகளாகிய இந்த சூரியன், கிரகங்கள் இன்னுமனேக பல்லாயிரங்கோடி ஒளிகளு மென்றும் இப்பிந்துசத்தியே ஒன்றோடொன்று சேர்த்து ஆகர்ஷிக் குஞ் சக்திகொண்டதென்று திவ்வியாகமங்கள் கூறும்.

இன்னபல வேதுக்களாலறிவின் செய்கையாய இத்தநுகரண புவன போகாத்மமாகிய . விப்பிரபஞ்சத்தைக்கண்டு காரணனாகிய ஸர்வேச்வரனை ஸித்தமாயறிகிறோம். இவ் வுண்மையையே பராக்கி யையும் “[illegible] ||” பல வுருவங்களைப் பெற்றுள்ள பல வஸ்துக்களும் உருவங்கொண்டவைகளாயும், செயர்க்கைகளாயு மிருப்பதாலும் புத்திமானொருவனு லேற்படுத்தத்தகுந்த தொழில் களைக்கொண்டதாலும், புத்திமானாகிய ஒருவன், ஈச்வரனென்று கூறப்பட்டு, நன்றாய் விளங்குகிறான் என்றது. மிருகேந்திராகம மும் “[illegible] ||” தொழில்களுக்குறிய சில தர்மங்களைக்கொண்ட தேகாதிகளையாங் காணும்போது அனுமானத் தினால் இவைகளுக்குக் கர்த்தன் ஒருவனை அறிகிறோம் என்றது. பௌஷ்கரமும், “விவாதாஸ்பதம் விஶ்வம் விஶ்வவித்கர்த்ருபூர்வகம் | [illegible] கார்யம் கும்பாதிகம் யதா ||” “மாந் தர்களுடைய அறிவிற்கு விஷயமாகி, யாதிதுவென்று விசாரணையாகிய விசேஷவாதத்திற் கிடமாயமைந்த யிவ்வுலகமானது, இவ்வுலகத் தன் மைகளை யறிவானொரு கர்த்தாவினது ஆளுகைக்குட்பட்டது. கடம் போன்ற காரியமாகவே நமக்கிருத்தலால் என்க” என்றது. அதாவது கண் காணவும், காது கேட்கவும், அமைந்துள்ளதுபோலவே எல்லா வஸ்துக்களும் பிரயோஜனத்தோடுகூடிய காரியமா யமைந்ததா லென்க.

வேதோபபிரும்ஹணமாகிய வாயுஸம்ஹிதை அடிக்கடி இவ்வுண்மையைப்பகரும். வாயுஸம்ஹிதை பூர்வபாகம் நான்காவது அத்தியாயத்தில் பின்வருமாறு காணப்படுகின்றது.

“[illegible] ॥” “பாசபசுக்களுக்கு வேறுபட்டவனும் முடிவில்லா வழகிய தன் குணங்களுக் குறைவிடமாய் இவ்வுலகத்தை யுண்டுபண்ணியவனுமுள்ள ஒருவனுண்டு. அவனின்றேல் சிருட்டியாதிகள் எவ்வாறு நடக்கும். பாசமோ அசேதனம, பசுவோ அக்ஞன், பிரதானம், பரமாணுக்கள் முதலியன (சில மூலபாசங்கள்) வெல்லாம் அசேதனம், புத்திமானொருவனலன்றி புத்தி நுட்பத்தைக் காட்டவல்ல செய்கையைச்செய்யக் கண்டிலேம். பிரயோஜனத்தைத் தரு மிவ்வுலகங் கார்யமாகிக் கர்த்தனொருவனை வேண்டுகின்றது. காரியத்தின் (பாச பசுக்களின்) செய்கையும பதியினுடையதே. பசுபாசத்தினுடையதன்று. பசுவினது (சிறு) தொழிலுங்கூட பதியினுடையதூண்டுதலின் பேரிலேயாம்” என்றது. மீண்டும் அதேஸம்ஹிதை அதேபாகம் ஏழாவது அத்தியாயத்தில்,

“[illegible] ।

த்³விதீயம் ஶாஶ்வதீம் நிஷ்டா²ம் ஸதாம் ப்ரவிஶதே । நைவைநம் பஶ்யதோ ஶ்ருத்யா வத³ந்தே ஸர்வ்வவேதி³ந: ॥"

*கர்த்திருத்வமானது அவ்வியக்தத்தினுடையதுமன்று; ஜீவனுடையதுமன்று. பிரகிருதியசேதனமும், புருஷன் அக்ஞனுமாகையாலும், மூலமாகிய (ஸாங்கியர்களின்) பிரதானம், (வைசேஷிகர்களின்) பரமாணுக்கள் முதலியவை அசேதனங்களாகையாலுமென்க. புத்திமானொருவனாலன்றி புத்தி நுட்பங்களைக்காட்டவல்ல காரியங்களின் செய்கையையாஞ் செய்யக்காண்கிலேம். பிரயோஜனமுள்ளதும் கார்யமுமாகிய இவ்வுலகம் கர்த்தா வொருவனை யபேக்ஷிக்கின்றது. ஆதலினால் சக்தியையுடையவனும், தன்வபத்தனும், எல்லாம் வல்லவனும், எல்லா மறிபவனும், தோற்றக்கேடுகளில்லாதவனும், பெரியதிற பெரிய ஐஸ்வர்யங்களுக்குறைவிடமாயுமுள்ளவனெவனோ அவனே ஜகத்துக்குக் கர்த்தா. அவனே மாதேவன். அவனே மகேசன். பிரகிருதியினுடைய பரிணாமமும் (தநுகரண புவன போகங்களாகத்திரிதலும்), புருஷனுடைய பிரவிருத்தியும், (நல்லெண்ணம் தீதெண்ணம் ஆகிய எல்லாம்) ஸத்திபவிரதனாகிய யவ்வொருவனுடை ஆணையினாலேயே நடைபெறுகின்றன. இப்படிப்பட்ட என்று முண்மையான தீர்மானம் ஸாதுக்களுடைய மனதில் வேரூன்றிப் பொலிவெய்தும். அறிவீனர்களாகிய சில மாந்தர்களே யிவ்வழியைப்பற்றி நிற்பதில்லை" என்று பெறப்பட்டது.*

*வாயு சங்கிதை உத்தரபாகம்* 12 - வது அத்தியாயத்தில், *மறுபடியும் பின்வருமாறு காணப்படுகின்றது.*

அஸத்யஸ்மிந் ஜக³ந்நாதே² கதோ²த்பந்நமித³ம் ஜக³த் । த்ரூஷ்டி தே³ந யதா²ஹீநம் நிராலோகமித³ம் ஜக³த் । ஸாமாந்யே ஶாஸ்த்ரவைஸ்வர்யம் ஜக³த் ஸ்ருஷ்டி: கதா²ம் ப⁴வேத் । ஸர்வே தநவாநதஸ்ம்ருதே: ஸர்வஜ்ஞாஸ்வாமாஷஸ்ய । வ்யாநவரோணாதி³பாவ க்ஷிம்வித³வே தநம் । நதஸ்த்ருஷ்யம் ஷ்ட்ருஷ்டம் பாகஜி தாரணம்விநா । யதா²யதா²வ ஶேஷஶ்ச பம்யமோக்ஷ விசாரணா । நஸவஜ்ஞம்விநா பாம்ஸாரோதி³ஸமே ப்ரஸித்³தி⁴: । வைத்³யம்விநா நிராநம்தா³: க்ஷிஶ்யந்தே ரோகி³ணோ யதா² । ஶிவம்விநா நிராநந்த³ம் க்லிஶ்யதே ஹி ஜக³த்ததா² । தஸ்மாத³நாதி³: ஸர்வஜ்ஞ: பரிபூர்ணஸ்ஸதா³ஶிவ: । அஸ்தி நாத²: பரித்ராதா

ஸம்ஹாரம் ஸம்ஸாரஸாகராத் । ஆதிமத்யாந்த நிர்முக்தஃ ஸ்வபாவ விமலஃ ப்ரபுஃ । ஸர்வஜ்ஞஃ பரிபூர்ணஶ்ச ஶிவோஜ்ஞேயஃ ஶிவாகமே ॥"

இந்த ஜகந்நாதன் இன்றேல் ஜகமுழுமையு மிருளிற்கிடக்குமே. (அதாவது பிரகாசமின்றிக்கிடக்கும்; அறிவின்றிக்கிடக்கும்; செய லின்றிக்கிடக்கும்.) ஆதித்தனில்லாவுலகம் பார்வையின்பாற்படாதது போல், ஈச்வரனின்றேல் ஜகத்சிருஷ்டி எவ்வாறுண்டாம். பிரகிரு தியோ ஜடம், புருஷனோ அக்ஞன், மூலமான பிரதானம் - பரமா ணுக்கள் ஜடங்கள், புத்தியுடையவொருவனே புத்திநுட்பத்தைக் காட்டக்கூடிய செய்கைகளைச் செய்யக்கண்டோமன்றிவேறின்று. ஸர் வக்ஞன் ஒருவனிருப்பதாலன்றோ தர்மமிதைத்து, அதர்மமிதைத்து என்றும், இது பாவத்தை விளைக்கும். இது மோக்ஷத்தைப் பயக்கும் என்னும் விசாரணையும் மாந்தர்மனத்தின் கண்ணிகழ்ந்தமைந்து, ஆதிமுதலிவ்வெண்ணங்கள் தொன்றுதொட்டு வந்திருக்கின்றன. முதல்முதலி லிவைகள் அவனாலேயே ஏற்பட்டிருக்கவேண்டியது. நோயினால்வருந்துபவர்கள் வைத்தியனாலன்றிக் குணப்படுமாறில்லை போல், இவ்வெண்ணங்களுக்கேற்ப, சிவனாலன்றி இவ்வுலகந் துன் பத்தினின்றுமொழியாது. ஆகையால் ஆதியில்லாதவனாய், எல்லா மறிபவனாய், எல்லாந் நிரம்பியவனாய், என்றும் மங்களமுடையவ னாய் (ஸதாசிவன்) எல்லோரையுஞ் ஸம்ஸாரத்தினின்று முற்றிலும் காப்பாற்றுவனாயுள்ள நாதன் ஒருவனுளன். அவன் ஆதிமத்தியாந்த மில்லாதவன், இயல்பாகவே மலரகிதன், பிரபு, ஸர்வக்ஞன், எல்லாந் நிரம்பியவனாகிய அச்சிவன் சிவாகமத்தில் அறியப்படுபவன்.

"அஸ்தி நாதஃ பரித்ராதா ஸம்ஸாரே" "மாந்தர்களை முழு வதிலுங் காப்பாறறும் நாதன் ஒருவனுளன்" என்றும், "யதோ யதேவ தௌஶஶவம்யமோக்ஷ விசாரணா । நஸர்வஜ்ஞம்வினா ஸம்ஸாரஸ்திஸமே ப்ரஸித்தி ॥" "தர்ம மின்னது அதர்ம மின்னதென்பதும், கட்டின்னது (பந்தம்) வீடின்னது (மோக்ஷம்) என்பதும் மாந்தர்களுக்கு எல்லாமறிந்த ஒருவனின்றி. யமைந்தி ராது" அப்படி யமைந்ததற்குப் பிரயோஜனமு மவனையடைதலின்றி வேறொன்றுமின்று எனு மிவ்வுண்மைகள் மிகவுங் கவனிக்கற்பாலன. "காப்பாற்றுவன்" ஒருவனுண்டென்பதைப்பற்றி முன்னரே யாங் கூறியவாறு, எந்தவொரு சக்தியானது நாம் பிறக்குமுன்னரே- தாயி

*னது ஸ்தனங்களில் அமிர்தத்தை நிறைத்துவைத்ததோ, எந்த ஒரு சக்தியானது நமக்கு வேண்டிய வுபகரணங்களைத் தேடிவைத்ததோ, எந்த ஒருசக்தியானது "அன்பு - அருள்" என்னும் எண்ணங்களை எனக்குத்தோற்றுவித்ததோ, எந்தவொரு சக்தியானது தாயினிடத்துக் குழந்தையையும், தகப்பனிடத்து மகனையும், காதலனிடத்துக் காதலியையுந் தங்கள்தங்க ளுயிரினுமதிகமாக வோம்புமாறு செய்ததோ, அந்தப் பேரன்பிற்பரிந்த சக்தி எம்மைக் கொன்றுவிடுமோ? எமது குழந்தைகளை யாங் கொல்லுவோமோ? அவைகள் சாக என் மனஞ் சகிக்குமோ? ஒன்றுமில்லா ஜடத்தினின்றும் கொஞ்சங்கொஞ்சமாக உயர்த்தியே காப்பாற்றிவந்து வளர்த்த ஒரு பெருஞ்சக்தியானது "எவ்வளவோ ஆசையுடன் வாழவேவிரும்பும்" எண்ணத்தை எனக்குக்கொடுத்தபிறகுங்கூட என்னைச் சூனியமாய் நிர்மூலமாக்குமோ! அதற்காகவா இவ்வளவு அறிவும், அன்பும், எண்ணமும், அலைச்சலும்? ஆழ்ந்துகூர்ந்து யோஜியுங்கள்.*

"யத்ர ப்ரவ்ருத்தஸ்ய பந்தமோக்ஷ விசாரணா ந ஸர்வஜ்ஞம் விநா ஸம்ஸார:" *தர்மம், அதர்மமென்பன* பலபிர தாதாவாகியும், புகலிடமுமாகிய ஒருவனையே பொருளாக்கொண்டது. *அவனருளாலேற்பட்டது. "முற்பகல் விளைத்தாற் பிற்பகல் விளையு" மென்றார் பெரியார். ஆறுமாதத்திற்குப் பின் அறுவடைச்செய்துண்பதற் கிப்போது விதைக்கு மறிவுந் தொழிலுமுடைய மாந்தர்களுடைய நல்வினை தீவினை, நன்மொழி தீமொழி, நல்லெண்ணம் தீயவெண்ணம், நன்னெறி தீநெறி ஆகிய வினைகளுக்குப் பயனின்றா? ஒவ்வொருசெய்கை மொழி எண்ணமாதிகளுக்குந் தாங்களே உத்தரவாதிகளென் றுள்ளுணர்வுடையார்களல்லரோ மாந்தர்கள். "ஒவ்வொருவரிடத்து மிவ்வுணர்வு" பதிந்துகிடக்கவில்லையா? இயற்கையி*லமர்ந்த இவ்வுணர்வுக்கு விரோதமாக அவர்களுத்தரவாதிகளாகாமற் போவரோ? *தீவினையியற்றும்போதுந் தடுக்கும்பெருமா னிதற்குப் பயனளிக்கானோ? நல்வினைசெய்யும்போதும் களிப்பெய்தச்செய்யுங் கர்த்தன் பயனளிக்கானோ? இதனால் தர்மாதர்மம், புண்ணியபாபம் முதலியவைகளை* (Morality) *ஆஸ்திக்யத்தினின்றும்* (Religion) *பிரிக்க முந்தும் விழலர்கள் சொல் வீணல்லவோ* "உயா காயஸ்ராய ஸததம் ஸம்ஸாரிணாம் ஸம்ஸ்ருஷ்டம் । ஸத்யமேவ யதோக்தம் ஶ்ருதா வேதம் நிரூபிதம் । வ்யாஸேன ஶ்வாசவஸ்து ஸததம் ஜ்ஞானஶீலதா"

என்று மிரக்கம் பாராட்டலும், ஹிம்சை யொழிதலும் மெய்ஞ் ஞானங் கோடலும், உண்மை யுரைத்தலும், களவின்மையும், ஆஸ்திக்யமும் (பரகதி, பரமன், ஜீவன் உண் டெனல்) சிரத்தை பொறியடக்கல், தியானம் (பிரபஞ்சத்தைக் கண்டு நுண்ணறிதல்) ஈச்வரனுக்குத் தானுறைவிடமாதல், ஞானவொழுக்கம், முதலியவைகளாஸ்திக்யத்திஞேடு சேர்ந்தவைகளே. யோக சாஸ்திர கர்த்தாவாகிய பதஞ்சலி பகவான் நற்குணங்களை ஆஸ்திகத்தின் பாலதாகவே எடுத்திசைத்தார். ஈச்வராராதனைக்குரிய அஷ்ட புஷ்பங்கள் தயை முதலியன. "தர்மம் ஜிஜ்ஞாஸமாநாநாம் ப்ரமாணம் பரமம் ச்ருதி:" தர்மத்திற்குப் பிரமாணம சுருதிதான் என்று கூறிய மனுவே "யோவமந்யேத தே மூலே ஹேதுசாஸ்த்ராச்ரயாத்³ த்³விஜ: । ஸஸாதுபிர்ப³ஹிஷ்கார்ய: நாஸ்திகோ வேத³நிந்த³க: ॥" நாஸ்திகனது தொழிலே அதர்மமென்ருர். இவ்வாறே மோஸஸ், மகம்மது, கிறிஸ்து முதலிய மகான்களும் தர்மததையும் (Morality) ஆஸ்திகத்தையும் ஒன்ருகவே கண்டு கூறினர். விரிக்கிற் பெருகும். ஆதலால் " தர்மாதர்ம விவேசனம், புண்ணியபாப பரிசீலனை முதலியவுள்ள குணங்களுக்கு அவைகளை யெம்பார் பதித்த பரமனெருவனே பலபிரதாதா.

ஆனுல் ஈச்வரனெருவன் உண்டெனும் ஞானம் சிறிதாகத்தானே மாந்தர்க்கமைந்ததெனின், எல்லோர்க்குஞ் சிறிதாக வமைந்ததென்று சொல்வது பிசகு. ஆயினும் மிகச் சிறிதாகவேனு வமையாத மாந்தரில்லை. இவ்வுண்மையைச் சைவாகமங்களே செப்புகின்றன. "அஸ்தி நாதோ மமேத்யல்பா ஹ்ருத்³பு³த்³தௌ⁴ வாஸநா" "நாதனெருவனுளனென்னுஞ் சிறிய பற்றுதலானது புத்தியிலமர்ந்தது" என்று கூறியதால், இதை மேன்மேலும் விருத்திசெய்து வருவதுதான் நமது முக்கிய கடமையாகும் " வாய்த்தது நந்தமக்கீதோ பிறவி மதித்திடுமின் " என்ருர் பெரியார். இச்சிறு வித்து, சிறு முளையைப பிடுங்கி எறிந்துவிடின் பின் விளைவதென்னை ? இம்முளையை வெகு ஜாக்கிரதையாய்க் காப்பாற்றவேண்டும். இவ்வுண்மையை ஸ்ரீ பட்டினத்தடிகளும்

உழப்பின் வாரா வுறுதிக ளுளவோ
கழப்பின் வாராக் கையற வுளவோ
அதனுல்
நெஞ்சப் புனத்து வஞ்சக் கட்டையை
வேரறவகழ்ந்து போக்கித் தூர்வைசெய்

தன்பெண் பாத்தி கோலிமுன்புற
மெய்யெனு மெருவை விரித்தாங் கையமில்
பத்தித் தனிவித் திட்டு நித்தலு
மார்வத் தெண்ணீர் பாய்ச்சி நேர்நின்று
தடுக்குநர்க் கடங்கா திடுகண் செய்யும்
பட்டி யஞ்சினுக் கஞ்சி யுட்சென்று
சாந்த வேலி கோலி வாய்ந்தபின்
ஞானப் பெருமுளை நந்தாது முளைத்தக
கருணை யிளந்தளிர் காட்ட வருகாக்
காமக் குரோதக் களையறக் களைந்து
சேமப் படுத்துழிச செம்மையி னோங்கி
மெய்ம்மயிர் புளக முகிழ்த்திட் டம்மெனக
கண்ணீ ரரும்பிக் கடிமலா மலர்ந்து

என்பவைகளை மொழிந்து ஒவ்வொரு வாத்மாவினிடத்தும் விதைத்திட்ட "ஈச்வர ஞானமெனும் விதை" யெவ்வாற்றானும் முளைக்கச்செய்து அதன் கனியை யுண்ணவேண்டுமென்றுபதே

வேதமும "அஸ்தீத்யேவோபலப்தவ்ய:" உண்டெனப் பற்றத் தகுந்ததென்றும், "அஸ்தி ப்ரஹ்மேதி சேத்வேத ஸந்தமேனம் ததோ விது:"—"தெய்வமுண்டென்போர் தக்கோரே" என்றும்வியந்தது. வேதத்தின் பயனாகிய சிவாகமமும் அவ்வாறேதான் கூறும்.

சிவாகமமுமவ்வாறே "அஸ்த்யேகஸ்ஸூக்ஷ்மாத்மேதி"— ஆன்மாவொருவனுளன்—"அஸ்தி ஸர்வகஸ்ஸூக்ஷ்மோ வ்யக்த ரணீய ஆனந்தாஶ்ரய: । அதி விஶ்வஸ்ய நிர்மாதா பஶுபாஶவிலக்ஷண:"—குணங்களுக்கெல்லா முறைவிடமாகிப் பாசபசுக்களுக்கு வேறாய் நின்றிவ்வுலகைத் தந்தருளிய தனிமுதலுண்டு—"அஸ்தி நாத: பரித்ராதா ஸம்ஸாரஸாகராத்"—மாந்தர்க்கு மாதேவனொருவனால் மணமிக்க மகிழ்கதி யொன்றுண்டு என்று கூறி அஸ்தி - அஸ்தி - அஸ்தி - என்று ஆஸ்திகர்களதுள்ளங் குளிரச் செய்யும். இத்துணைப் பெரிய வாகமங்களியாவர்க்கு வெறுப்பைத் தரும்! வெறுப்போர் உளரேல் அன்னோர் ஆஸ்திகராவரோ! நாஸ்திகர்களது நலமில் மொழிகளைப் பொருட்படுத்தேமல்லேம். பலவகை நாஸ்திகருள் பசுவைப் பாசமென்பாரும், பதியைப் பசுவென்பாரும், பசுவைப் பதியென்பாரும், சேர்ந்தோரே. அன்னோர் மொழிகளை மதித்தேமல்லேம். பரமாஸ்

திக ஸம்பந்நர்களாய் வாழும் சைவ தபோதநர்கள் வேண்டுவதும் யாதெனின் "நாஸ்திகாஶ்ச து³ர்ஜநாஶ்சைவ க்ருதக்⁴நாஶ்சைவ தாமஸா: । பாஷண்டாஶ்ச து³ராசாராஸ்[illegible] ॥" "நாஸ்திகர்கள், துர்ஜநர்கள், நன்றி மறந்தோர், தாமஸகுண முடையோர், பாஷண்டர்கள், எண்ணுதற்குங் கூசுங்கொடும் பாவமியற்றுகின்றோர் முதலினோர் எனக்கு நெடுந்தூரத்தில் நிற்கவும், "ப³ஹுநாத்ர கிமுக்தேந யேயேகேசித் [illegible] । ஸர்வே [illegible] ॥" "பலபல துதி செய்தேன். இங்கு மாநதர் யாவரேயாயினும் ஆஸ்திகரேல் அன்னோர் நல்லோரே. அவர்களனைவருமென்னை யாண்டருள்வாராக" என்று வேண்டுவதேயாகும். இக்காரணம்பற்றியன்றோ "அடியார் நடுவுள்ளிருக்குமருளைப் புரியாய்" என்றும் "அடியார்பெருமை யறிந்தாரார்" என்றும் "நின்சீரடியார் தம்மடியார்க் கன்பூண்டவர் காற்றலையெவலென்றாய்த் தலையேற்று" என்றும் "திங்கள் முடியார் அடியார் அடியோமென்று கும்பிட்டுத்திரியே" என்றும் "சிவனை யுணர்மாதவர் தம் பொன்னடிக்கீழ் தாழ்வோம்.—எமக்கார் சரி" என்றும் ஆஸ்திகப் பெருஞ் செல்வர்களுறவை வேண்டினர் பெரியார். பேரருட் சத்தியின் அருணலங்களை யனுபவித்துக்கொண்டே அவனை மறந்தும், அவனை யானே யென்றும் புலம்பியழியும புல்லர்களை விட செய்ந்நன்றி கொன்ற மகாரினி யுண்டோ. இக்காரணம்பற்றியே "யாங்களே கடவுளென்றிடும் பாதகத்தவர்" என்றார் நநதாயுமானர்.

மாந்தர்களது முறையீடுகளை மகிழ்ந்து கேட்டருளும் மாண்புடைச் செவியன் ஒருவன் உண்டு என்று அங்கைச் சுட்டுவிரலாற் சுட்டிக் காட்டி ஆஸ்திகர்களெல்லோர்க்கு மாசிரியத்தலைமை வகித்த எம்பெருவாழ்வாம் ஞானஸம்பந்தக் குருமணி ஆஸ்திகத்தை நிலைநாட்டவல்லவோ வந்தனர். எல்லா நன்மைக்கும, எல்லாத் தண்மைக்கும், எல்லா அன்பிற்கும், எல்லா நியாயததிற்கும், எல்லா உயர்திறப்பேருணாவிற்கும் பெருநிலைக்களமாம் ஆஸ்திகமின்றி எதுதான் நிலைநிற்கும். ஆஸ்திகத்தின் ஸொரூப மகிமையை முற்றுமுணர்ந்தவள்ளலாதலின் எங்குருராயன் ஆஸ்திகத்தை நிலைநாட்ட வெழுந்தனர் என்க. ஸ்ரீ நம்பியாண்டார் நம்பிகள் எமது குருநாதனையுற்று "வையம் மகிழவும்" "யாம் வாழவும்" வந்தனரென்றும், பெருமான் "அம்ம" வென அழுதது உயிர்கண் மாட்டுவைத்த பெருங்

கருணை என்றும் "அம்மென்குதலைச் செவ்வாய்" என்ற பாசுரப் பகுதியில் வெளியிட்டருளினர். ஆஸ்திகமே உயிர்களது அல்லலினைத்திற்கும் பெருமருந்து, என்று கண்டு "ஆஸ்திகத்தையே (Faith in God) உயிர்கட்களித்தனர். ஆஸ்திகத்தை யளித்து உயிர்களை ஈடேற்றினதையே "வையம் மகிழ யாம்வாழ" என்று நம்பிகளும் "வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்க, பூதபரம்பரை பொலியப் புனிதவாய் மலர்ந்தழுத, சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்" என்று அருண்மொழித் தேவரும (ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகளும்) திருவாய்மலர்ந்தருளினமை வெறும் முகமனன்றென்பதை "ஸ்ரீ ஞானஸம்பந்தப் பேரருளாளன் மலர்வாய்ப் பிறந்த வாசகத்தேனைப் பருகினோர்க் கையமறவிளங்கும். பௌத்தர்கள் "இறைவனில்லை யென்றுகூறுவர் என்பதும்" சமணர்கள் "உண்டோ இல்லையோவென் றையப்படுவார், என்பதும" பௌத்தர்களது "பஞ்சஸ்கந்த" சமணர்களது "சபதபங்கி" கோட்களுந தெரிவிக்கும். ஸ்ரீ ஞான சம்பந்தப் பெருமான் பௌத்தர்களையும் சமணர்களையுங் கடிந்தது அன்னோர்களது நாஸ்திகத்தினின்றும் உலகத்தாரை யுய்விக்கவேண்டியே யன்றி அப்பௌத்தர் சமணர்களது "பொறை யுண்மை" "உயிர்க்கிரங்கல்" முதலிய நீதிகளைக் களையவன்றென்பதை யாமுணரலாம். * "ஈசன் எமையாளுடைய வெந்தைபெருமான் இறைவன் என்றும், தனையே பேசுதல் செயாவமணா புத்தரவா" என்றும, "அத்தகு பொருளுண்டு மில்லையுமென்றுநின்றவர் கச்சமாவொத தொவ்வாமை மொழிந்து வாதிலழிநதெழுந்த" என்றும் புத்தர் சமணுதிகளின் நாஸ்திகத்தை வெளியிட்டார். பெருவள்ளலாகிய காழிப் பெருந்தகையார் தார்மிக குணங்களெங்கு காணப்படினு மவைகளைக் கடிந்தாரல்லர் என்பதை "நீதிபலவுந் தன்னதுருவாம்" என்று கூறிய அற்புதத் திருவாக்கே நிறுத்தும். பெருங்குணங்கள் எங்கு காணப்படினு மங்கு ஈசன் ஸந்நிதியுண்டென்பதைச் செவ்வனே காண்பித்தருளினர். "தேசமதெலாமருவி நின்று பரவித்திகழ நின்ற புகழோன்" என்று எல்லா உலக உயிர்களினூடுருவிச் சென்றெல்லா வசேதனத்தையு மசைவித்தும், சேதனத்தை யறிவித்தும் நிற்கும் எம்மிறைவனை யென்றும் எல்லா வுயிர்களும் பற்றி வாழ்த்தியே யுய்யவேண்டியவர்கள் என்பதைத் தெரிவித்தார். இதனுல் எல்லா மாந்தர்களுந் தர்மாதி நற்குணங்களினுலடைய விரும்பும் பெரும் பேற்றிற் குறைவிடம் ஈசனென்பதை வெளியிட்டருளினர். பெரு நலங்களுக்கெல்லாம் நிலைக்

* நூற்றுவக்கத்திற்குறித்த தமிழ்மறைப்பாக்களைக்காண்க.

களமாகிய இறைவனை விட்டு இத்தர்மாதிகளுக்குப் புகலிடம் வேறின்றென்பதைச் சைவத்திற் ஸத்யம், சௌசம் முதலிய பல தேகவுறுப்புகளையும், இத்தர்ம குணங்களத்தனைக்கும் உள் நோக்கமாகிய ஆஸ்திகமெனுங் கண்ணையுங் கொண்டு படிந்து கிடக்குந் தார்மிக வான்மாவை வெள்ளை விடையாகவும், அவனது இருதய கமலத்திலாரோகணித்துத் தன்னாணைவழி நடத்தும்பேரறிவும் பேரன்புமாகிய பெருஞ்சோதியை அவ்விடையிலாரோகணித்துநடாத்தும் நாதனாகவும் உருவகஞ் செய்திருப்பதை ஓதாதுணர்ந்து காழிவந்தருளுங் கற்பகக் கனியின் செந்தேனுருவாங் கவுணியர்பெருமானுளத்துணர்ந்தவராதலின் "தோடுடைய செவியன்" என்று எல்லா ஆன்மாக்களும் பல வழிகளாலும் பல மொழிகளாலுங் கூவியழைப்பதைக் கேட்டருளுமிறைவனையும் அவ்விறைவனே பலவித நற்குணங்களுக்கும் புகலிடமென்பதை "விடையேறி" * என்றுந் தெரிவித்தார். பௌத்தர்களிலும் சமணர்களிலுங்கூட பெரும்பான்மையோர் புத்தனையும் அருகனையும் (ஏனைய மதவாதிகள் அவரவர்களது விக்கிரகங்களை வணங்குவதுபோலவே,) வணங்குவதே தர்மத்தையு மிறைவனையும் பிறிக்கவொண்ணாதென்பதைக் காட்டும். இத்தர்மத்திற்குறைவிடம் பரமாப்தனாய பரமன் என்பது ஸத்தியம் என முழுமுதற்கடவுளே "தர்மாதாரம் மஹேசானம் நஜாநாதி கதம் ந்ருப" தர்மமியற்றுவதற்கு மூலாதாரமாக யானுளன் என்பதை மாந்தர் அறியவில்லையே என்று இரங்கியருளியதை ஸ்ரீ ஸ்காந்தபுராணம் விசதப்படுத்தும். இதற்கு மாறாகக் கூறுந் நூற்கள் யாவும் பொய். அவை தன்னுண்மை யறியாதார் கூற்றேயாகும் ஆதலின் "சிந்

* For a fuller explanation of the Symbology involved in the Symbol of Siva riding over the Bull and in the Bull with bended knees and hind legs before the Image of Siva Lingam in the Temple, *Vide* our article on "The Rationale of Symbolic Worship:" The chief point to be noted here is the fact that while all its other organs represent various Dharmas such as Purity, Truth, Patience etc., the whole aspect of all these higher attributes is known by the pointed look of the eyes, which represent "The Child-like Faith in God" and God is the Inner Spirit which guides all men towards perfection. How vain is the attempt of some persons, who are false even unto themselves to divorse Morality from Religion! Morality without Religion! It can not be! *It is a lie.*

தையில் சமணேடுதோர் சொன்ன புந்தியிலுரையவைப் பொருள் கொள்ளாதே” என்றும் “சாக்கியக்கயவர்றலை பறிக்கையரும் பொய் யினூலாக்கிய மொழியவை பிழையவையாதலால்” என்றும் “நீதி யாதிகளைப் புகழ்ந்த” எங்குருநாதன் கடிந்தார். ஆனதுபற்றி “முதல்வனை வழிபடுவீர்” என்றுபதேசித்தாஸ்திகத்தை நிலைநாட் டினார். “உய்யுங்காரணமுண்டென்று கருதுமின்” என்றுமுபதே சித்தார் நம்பரமாசாரியர். ஸ்ரீ வாகீசப் பெருந்தகையாரும் “நடையை மெய்யென்று நாத்திகம் பேசாதே” என்றும “என்னிலாருமெனக் கினியாரிலை என்னிலுமினியாளொருவனுளன்” என்றும “கனி யினுங் கட்டிப்பட்ட கரும்பினும், பனிமலர் குழற்பாவை நல்லா ரினுந்,தனிமுடிக வித்தாளு மரசினு,மினியன் றன்னடைந்தார்க்கிடை மருதனே” என்று முபதேசித்தார். ஸ்ரீ சுந்தரமூர்த்திகளும் “வெய் தாய வினைக்கடலிற் றடுமாறுமுயிர்க்குமிக விரங்கி யருள்புரிந்து வீடுபேறாக்கம் பெய்தானை” என்றும், ஸ்ரீ வாதவூர் வள்ளலும் “தெய்வமென்பதோர் பொருளது கருதலு, மாறுகோடி மாயாசத்தி கள், வேறு வேறு தம்மாயைகடொடங்கின, வாத்தமாளாயலவர் கூடி, நாத்திகம்பேசி நாத்தழும்பேறினர்” என்றும் நாத்திகத்தைக் கண்டித்தார்.

ஸ்ரீ வாகீசப் பெருந்தகையார் “நல்லெண்ணந் தீயவெண்ணம், தர்மாதர்மோபதேசம் முதலியவைகள் ஸர்வேச்வரனொருவனையே தொடர்ந்ததென்பதையு மவனருளாலேயே யிவைகளான்மாவிற்குத் தோன்றினவென்பதையும் “நானேதுமறியாமே யென்னுள் வந்து நல்லனவுந் தீயனவுங் காட்டா நின்றாய்” என்ற வமுத ஸூக்திகளா லறிவுறுத்தார். ஸ்ரீ மாணிக்கவாசக மூர்த்திகளும் “நானொரென் னுள்ளமார் ஞானங்களாரென்னையாரறிவார்—வானோர் பிரானென்னை யாண்டிலனேல்” என்று திருவாய்மலர்ந்தார். “த்ருஶோ தர்ஶயிதாத்மா தஸ்ய தர்ஶயிதா ஶிவ:”—காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போற் காணவுள்ளதனைக் கண்டு காட்டலின்” என்ற சிவ ஞான போதத்தின்படி எமக்குள்ளிருந்து எம்மைக் காட்டி எமக்கு வழிகாட்டும் பெருமானொருவனையே ஸத்ஸம்பிரதாய கிரந்தங்கள் போதிக்கின்றன. ஸதாசாரியர்களுபதேசிப்பது மதுவே. ஸந்மார்க்கி கள் பர

ஈச்வரனை வழிபடவேண்டிய மார்க்கத்தைக்கவனேற்படுத்திய வுணர் ச்சி (Feeling) யும் ஊகமும் (Reason) போதாதோ, சாஸ்திரமென்

பதொன்று வேண்டப்படுமோ? பலவகைப்பட்ட சமயங்களிற் பல சாத்திரங்களுண்மையால் அவைகளிலெதை யங்கீகரிப்பது? ஏதாவதொன்றை யங்கீகரிப்பின் மற்றவைகளின கதி என்னே?—இத்தகைய கேள்விகளுக்கு விடை யிறுப்பதவசியமே. உணர்ச்சியு மூகமுங் கடவுளாலேற்பட்ட துண்மையே. இவைகளையே யாம் மேன்மேலும் வளர்த்திடின் கடவுளைக் காணலாமென்பதுமுண்மையே. "நூலும் வேண்டுமோ நுண்ணர்ந்தோர்கட்கே" என்றார் ஸ்ரீமத் - அப்பர் சுவாமிகளும்.

"உடம்பெனு மனைய கத்து வுள்ளமே தகளி யாக
மடம்படு முணர்நெய் யட்டி வுயிரெனுந திரிம யக்கி
யிடம்படு ஞானத தீயா லெரிகொள விருந்து நோக்கிற்
கடம்பமர் காளை தாதை கழலடி காண லாமே.

உள்குவா ருள்ளத தானை யுணர்வெனும் பெருமை யானை
யுள்கினே னுனுங காண்பா னுருகினே னூறி யூறி
யெள்கினே னெந்தை பெம்மா னிருதலை மின்னு கின்ற
கொள்ளிமே லெறும்பெ னுள்ள மெங்ஙனங் கூடு மாறே."

என்பனவாதி பலவமுத வுபதேசங்களா லுணர்ச்சியையுஞ் ஞானத்தையுங்கொண்டுமே "சித்தத்துருகிச சிவனெம்பிரானென்று சிந்தையுள்ளே பித்துப்பெருகப் பிதற்றியுய்யலா"மென்று மொழிந்தார் முனிவரர் கோமானாகிய மொழிக்கரசர். ஆயினுமப்பெருந்தகையாரே "மறைநான்குமானா யாறங்கமானாய்" "விரித்தானை நான்மறையோடங்கமாறும" என்று அடிக்கடி முதலவனைச் சாஸ்திர கர்த்தாவென்றுந துதித்தார். "ஓதிமன்னுயிரேத்துமொருவனை" என்று மாந்தரைச் சாஸ்திராப்பியாஸிகளென்றுங் கழறினர். தெய்வமொன்றுண்டென்று வழிபடும் பெருமைவாய்ந்த மதவாதிகளிதுகாறும் "நூற்களை" யுமாதாரமாகக் கொண்டே வாழ்கின்றனர். கர்த்தனுக்குக் கோயில் வேண்டாமென்று கண்டித்த கம்பீரவான்களும் "கிரந்த"ங்கொண்டனர் "மொழி" வேண்டாமென்று முனிந்தவர் மேற் சென்றது மவரைப பின்றொடர்ந்தார்க் கவர் மொழிந்த மொழிகளும் "மொழி" யாகின்றன கண்டீர். அம்மையப்பனு மண்ணலொருவனுக்கருளுரு வனுவசியகமென்ற கங்கரித்தழித்த வாண்டைகளும் புத்தகமொன்றைப் போற்றி வாழ்ந்தனர். இவைகளை யாமுற்று நோக்குழி, "நூலுண்டாய விதமென்னவென நுழைந்து பார்க்கவேண்டி யிருக்கின்றது. நூலும் வேண்டாமென்று நுவலு

கின்றவர் தாமுமிதற்கு நியாயமுண்டோவென நோக்கவேண்டியிருக்கின்றது. கிஞ்சிற்றறிவிற் கெட்டியவரையாஞ் சீர்தூக்கிப்பார்க்கும்போது "மாந்தர்க்கும் விலங்குகட்குமுள்ள வேற்றுமையை வெளிப்படுத்தும் பகுத்தறிவின் பயனே" நூலாகும். மனிதர்க்கும் மந்திகட்குமுள்ள மாற்றத்தை மகிழ்வித்தமன்னறிவே மறையாகும். மாந்தரேயவரவரெண்ணங்களைப் பிறர்க்கறிவிக்க மொழிகொடு பேச வல்லார். அம்மொழியே நூலாயது. பன்னாள்வரை நூற்கள்யாவும் "கர்ணாத்கர்ணகதேனச" ("கர்ணாத் கர்ணாகதேந ச") என்ற இலிங்க வசனப்படியொருவன் மாட்டுக்கேட்டே அறிவுநூற் பரம்பரை வந்ததென்க. அதனாலேயே சீடனைக் குருவினுடைய "அந்தேவாஸி" (அண்மையிலுறைபவன்) என்று கூறினார்கள். அதனாலேயே நூலும் "சுருதி" (கேள்வி) யாயிற்று. இப்படிப பன்னாட் கழிந்த பின்னரே "முதுமொழி" யாகிய நூலுண்டாயிற்று. முதல் முதலில் பிதாவே தன் மக்கட்கு நல்வழி போதிப்பானாயினன். பன்னூற்றாண்டுகட்கு முன்னர் பிதாவே தன்னருமைமக்களாணாயினும் பெண்ணாயினுமவர்க்கமுதமொழி மொழிந்தனன். நமது நாட்டில் சில சடங்குகளியற்றிப பின்னர் ஓதுவித்த நாட்களிலுங்கூட ஆண் பெண்ணிருவர்க்குமவ்வாறே அறிவு பயிற்சி செய்யப்பட்டு வந்தமை நுண்ணறிவாளர்க்குக் கிருஹ்ய நூற்களினால் வியக்தமாகும். பிதாவுக்கும் புத்திரனுக்குமுள்ள சம்பந்தம் "அன்பினால்" ஏற்பட்டது. அவ்வன்பினாலேயே பிதாகுமாரனுக்கு ஆப்தனானான். இவ்வன்பினாலேயே பிதாவின் மொழி புத்திரனுக்குப் பத்தியமாயிற்று. இவ்வாறு நட அவ்வாறு நடக்கவொண்ணாதென ஆப்தனேயொருவனுக்கெடுத்துரைப்பன். இதனாலாப்தன் மொழி "ஹித"த்தைப் பயப்பதெனப்பட்டு, பிரமாணமாயிற்று. இத்தகைய காரணங்களால் அன்பினால் பெற்ற பிதாவே முதல் முதலில் மைந்தருக்குக் குருவாயினான். பன்னாட்கழிந்து வேறு குருவுண்டான காலத்தும் பிதாவின் றன்மை குருவினிடத்தும், புத்திரன்றன்மைச் சீடனிடத்தும் வருவிக்கப்பட்டது. "ஶிஷ்ய: புத்ர இதி ப்ரோக்த: ஸ ச ஶிஷ்யஶ்ச யோஷித: । ஜாத: புத்ரோந்த்யபுத்ரோऽவிதரம் பூஜயேத்குரும் ॥ நியோஜயதி புத்ரம் வை ஸம்ஸாரே ஜநக: பிதா । ஸந்தாரயதி ஸம்ஸாராத் குருர்வை போதக: பிதா ॥" என்பனவாதிவாக்கியங்களால் சீடன் புத்திரனாகவும், குரு பிதாவாகவும் கணிக்கப்பட்டது காண்க. சைவதீக்ஷையில் அடிக்கடிச் சீடனைச்

சிசுவென்று விளிக்கப்பட்ட வுண்மை சைவசாஸ்திரங்களில் வியக்தம். "ஶிஷ்யஸ்ய வித்யோபதேஶார்த்தம் புஷ்பாட்யேந ஜலேந து। ஹஸ்தௌ விஶோத்ய .... காஞ்சித் வித்யாம் ப்ரதாபயேத்" "வித்தியோபதேசத்தின்பொருட்டு புஷ்பங்களைக்கொண்ட ஜலத்தால் சிசுவினுடைய கைகளைச் சுத்திசெய்து சில வித்தையை (சிவாகமத்தை)க் கொடுக்க" என்பனவாதி பல்லிடங்களிலும் சீடன் சிசுவெனப்பட்டமைவியக்தம். இவ்வாறு பகுத்தறிவின் முதிர்ச்சியால் மாநதர்கள் ஒருவருக்கொருவர் தத்தமதபிப்பிராயங்களைப் பகிர்நதுகொள்ளும் போது அன்பின் மிகுதியால் கருணையுடைய வொருவன் மற்றவனுக் குரைத்தமொழி ஹிதமெனப்பட்டு அதுவே தன்னைக் காபபாற்று மெனக்கொள்ளப்பட்டது. அவன் வார்த்தை பத்யமாகிப் பிரமாண மாயிற்று. "ஹித" மெனத் தனக்கு அம்மொழி பட்டகாலத்து அதில் விச்வாசம்வைப்பது மாந்தர்க்குள்ள இயற்கையாய் கடவுளருளால் பவித்தமையால், இத் தன்மையைச் சிலர் வெறுத்துக்கொள்வதெற்றுக்கு. ஒருவனோரூருக்குச்செல்லும்போது மத்தியமார்க்கத்தில் குறுக்குவழிகள் பலதோன்றுங் காற்றிகைக்கும் போதொருவனிவ்வழிச் சென்றால் நன்மையுண்டாகுங் குறித்தவிடம் செல்லலாமென்றான். அவ் வழியிற்சென்று சில நன்மைகளை யடைந்ததுமவனுக்கு முன் வழிகாட்டினவனுப்தனாயினன். அவ்வாறே கடவுளை யடையவேண்டுமென்னு முணர்வும், அதற்குரிய ஆகமும் ஒருவனெண்ணத் துதித்தபோது கொஞ்சந்திகைப்புண்டான காலத்தில் ஒருவனது மொழியைக் கேட்குமபோது அஃதிவனுக்குப் பத்தியமாகி யவ்வழியிற்செல்ல முநதுகிறான். அக்காலததி லவன்மொழியே இவனுக்குப் பததியமாகி அவனே ஆப்தனாகிறான். இதனாற் றனது பிரத்தியக்ஷத்திலும, அனுமானததிலும், ஆப்தன் மொழியே இவனுக்குப் பற்றுக்கோடாய நின்றது. இக்காரணத்தினாலேயே பிரததியக்ஷப்பிரமாணததிலும், அனுமானப் பிரமாணத்திலும ஆப்தன் மொழி யதிகமாய் பாராட்டத்தகுந்ததாய் இவனுக்குப் பூலிததது. அக்காலத்தில் பிரததியக்ஷதிருஷ்டி யிவனுக்கில்லாமற்போகவில்லை. அனுமானவெளிச்ச மிவனுக்குக் கிட்டாமறபோகவில்லை. என்றாலும் பிரத்தியக்ஷமாய்ப் பார்த்தபோதும், அனுமானவொளி மின்னும் போது மிவனுககுத் திகைபபுண்டாயின், இவ்வாறு "செல்லென்ற ஆப்தன்மொழியையே விசுவசிக்க நேர்ந்தது. அற்றாயினும் தனது

(பிரத்யக்ஷ) திருஷ்டியும், அனுமான யூகமும் உடனிருந்தேதான் ஆப்தன்மொழியை ஏற்றது. இதனால் ஆப்தன்மொழியை யேற்ற காலததிற்றனாது பிரத்தியக்ஷவனுமானங்களை யொழித்துவிடவேண்டு மென்பதல்ல. இவைகளுக்கு மாறுபாடாகக்கொள்வதை "பிராந்தி" யென்று வேதமறிந்தவர்கள் கூறுவார்கள் 'ஈபயாவ-ஸிரயெ-ஷ-வஹ-யா ஜ்ராந்திர-வ்ரிதெ" என்ற வாக்கியத்தின்படி "உள்ளதுளளவாறுகக்காணமல் மாறுபடின் அதுவே பிராந்தியா கும." இதனுலாபதன்மொழி பிரத்தியக்ஷானுமானாதிகளுக்கு ஒத்திருப்பினது பிரமாணமென்பது ஸித்தம் இக காரணம்பற்றியே தருக்கநூலுடையார் "பிரமாணங்களுள் ஆபதன்மொழி அல்லது ஆகமம வன்மையுடைத்தென்று கூறினர்" ஏனெனில் பிரத்தியக்ஷானுமானங்களுடனிருந்து மிவனை யுறும்போது தெளிவிப்பதனுலென்க ஆகம விச்வாசம ஏற்படுவதறகுச் சில தருணங்களுண்டு. குருட்டு நமபிக்கை விச்வாசததிற்சேராது. ஒருவனுண்மையாகவே செலலவமயம வேண்டும். அவ வமயத்தை வீணுக்காதுசெல்லவும் வேண்டும். செல்லும்போது பல வழிகளைக்கண்டு திகைப்புண்டாக வேண்டும். அத்திகைப்பினு லிதுவோ வழி யதுவோ வழியென வருநதவேண்டும. அத்தருண மிவனுக்கு ஊனுறக்க மின்பாதிகளும் வேம்பெனத் தோன்றவேண்டும். எநத மஹானுபாவன் நமக்குச் சரியானவழி யிதுவெனக்காட்டுவான். எவன் நம்மைத் தேற்றுவான். நம் மனேவியாகூலத்தை யெவன்போக்குவான்" என்று இவன் கதறுங்கால் அச்சமயத்தில இவனையங்களைப்போக்கி யொருவன் மொழிவானுயின் அதுவே ஆகமம. ஐயங்க ணிகழாத போதும், அதனு லிவன் வருந்தாதபோதும் ஒருவன் ஆப்தனை ஏன் றேடுகிறுன்? ஆப்தன் ஏன் உரைபாடுகிறுன்? பசியால் வருந்தினவனல்லவோ அந்நத்தை விரும்புவான்? பசியில்லாதவர் அந்நத்தைத் தேடுவரோ? கொணர்நதிடினு மவர்க்கு ருசிக்குமோ? இக்காரணம் பற்றியே ஒருவன் றன்மனதை வஞ்சிக்காமல் கடவுளை யடைய வேண்டிச் செல்லினிவனுக்குப் பலவையங்கள் நிகழும். இவன் படுஞ படும் பாடெல்லாம் படும்போதுதான் ஆப்தன்மொழி யிவனுக்குப் பத்தியமாகுமேயன்றி மற்றக்காலத்தில் ருசிக்காதென்க. எத்தன்மையால் "ஆகமமெனும் ஆப்தன்மொழி யிவனுக்குக் கிட்டுமென்பதை திவ்வியாகமங்கள் விரித்துக்கூறும். இதைப் பின்னர் விசாரிப்போம்.

இதனால் ஆகமமென்பது தான்றிகைத்துநின்றவக்கணம் இவனுக் குறுதிமொழிகூர்ந் திப்படியேசெல்லென்று கூறுவதாகும். தன்னை நடத்தவந்த முறையா லிதற்குச் சாஸ்திரமெனப் பெயரமர்ந்தது. ஆப்தனிடமிருந்து வந்த அளவில் அவ் வுபதேசத்திற்கு "ஆகமம்" என்றும், இடையிற் சத்தமென்றும, சீடன் கேட்ட வளவில் அதற்குச் "சுருதி" என்றும், தான் நடக்குமுறையால் அது சாஸ்திரமென்றும் கால வேறுபாட்டையும இட வேறுபாட்டையுந் நோக்கி ஒருபதேசமே பல பெயர்களைக்கொள்ளும. "உழைப்பின வாராதுறுதிகளுளவோ" என்ற பெரிய மொழிப்படி மாநதனை உழைத்தே பயனையடையும்படி கடவு ளமைத்திருப்பதால் அவ் வுழைப்பிற்சென்றபோ திவனுக் கையங்க ணிகழுமாதலால் அக்காலத்தி லிவனையங்களைப போக்கித் தெளிவித்ததெதுவோ அது "உறுதிமொழி" எனப்படும ஆகமம அல்லது சுருதியாகும். அதாவது பிரத்தியக்ஷானுமானங்களுக்கு மாறுபடாவண்ணம உண்மையை ஐயுறும்போ துணர்த்துவதெதுவோ அதுவே உறுதிமொழியெனப் படும். உணர்ச்சிக்கும் ஊகத்திறகும விரோதம் பயவாதுள்ள உண்மைமொழியே உபதேசமெனப்படும் ஆகமமொழி. இதையே நல்லறிவென்று மேலோர் கூறுநிறபர். "யஶாயஶாகாஶஸம் விதிவிஜ்ஞாதி வஶிகீதஶ்ருதெ" என்று உணர்ச்சிக்கும், ஊகத்துக்கும் மாறுபடா வண்ணம் வந்த் ஞானமே நல்லறிவென்று நாட்டப்பட்டது. ஸ்ரீ பௌஷ்கராகமத்திலும் "ஆவொதாகிஶர்ஶஹேஸொவி வஶொாக்ஷா வெயஶுகஸாயநஃ । வஶதஸ்ரக்ஷணாநுஶேநந யஶிவாயஶும் ஸாநிஶ்வி தஃ । யொவதிஹொயஶோவஸ்தாகஃ" என்று உணாசசி (பிரத்தியக்ஷம்) ஊகம் (அனுமானம்) என்பவைகளுக்கு விரோதமுறு வண்ணம் உணர்ச்சி யூகங்களுக்குப பொறுத்தமாகவே உள்ளக் காக்ஷி நிகழுமாறுரைத்துத் தெளிவிப்போன் ஆப்தன் என்றும், அவன் மொழியே ஆகமமென்றும் சொல்லப்பட்டது. இதனாற் கண்மூடித் தனமாய் அதாவது மூடத்தனமாய் எதையும் அப்படி யதிற்சொல் லியது இப்படி யிதிற் சொல்லியதென்று கூறி நம்புவதல்லவென்க. ஞானத்திற்கும் மூடத்தன்மைக்கும் வெகுதூரமென்க. ஒருவன் ஒரு கொள்கையை நம்முன்னர் விளம்பிடினது முதலில் உணர்ச்சிக் கும் பின்னர் ஊகத்திற்கும் பொறுத்தமுடைத்தாவென்பதைத் தீர்மானித்தே கொள்ளவேண்டும் என்க.

ஆம், மாந்தர்க்கு ஒரே சாஸ்திரமிருப்பினிது நியாயந்தான். பல சாஸ்திரங்களிருந்துழி எதை யாங் கொள்வது எதை யாந் தள்ளுவது? பல் வேறு தேசத்தார் பல் வேறு ஆப்தர்களைப் போற்றிவாழ்கின்றமை கண்கூடு,—இவர்களில் எவர்வாக்குப்பிரமாணம்? யாங் கண்ட வுண்மை யிது. ஒருவர் சொல்லாததை மற்றொருவர் சொல்லியிருக்கலாம். அல்லது ஒருவர் ஒரு விஷயத்தை மற்றவரைவிட வற்புறுத்திக் கூறியிருக்கலாம். இதனாலவர்கள் வாக்குகளில் நாம் விரோதங்கொள்ளவேண்டுவதில்லை. அப்படிப் பலவிதமாக வித்தியாசங்காணப்படின் நமது ஊகமுணர்ச்சிகட்குப் பொருத்தமுடைத்தெதுவோ அது பிரமாணமெனை யாங் கொள்வதிற் குறைவில்லை.

சாஸ்திரமென்பது "ஜகத்ஜீவபரமென்பனவைகளின் லக்ஷணங்களையும் அவ்வித லக்ஷணங்களுக்கேற்ப யாம் நடக்குமுறையையுங் கூறுவதாகும். இவ்விஷயங்களில் மாந்தர்கள் செய்த பல சாஸ்திரங்களிலொருவர் சொன்னபடி வேறொருவர் சொல்லவில்லையென்பதுமோர் விதத்திலுண்மையே. இஃதெதனாலேற்பட்டதென்புழி, உயிர்கள் மலத்தடையுடைய இச்சாஞானங்களைக்கொண்டவர்கள். மலத்தடை எவ்வளவுக் கெவ்வளவு நீக்கமடைகின்றதோ, அதற்குத் தகுந்தவாறே அவர்களது "உள்ளக்காக்ஷியு" மேற்படுகின்றது. எனவே கடவுளது சித்சக்தி வியஞ்சகமெப்படியோ அதற்குத் தகுந்தவாறுதான் அவர்களது உண்மைக்காக்ஷியாகும். இதனால் சாஸ்திரங்களை யியற்றினோர் பலரும் கடவுளருளொளிகொண்டு இயற்றினவர்களே. ஆயினுந் தாரதம்மியமிருக்கலாம். இத்தாரதம்மியம் மலத்தடை நீக்கத்தைப்பொறுத்தது. கொஞ்சதூரம் வரையில் நமக்குபகரித்துப் பின்னர் மாந்தரை யவரவர்களதறிவைக்கொண்டுழைத்துக் கைக்கொள்ளும்படியே சகல வமைப்புகளையுங் கருணாநிதியாகிய கர்த்தன் கட்டளையிட்டதால் நாமுழைத்தே யுண்மையை யுணரவேண்டும். உழைத்துண்பவர்க்கே உருசிதட்டும். சாஸ்திரம் பலவிருக்கின்றதென்று யாங்காணி லிவைகளைச் சோதித்துக்கோடலே யமைவுடைத்தென்பதெம தபிப்பிராயம்.

இவ்வாறு காணும்போது பலவேறு ஞானநிலைமையையுடைய உயிர்களால் பல நூறாக ளியற்றப்பட்டிருக்கலாம். அவ்வாறே மாந்தர்கள், இருடிகள், தேவர்கள், தேவர்களுட்சிறந்த பிரமன், அவனினுஞ்சிறந்த விஷ்ணு, அவனினுஞ்சிறந்த ருத்ரன, அவனினுஞ் சிறந்த மகேச்வரன் முதலிய உயர்ந்த உயிர் வர்க்கங்களாற் பல சாத்

திரங்க ளேற்பட்டிருக்கின்றனவென்றும், இவர்களுடைய ஞான நிலைமை பல்வேறு திறத்தனவென்றும இவர்களும் பசுக்களாகையா லிவர்கள்வாக்கும் பலவம்சங்களிற்றவறுடைத்தென்றும் மேலோர் கூறுநிற்பர்.

"ந வாத்யம் பௌருஷேயேண ஆர்ஷம் ஹி தைவிகம் ததா। ந தைவம் ப்ரஹ்மணோ வாக்யம் வைஷ்ணவம் ப்ரஹ்மஜந்மநா। ததா ரௌத்ரம் ந ஹரிணா ப்ரணீதேந ஸிவாத்மகம்। பாஹ்யம் ஸைவ்யேந பாஹ்யே ஸ்யாத் வைஸிஷ்ட்யாதயோபாயோ பாஹ்யஸைவ்ய ததா:। ஸிவாகமாவிரோதேந ஸாஸ்த்ரம் ஸர்வம் வ்யவஸ்திதம்। நாந்யஸாஸ்த்ரவிரோதேந தத்ஸம்வாததயாபவா। ஸிவஸாஸ்த்ரம் வ்யவஸ்தாப்யம் தத்ப்ராப்யம் ப்ராபகம் யத:। யஸ்ய யஸ்ய ஹி ஸாஸ்த்ரஸ்ய யாவதீ வ்யாப்திரிஷ்யதே। தாவதேவாவச்சின்னம் ப்ராமாண்யம் தஸ்ய தஸ்ய வ॥" புருஷ வாக்கியத்திலும் ரிஷிகள் வாக்கியங்கள் பிரமாணமாகும. புருஷ வாக்கியங்களைக்கொண்டு ரிஷிகள்வாக்கியத்தை மறுதலிக்கப்படாது. ரிஷிகள்வாக்கியதகிலும் தேவர்கள்வாக்குப பலமுடைத்து. தேவர் கள்வாக்கை ரிஷிகள்வாக்கினுல் மறுதலிக்கப்படாது. தேவர்கள வாக்கிலும் பிரமனதுவாக்கியம பிரதானமாகும். தேவர்கள்வாக்கி னுல் பிரமாவினதுவாக்கியத்தைத் தள்ளப்படாது. பிரமாவினது வாக்கியத்திலும் விண்டுவின்வாக்கியம் பிரபலமுடைதது. பிரமா வினதுவாக்கியத்தினுல் விஷ்ணுவாக்கியத்தைத் தள்ளமுடியாது. விஷ்ணுவாக்கியத்திலும உருத்திரன்வாக்கியம் பிரபலமானது. விஷ் ணுவாக்கியத்தைக்கொண்டு உருத்திரவாக்கியத்தை மறுதலிக்கப் படாது. உருத்திரவாக்கியத்திலும் சிவவாக்கியம் பிரமாணமுடை த்து. இவ்வாறே மேலிட்ட சாஸ்திரபபிரமாணத்தைக் கீழிட்ட சாஸ்திரம் மறுதலிக்க வன்மையுடைத்தன்று. மேலிட்ட சாஸ்திரம் கீழிட்ட சாஸ்திரத்தைப்புறக்கணிக்க வதிகாரமுண்டு. இதனுல் ஆத் மாக்கள் ஒரு வர்க்கத்தைச் சேர்ந்தோரேயாயினும் அறிவாற்றல் களிற்றூர தம்மியமுடையார். "ஆத்மாந: ஸமவிஜ்ஞாநா: பரேயத:। ஜ்ஞாநைஸ்வர்யாதி வைஷம்யம் ஸம்ப்ராப்தா பராபரா:॥" என்று வாயுசம்ஹிதையும் விளக்கும். ஞானைச்வர்யாதி களை யதிகமுடையோர் வாக்கியங் கீழிட்டார் வாக்கியத்திலும் பிராமாணமுடைத்து.

வியஞ்ஜகங்களாகிய அந்தக்கரண, ஞானேந்திரியாதிகளைக் கொண்டறிகின்ற வான்மாக்களுக்கு ஞானத்திலேற்றத்தாழ்ச்சியுண்டென்பதுண்மை. இவர்கள் கிஞ்சிக்ஞர்கள். இவர்களிடந் தோஷங்களுண்டு தோஷங்களையுடையார் "சதாசிவாதிகளுமென்பதை"

"ஸதா³ஶிவாத³யஸ்ஸர்வே ப்ரதிஷ்டா²ந்தேऽப்யதி⁴ஷ்டி²தா: ।
ப்ரதிஷ்டா²ஸ்வவிகாராத்³யா தோ³ஷா ஸம்ப்ரத்யவஸ்தி²தா: ॥"

வெனும்வாக்கியங்களாலறிகின்றோம். அப்படியிருந்தும் "தேऽபி ப்ரதிஷ்டா²ஸாவேஶவஶாத³நுக்³ரஹம் । அந்யாத்மநாம் க்³ருஹ்ணந்தி ஶிவேநாதி⁴ஷ்டி²தா: ॥" "தாங்களும் பரமனது அனுக்கிரகத்தையடைந்து மற்ற ஆத்மாக்களை யனுக்கிரகிக்கின்றார்கள்" என்று கூறப்பட்டிருப்பதால் ஈச்வரனது அருளொளியைக்கொண்டே அவர்களும் தங்களுக்குரிய ஞானைச்வர்யாதிகளைக்கொண்டு சாஸ்திராதிகளையுண்டு பண்ணியகாலத்தும், முற்றிலும் பிழையெனத்தள்ளாமல் எவ்வளவுவரையில் பிரமாணமென அங்கீகரிக்கப்படவேண்டுமோ அவ்வாறங்கீகரிப்பதில் தோஷமில்லையென்க. இவ்வுண்மையை நூற்களியற்றிய பல மாந்தர்கள் விஷயத்திலு முபயோகித்துணர்வாமென்க.

இவ்வாறு ஜீவர்கள் அல்லது பசுக்களுடைய வாக்கியங்கள் தோஷங்களுடையனவெனின், நிர்தோஷமான வாக்கொன்றிருத்தல் வேண்டும். பசுக்களதுவாக்குகள் தோஷமுடைத்தெனில் "பசுபதி"யின் வாக்கியந் தோஷமுடைத்தல்லவாகும். தந்த, தாலு, ஓஷ்டம், அதரம், கண்ட முதலியவைகளில்லாக் கடவுள் அவ்வவ் வவயவங்கள் கொண்டுச்சரிக்கப்படவேண்டிய அகாராதியக்ஷர ஸமூகங்களுடன் கூடிய நூலுக்கு எவ்வாறு கர்த்தனாதல்சாலும்? முதல்வன் தந்தாலுக்களில்லாதவனென்றும், ஜீவர்கள் அவைகளின் உதவியைப் பெற்றுளார் என்றும், இவ்வுதவிகள் முதல்வனுக்கு வேண்டப்படாதபோதே அவன் எல்லா வறிவுமுடையானென்றும், இவைக ளிருந்தும் ஜீவர்கள் அல்ப அறிவினர்களென்றும் வாயுசங்கிதை யானது "அஸ்த்யஸ்ய ஸர்வவிஷயம் ஸர்வஜ்ஞாநமேதத் ஏஷ்வ யத்³யதா²வஸ்தி²தம் வஸ்து தத்ததை²வ ஸதா³ஶிவ: । அயத்நேநைவ ஜாநாதி தஸ்மாத்ஸர்வஜ்ஞ உச்யதே"— "ஈஶாய ஜ்ஞாந ஸித்³த்⁴யர்த²ம் இந்த்³ரியேஷ்வஸ்தி கரணோபேநாநந்தி ஶாயாணவேஶோ

வ்ரதா:" எனும் வாக்கியங்களால் விளக்கும். இதனால் கடவுள் இவ் வவயவங்களைக் கொள்ளாதபோது அவன் எப்படி சாஸ்திரகர்த்தனாதல்சாலும்?

பரமபதி ஒருவனுண்டேல் அவன் தனுகரணபுவனபோகாத்மக மான சகல ஜகத்தையும் மாநதர்களுக்களித்ததுபோலவே, தன்னை யடைவதற்குரிய நெறிமுறைகளடங்கிய வுண்மைகளை மாநதர்களுக்கு அளிக்காநிரான். சற்று நிதானித்துப்பார்மின் 'அறிவை உபயோகித்தும், அறிவுநூலை யியற்றியும் வாழும் அறிஞர்களிடம் முதல்வன் றனது அறிவை உபயோகிக்காமல் வேறு எதனிடம்செலுத்துவான். அறிவுடையார்க்கன்றோ அறிவு பயன்படும. சேதனங்களை அறிவித்தும் அசேதனங்களை யசைவித்தும் விளங்குமாற்றா லல்லவோ "எம்பெருமான் ஞானக்கிரியாரூபன்" என்று கூறப்பட்டான். "சைதந்யத்ருக்க்ரியாவிஶ்வஸ்ய ஸர்வஜ்ஞாநக்ரியாத்மகம்" என்பது வாக்கியம். பசுவினது ஞாதிருத்வம், கர்த்திருத்வம் முதலியவைகளும் முதல்வனது அதீனமென்பதை "பஶோரபிஶக்த்ருக்ஸம்வேத்ர: ப்ரேரணப்ரேரகம்" எனும் ஆகமவாக்கியந் நிறுத்துமென்க. "ஜீவாத்மநோர்யாஸம்பந்தம் போத்ய போதகஸம்போதம்" என்ற வாக்கியப்படி முதல்வனுக்கும் ஜீவனுக்குமுள்ள சம்பந்தம் அறிவித்தலும், அறிவித்தாலறிதலுமாகையால், யாமறியு மெவ்வுண்மையும் அவன் அறிவிக்க நாமறிநததாகையால, எல்லா சாஸ்திர ஞானமும் அவனுடையதேயென்க. பேரறிவாள னொருவனுண்டென்று கூறும் பரமாஸ்திகமெனு மஸ்திரவாரத்திலெழுந்த சைவசித்தாந்தத்தி லிவ்வுண்மையைப்பற்றி நிஷ்கர்ஷையாகக்கூறப்படுவது யாதெனில் "ஜ்ஞாநக்ரியேச்சாரூபம் ஹி ஶம்போர்த்ருஷ்டித்ரயம் ஸ்ம்ருதம் | ஸந்நோத்ரிக்தம் ஸமஸ்தஞ்ச ஸாக்ஷாத் ஸம்வேத்தி ஸர்வதா | யஸ்மாத் விஶ்வம் ஜாநாதி கரோதிச்சதி ஸர்வதா" ஞானம், கிரியை, இச்சை எனும் மூன்றும் முதல்வனுக்கு மூன்று கண்கள். இவைகளை நயனங்களாக உருவகஞ்செய்யக்காரணம் யாதெனின், "நீ அல்லது" "நை" என்னும் தாதுவினடியாகப் பிறந்த நயனம் எனும்பெயர் கண்ணிற்கமைந்தது நடாத்துமுறை நோக்கியென்க. இப்பல்லாயிரங் கோடி யண்டங்களிலுமயர்ந்த வுயிர்களனைத்தையுந் நடாத்துமுறையால் முதல்வனுடைய இச்சாஞானக்கிரியைகளைத் தூங்காமல் என்றும் விழித்து நடாத்திப்பாதுகாக்கும் "கண்களாக" உருவக

மென்க. இச்சத்திமகோததியிற் சகல புவனங்களு மப்புவனங்களி லுள்ள உயிர்களுடன் அமிழ்ந்து கனைந்திருப்பதால் அதிலிருந்து கொண்டு பசுவானது இச்சிக்கவும், அறியவும், இயற்றவும் தன்மை யையடைந்ததென்க. “ஜ்ஞாநக்ரியாசிகீர்ஷாபி: திஸ்ருபி: ஸ்வாத்மஶக்திபி: । ஶக்திமாநீஶ்வர: ஶஶ்வத் விஶ்வம் வ்யாப்யாதிதிஷ்டதி” சக்திமா னெனப்பட்ட எமது பெருமான் ஞானம, கிரியை, இச்சையெனும் மூன்று சக்திகளால் இவ்வுலகமுழுமையும் வியாபித்துத்தனது செயல் களை நடாத்துகிறான் என்று வெளியாகியது. பசுக்கள் ஒரு தொகுப் பேயாயினும் ஞானம், ஐச்வர்யாதிகளில் தாரதம்மியங்களுடையன வாதலால் ஒரு மலமுடைய பசுக்கள் இருமலமுடைய பசுக்களை ஏவி அனுக்கிரகித்தும், இருமலமுடைய பசுக்கள் மும்மலமுடைய பசுக் களை ஏவி அனுக்கிரகித்தும்வந்து வழி வழியாகவே ஞானதிகளை விளக்குகிறான். “ வஸ்த்வாத்மநாவிப்ராபிஶா: ஸகலப்ரளயாகலா: । தமேத்ராதாரதம்யேந கலாவிஜ்ஞாநயோக்யதா: । ப்ரளயாகலஜ்ஞாநயோக்யா யதோக்தாபிஷிதா: । ப்ரளயாநதிஷ்டம் விஜ்ஞாநகேவலா: ஸகலா: । ஸகலப்ரளயாகலாநநுக்ரஹேணாதிதிஷ்டதி” என்ற பெருமொழிகளா லிவ்வுண்மை விளங்கும். அதிஷ்டிப்பதாவது அனுக்கிரகிப்பதே. செல்வமதிகமுடையார் அஃதில்லாதார்க்குச் செல்வத்தைப் பகிர்ந்தும் ஞானமதிகமுடையார் அஃதில்லாதார்க்கு அந்த ஞானத்தைப் பகிர்ந்தும் சகோதரமுறைமை பாராட்டவேண்டும் என்று எல்லோர்க்கு அம்மையப்பராகிய உமாஸஹாயனது பேரெண் ணமும் அவன் வகுத்த முறையுமாம். இதற்கு விரோதமாக உயர்ந்த ஜாதி முதலியவைகளைக்கொண்டு தருக்குதல் முதல்வன் எண்ணத் திற்கு முற்றிலும் மாறுபட்டதேயாகும். மேலிட்டார் கீழிட்டாரை யதிஷ்டிப்பதென்பது மேலிட்டார் கீழிட்டாரை அனுக்கிரகித்தலே என்பதை “ப்ரஹ்மாவிஷ்ணுஶ்ச ருத்ரஶ்ச மஹேஶாந: ஸதாஶிவ:। மந்த்ரமந்த்ரேஶ்வரா ஜ்ஞாநாதிவிஸ்த்ருதம் ததா । ஸதாஶிவ: ஸதா மேவம் ஸர்வாபி: ஸ்வமதிபி: । அதிஷ்டாயோர்த்வ தத்ஸ ஸமஸ்தஸ்தத:॥” “ லோகாநநுக்ரஹணார்த்தாய ஶிவேந பரமேஷ்டிநா ஸதாஶிவாதயஸ்ஸர்வே மந்த்ரமாத்ரேணாத்யதிஷ் டிதா: । தேஷாம் மந்த்ரமாத்ரேணைவ நயாவாயதேநாநுக்ரஹ: । அந்யா த்மநாநுக்ரஹம் தி ஶிவேநாதிஷ்டிதா:” ஸதாசிவன், மகேச்

வான், உருத்திரன், விஷ்ணு, பிரமன் முதலியவர்கள் மூர்த்திகளென்றும், இவர்களால் இவ்வுலகங்கள் வியாபிக்கப்படுமென்றும், ஸர்வேசனாகிய சிவன் இம்மூர்த்திகள் வழியாக இவையெல்லாவற்றையும் அதிஷ்டிக்கிறார் என்றும் அதனால் அவன் "ஸர்வன்" எனப்பட்டானென்றும், லோகாநுக்கிரகித்தின் பொருட்டே மூர்த்தியாத்மாக்கள் எனப்பட்ட சதாசிவாதிகள் ஸர்வேசனாகிய சிவனால் அதிஷ்டிக்கப்படுகின்றார்கள், என்றும் இம்மூர்த்தி யாத்மாக்களும். தாங்கள் அனுக்கிரகத்தை யடைந்த முறைப்படி அன்யாத்மாக்களை அனுக்கிரகிக்கின்றார்களென்றும் பெறப்பட்டது. அப்படி யாவர் தனுக்கிரக்கித்தபோதும் சிவனாலதிஷ்டிக்கப்பட்டே அனுக்கிரகிக்கின்றார்கள் என்பது பெறப்பட்டது. ஏனெனில் "[illegible]" என்ற வாக்கியத்தால் மூர்த்தியாத்மாக்களெனப்படுமிவர்களும் பாசத்தாற் பிணியுண்ட பசுக்களே யாவர். ஆன்மாக்களுக்கறிவுறுத்தும் விஷயத்திலுமிம் முறையே யாம் "[illegible]" என்று உண்மை பாஷியக்காரராகிய ஸ்ரீகண்டசசெல்வனார் கூறியபடி முக்தான்மாக்களுக்குச் சித்சக்தி நேரில் விளக்கத்தையும் மற்றையான்மாக்களுக்குப் பரம்பரையாகவு மறிவுறுத்தலுண்மையாகையால், முதல்வன் சாஸ்திரகர்த்தா வென்பதிலும் பரம்பரைக்கிரமமாகவே கொள்ளத்தகும். கைகால் முதலிய வுறுப்புகளின்றியே அரூபத்திலிருந்து பதே பதே ரூபங்களைக்கொண்ட விசித்திர வுலகுடைப்பொருள்களை யளித்தபடியே, வாய்முதலிய உறுப்புகளின்றியே ஸர்வேச்வரன் "அநாஹதம்" எனும் பேரின்ப நிச்சபத (The still enchanting music of the everspreading space) "பரநாத" த்திலிருந்தே ஆஹதம் எனும் சுரோத்திர விஷயமான வைகரிவாக்குருவமான சாஸ்திரரசனையையும் அருள்வான். நாதமானது பரை, பச்யந்தி, மத்தியமை, வைகரியாதிகளாகப் பல திறப்பட்டு நிற்கு மென்பதை உண்மைஞானிகளுணர்வார்கள். பரநாதமே வைகரியாதிகளாய் பவித்தமையைப் பின்னர் பகர்வாம்.

ஸ்ரீ பௌஷ்கரத்திலிவ் வுண்மைப் பின்வருமாறு பெறப்படுகின்றது.

'[illegible]' "முன் கூறப்பட்ட சிவன் அமூர்த்தன்

வாக்கிந்திரியாதிகளில்லாதவன். அவன் எவ்வாறு "சாஸ்திரகர்த்தனுவன்?" என்று பூர்வபக்ஷத்தைக் கூறி "அஶரீரஸ்யாபி ஸர்வஜ்ஞஸ்ய ஸ்வேச்சாயோகத: । வர்ணாதிரசநாஸ்யாத் ஸாஹதத்கார்யவத்" அமூர்த்தனுயினுந் தனது சாமர்த்தியத்தினுல் வர்ணுதிகளை (எழுத்துக்களை) சேர்த்தல் கூடும். மற்றக்காரியங்களைப்போல" என்றுத்தரம் பிறந்தது. ஏன் அவன் அவ்வாறு செய்யவேண்டுமெனில், ஜகதுத்பத்தியாதிகளில் ஸ்வப்பிரயோஜனங் கருதாமல் பரப்பிரயோஜனுர்த்தமே எவ்வாறு தனது நிர்ஹேதுககருணையைக் காட்டினுரோ அவ்வாறே சாஸ்திரத்தை யுண்டுபண்ணிய விஷயத்திலும் முதல்வன் றனது அவ்வியாஜ பரமகிருபையை ஜீவர்கள் மாட்டுக்காண்பித்தார். அருளுடைய பரமன் மாநதர்களுக்குத் தனதுண்மையைத் தெரிவிக்கக்கூடிய சாஸ்திரத்தை அருளாதொழிவனே? "இச்சாஸ்திர பிரவர்த்தனமும் ஜீவர்கள் மேற்கொண்ட பெருங்கருணையாலென்பதை சாஸ்திரவக்திருத்வததை இறைவனுக்குக்கூறவந்த ஸந்தர்பபததில்ஸ்ரீபௌஷ்கரததில் "ஸர்வாரம்போ ஹி நாதஸ்ய ஜீவநிர்வாணார்த்தத: ஶம்போ:"- எல்லா முழுமையுமொருங்கே கொண்ட முதல்வனுக்கு எல்லா முயற்சியும் ஜீவர்கள் பொருட்டேயென விளக்கபபட்டுள்ளது.

சாஸ்திரகர்த்தாவா யிறைவன் ஏற்பட்டதால் அவன் எவ்விஷயத்திலும் நமக்கு ஆப்தனுவான். அவனுக்கும் நமக்கும சம்பந்தமேற்பட்டது அவனது அன்பினுல்என்பதை முன்னரேயாங்கண்டாம். எமக்குமவனுக்குமுள்ள அன்புரிமையை எவ்வாறு கூறலாம்? இவ்விஷயத்தில் உபநிஷதங்கள் எவ்வாறு கூறிக்களிக்கின்றன? என்பதைமுன்னர் விளக்கிக்காட்டுவாம். குருவுக்குஞ்சீடனுக்கு முள்ள அன்பின் முறை பிதாவுக்கும் புத்திரனுக்குமுள்ள முறையேதானென்பதை முன்னர் தெரிவித்தாம். ஆதியில் பிதாவே புததிரனுக்கு ஞானேபதேசஞ்செய்து குருவாயுமிருந்த காரணத்தாலேயே அத்தன்மைகுருவுக்கும்வாய்ந்த தென்றுங் கூறினும், ஸர்வேச்வரனுக்கும் மலப்பிணிப்புகளையுடைய விஞ்ஞானகேவல, பிரளயாகல, சகலரென்னும் மூவித ஆன்மாக்களுக்கும் சம்பந்தம் அன்பினுலாயவழி அவனே பரமபிதாவாகவும் பரமகுருவாகவு மிருக்கிறுன் என்று திவ்வியாகமங்களுரைக்கும். இவ்வுண்மையை "ஸர்வேஷாம் பூர்வஜ:"- தூலதேகமுடையவர்களில் முந்தினவ னென்றும் "ஸம்பவ" கருப்பையி

டானவனென்றும், " "ஜீவகந:" ஜீவகனன் என்றும்; தேவர் பிதிரர் ஆகியமூவித வுயிர்களுக்கும் மூலமென்றும் கூறப்பட்ட ஹிரண்யகர்ப்பனும் பிரமன் எனும் புதல்வனுக்குப்பரமன் வேதத்தை யோதுவித்தானென்று "யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம் யோ வை வேதாம்ஶ்ச ப்ரஹிணோதி தஸ்மை । தம் ஹ தேவமாத்மபுத்திப்ரகாஶம் முமுக்ஷுர்வை ஶரணமஹம் ப்ரபத்யே" – "யோ தேவாநாம் ப்ரபவஶ்சோத்பவஶ்ச விஶ்வாதிகோ ருத்ரோ மஹர்ஷி: । ஹிரண்யகர்ப்பம் ஜநயாமாஸ பூர்வம் ஸ நோ புத்த்யா ஶுபயா ஸம்யுநக்து" "யோ தேவாநாம் ப்ரதமம் புரஸ்தாத் விஶ்வாதிகோ ருத்ரோ மஹர்ஷி: । ஹிரண்யகர்ப்பம் பஶ்யத ஜாயமாநம் ஸ நோ தேவ: ஶுபயா ஸ்ம்ருத்யா ஸம்யுநக்து" என்ற வேதவாக்கியங்களு மிவைகளுக்குப் பிரும்மணங்களாய்ப போந்த "யோ ப்ரஹ்மாணம் விததே பூர்வம் ஜ்ஞாநம் ச ப்ரஹிணோதி தே । யத்ஸாக்ஷாத் ப்ரதமம் ப்ராஜாபத்யமிதம் பதம்॥" (கூர்மம்) "ப்ரஹ்மாணம் ஜநய: பூர்வம் ஸ்ருஷ்ட்யர்த்தம் தஸ்ய சேஶ்வர: । ததவாந் விஶ்வநாதோ வேதாந் ஸூத்ரிஸம்ஸ்திதாந்॥" (மத்ஸ்யம்.) " ப்ரஹ்மாணம் விதயே ஸாக்ஷாத் பர்வதேந்த்ரஸுதாநத । தஸ்மை ப்ரதமவக்த்ராய ப்ரஹ்மணே விஶ்வயோநயே । வித்யாஶ்ச ததௌ ஸர்வா: " (சைவம்) " ஸத்யோக்ஷரணோ தேவ: ஸஷிவிஶ்வாதிக: ப்ரபு: । தேவாநாம் ப்ரதமம் தேவம் ஜாயமாநம் மஹாப்ரஜா: । ததர்ஶ ப்ரஹ்மாணம் ஸாக்ஷாத் அபேக்ஷத । தஸ்மை வேதாந் புராணானி தத்தவாந் ஸ்வஜநேந " (லைங்கம்) முதலிய உபப்பிரம்மணுங்களுக்கிசைய சுவேதாசுவதா சாந்தொக்கிய, வாஜஸநேயாதி உபநிடதங்கள் வெளியிட்டன; திவ்யாகமங்களுமவ்வாறே உபதேசிக்கின்றன, "ஜந்மத: ஶிவத்ருஹ்மாதீநாம் ஸர்வேஷாம் த்ரிதேவதாநாம் । ஶிவத்ருஹ்மாவேந ஸர்வேஷாம் ஶிவதாஸ்ஸமுதீரித:॥" என்று பிதிருபூதர்களாகிய பிரம்ம விஷ்ணு ருத்ரமகேச்வரர் ஸதாசிவர்களுக்கும் பிதாவாய் நின்றவன் ஸர்வேச்வரனென்றும், இவ்வாறே ஸர்வாணமாக்களுக்கும் அவன் ...ாம பிதாவே என்றும் "யதோ நஜாயதே ஸர்வ: ஶிவம் பரம் ஶாந்தம்

விநா । தயோஹஸம்ஸாரீவ விநாசெநதத்வாரவரு ॥" எவ்வாறு மாதா பிதாவின்றிப் புத்திரன் கிடையாதோ அவ்வாறே சிவசக்திக ளின்றி இவ்வுயிர் வர்க்கங்கள் கிடையாவென்றும் "தயொரவதூ ஜகதஸ்வம்" - எல்லாவுயிர்களு மவன் குழந்தைகளேயென்றும், உண்மை நூற்கள் விளக்கும். யாவர் அவர்கள் குழந்தைகளென் புழி, ஸதாசிவன், மகேசுரன், ருத்திரன், விஷ்ணு, பிரமன் முதலிய எல்லாவுயிர்களும் அவரவர்களுடைய தேவிகளுட்பட அவன் குழந் தைகளே யென்று வாயுஸம்ஹிதை வெளியிட்டுரைத்தது. அன்றியு மவனது மூர்த்திரகஸ்யங்களுமவ்வுண்மையை உள்ளங்கை நெல்லிக் கனியென விசதப்படுத்தும். இம்மூர்த்திரகஸ்யங்களை யாமியற்றிய வேறு நூற்களிற் காணலாம். ஸோமாஸ்கந்தமெனும் பெயரிய ஸகள மூர்த்தியாற்றானே ஸர்வ ஜீவர்களுக்கும் பரமபிதாவானதை விளக் கினமைபோல ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திவடிவத்தாற்றானே பரமகுருவான மையை விளக்கினனென்க. இதனால் பரமபிதாவே பரமகுருவாயினமை

பரமசிவன் பிரமனை முகமலரினின்று பெற்றெடுத்தான் என்றும் மீண்டுமப்பிரமனை நோக்கினனென்றும மேற்கூறிய வேதவாக்கியங் கள் விளம்பின. ஆணவ விருளிலாழ்ந்திருந்த ஜீவனுக்குத்தான் குருவாயுபதேசித்துத் தன்னுடன் கூட்டுவதையே "முகத்திற் பெற் றெடுத்தமையும், அன்பினாலேயே அத்தன்மை வருவிப்பதையே கண் ணோக்கமுந் தெரிவிக்கும். ஸமஷ்டி ஜீவனாகிய பிரமனை யெடுத்தாண் டது வியஷ்டிஜீவர்களாகிய எவ்வுயிர்களுக்குமவ் வழியிலேயே சிவ புத்திரத்வப்பேறுண்டாகுமென்றும் ஸூசிப்பித்தது; இதுவே சைவ தீக்ஷையென்க. இதனாற் புதல்வனைச் சிவதர்மத்திற்கருகனாக்காத பிதாவும் பிதாவாவனோ! அந்தோ இவ்வருள் வழியைவிடுத்து மருள் வழிக்காளாக்குகின்றனரே தற்காலத்திய போலித்தந்தையர்!

பெருங்கருணையினால் நம்மையனாதி மலத்தினின்று சிருஷ்டி யாதிகளில் எடுத்துவிட்ட ஸர்வேச்வரன், தர்மாதர்மம் பந்தமோக்ஷா திகளைத் தெரிவிக்கவேண்டி நமக்குச் சாஸ்திரத்தையுமருளியிருக்க லாம். ஆயினவன் எவ்வாறருளினான்? அச்சாஸ்திரந்தான் யாது? ஏனையசாமான்ய சாஸ்திரங்கட்கு மச்சாஸ்திரத்திற்குமுரிய வேற்று மையை எவ்வாறறிவது? விளக்குதும்.

ஸர்வேச்வரன் நிஷ்களனே. நிஷ்களனாகிய அவன் எவ்வாறு ஸாவயவங்களும் மூர்த்தங்களுமானவிப் பிரபஞ்சங்களுக்குக் கர்த்

அவவாறே நிஷ்களனாகிய பரமன் அகாராதி யக்ஷரங்க ளின் சேர்க்கையான சாஸ்திரத்திற்குக் கர்த்தாவாயினான். பிரபஞ்ச மானது ஸ்தூலமாகவும் ஸூக்ஷ்மமாகவு மிருக்கின்றது. இதில் ஸூக்ஷ்மத்தினின்றே ஸ்தூலமுண்டாயிற்று. "ஊவ்ரயெயஃநிஜெடு ஶ்யூ௦ ஊநிளவஃஃநாஃயடு । ஸூக்ஷ௦ஸவடுமதம்நித்ய௦ ஐூவஃவ்ய யஃஶ்வரடு । ஶிவதகூஃஷ௦வெராக௦ ஸவடுராவ்யொவஸிஷ்தடு ॥" என்று எல்லாவற்றிற்கும் மேலாக அளவிடக்கூடாததாய், எண்ண முடியாததாய், தனக்கு நிகரில்லாததாய், எங்குமிருந்ததாய், ஸூக்ஷ மமுமாயுள்ள பதார்த்தமொன்று "சிவத்தவமெனப்பட்டு அரூபமா யிருந்தது" அதைச்சிவன் "வெஸாகாஃயத" "தஜெக்ஷத"– அவன எணணினன அவன பார்ததான என்ற படி சிருஷ்டிக்க இச்சித்தவுடனே அவனுக்கபின்னமாகிய சூரிய னிடங்கிரணம் போன்ற சிவசக்தியானது அச்சிவதத்வமெனும் அருவவியாபக ஜடப்பொருளைச் சிறிது கலக்கிற்று. அதிலிருந்து ஒரு சலனமுண்டாயிற்று. அச்சலனத்திற்கு "நாதமென்று பெயர்" அதிலேற்பட்ட "சுழிக்கு" பிந்துவென்று பெயர். அரூபமாகிய சிவ தத்துவமானதுசப்தபிரபஞ்சம் அர்த்த பிரபஞ்சமென இருவிதபிரபஞ் சத்திற்காதாரமா யிருந்தது. அரூபமாகிய பரபிந்துவே ஸூக்கும மாகிய கலாதிதத்துவங்களாகி, இச்சூக்குமகலாதிகளே ஸ்தூலதநு கரணபுவனங்களாயின. இதனால் ஸாவயவவிப்பிரபஞ்சத்திற்கு மூலோ பாதான வஸ்து சிவதத்துவமெனப்படும் பிர்ணவமாம் அரூபசூஷ்ம வியாபக வஸ்துவாகும். இதை நிஷ்களராகிய பரமனதிஷ்டிப்ப தால் இதற்குச் சிவதத்துவமென்றும், சுத்த தத்துவமென்றும் பெய ரமைந்தது. "ஶுஜெஷ்வநிஶிவஃ கதுா" சுத்தாத்வாவில் சிவன் கர்த்தாவென மிருகேந்திரம் கூறியது. ஏனையவஸ்துக்களுக்கும் சிவனே கர்த்தாவான காலத்தும், நேரேயதிஷ்டிக்காமல் சில தத்து வங்களுக்கந்தர்பூதமாயிருக்கின்றார். "ஜதீஷ௦ ஸவடுதிஶூதி ராஷ ஸநாதநீ"– இவையெல்லா மோமென்றே பழமையான சுருதி கூறிற்று. "வாக்ஜெதஃ வஶிணாஜோய௦ஷியாஶ்வாயடு ஹாவிதஃ ॥" என்ற வாக்கியப்படி பரப்பிரகிருதியின் பரிணாமம் சப்தமென்றும், அர்த்தமென்று மிருவகைத்து. சப்தத்தின் பேதமா னது சொற்பிரபஞ்சமென்றும் அர்த்தத்தின் பேதமானது பொருட் பிரபஞ்சமென்றும் இருவகைத்தாம். அர்த்த பிரபஞ்சத்திற்கு மூலம்

“ஓமெனும் பிந்துவாகும்” சொற்பிரபஞ்சத்திற்கு மூலம் “ஓ மெனும் நாதமாகும்.” இவ்விரண்டுமமைந்தது “சிவதத்துவத்தில்” இச்சிவதத்துவத்தின் காரியங்கள் “அத்துவாக்கள்” (வழிகள்) அதாவது “ஆத்மாக்கள் சுத்தியையடையும் வழிகள் எனப்படும். அவைகள் ஆறாகும் “[illegible]”— “[illegible]” என்ற வாக்கியப்படி மூன்று அத்துவாக்கள் சப்தமயமாயும் மற்ற மூன்று அத்துவாக்களும் அர்த்தமயமாகவுமிருக்கும். அர்த்தபிரபஞ்சமென்பது தநுகரணபுவன போகங்களாயிற்று. இவ்வாறே “சப்தப்பிரபஞ்சமானது” சாஸ்திரமாயிற்று. அர்த்தம் அல்லது பொருள் எவ்வாறு கண்ணுக்கு விஷயமாகி திருச்யப்பொருளாயிற்றோ அவ்வாறே சப்தம் அல்லது சொல் காதுக்கு விஷயமாகி ‘சிராவ்ய’மாயிற்று. கண்ணுக்கு விஷயமான தேகத்வதக்கண்டு அதன் விசித்திரவேலைப் பாடுகளையுணர்ந்து இஃது ஜீவனுக்கு போக்கியமென்றுணர்வது போலவே காதுக்கு விஷயமாகும்சாஸ்திரத்தைக் கேட்டு அதிலமர்ந்த அதிரகஸ்ய வுண்மைகளையுணர்ந்து இஃதும் ஜீவனுக்கு உத்தாரகமென்றுணர்வோம். புவனமும் அவன் செயலே சாஸ்திரமும் அவன் செயலே. புவனம் கண்ணுக்கு விஷயம் சாஸ்திரம் சுரோத்திரத்திற்கு விஷயம். கண் காது எனுமிவ்விரண்டிலுலேயே ஞானவிருத்தி. ஞானேந்திரியங்களிற் கண்ணும் காதுமே முக்கியமானவை. கண்ணமைந்தது பார்த்தறிய. காதமைந்தது கேட்டறிய. இவைகளே “Intellectual Senses” என்பவைகளுட் சிறந்தன என டாக்டர் பெயின் (Dr. Bain) முதலோர் கூறுகின்றனர். ஞானக்கிரகணத்திற்கெனவே இவைகளமைந்தன. அவைகள் உயிர்களி னுத்தமாங்கத்தில் இரண்டிரண்டாக விரிந்துகொள்ளு முறையிலமைந்தன. சிரவணமும், தர்சனமுமே ஈச்வரானுபூதிக்கு முக்கிய சாதனங்கள் எனத் திவ்வியாகமங்கள் முழங்கும். மனதெனும் பொக்கிஷவறைக்கு வாயிற்கள் கண்களும் காதுகளுமே. பலமாறுதல்களையடைந்து எவ்வாறு கண்களுக்கு உலகம் விஷயமாயிற்றோ அவ்வாறே பலமாறுதல்களையடைந்து காதுக்குச் சாஸ்திரம்

விஷயமாயிற்று. உலகமவன் செயலே. சாஸ்திரமவன் மொழியே. இவ்வுலகத்தில் நமக்குத்தனு, கரணங்களமைந்ததையே ஓரிடத்தில் ஒருதொகுப்பாய்க் காண்கிறோம். ஸ்தூலதிருஷ்டிக்குச் சூரியன், சந்திரன்மற்றைக்கிரகங்கள் அமைந்தமையை ஒருதொகுப்பாயிருப்பதாகக் காணவில்லை. தனித்தனிபோல நாம் காண்கிறோம். உண்மையில் அவைகளும் நமது தேகத்திலுள்ள பலவமைப்புகள் எவ்வாறு ஒன்றுக்கொன்று சாதகமாமோ அப்படி ஒன்றுக்கொன்று சாதகமாகும். இதை ஊகித்தறியவேண்டியிருக்கிறது. அப்படிப்போலவேநமதுவாய்மொழி, கேள்வைகளையே "பிரதீதி" யுடையனவாக மதிக்கிறோம். உண்மையில் இடி, காற்றினிறைச்சல், முதலிய எல்லாச்சத்தங்களுக்கும் "பிரதீதி" (கருத்து) இல்லாமற்போகவில்லை. நமக்கின்றியமையாப்பிராணவாயுவினுதவியை வெளியிலுமுள்ளும் நாமனுபவிப்பதுபோலவே எல்லாவமைப்பும் நமக்குப்பிரயோஜனமே யாகும். இதனுலிடிமுழக்கம் பேரிறைச்சல் முதலியனவைகளும் நமக்குப் "பிரதீதி" அல்லது கருத்தைத் தெரிவிக்கின்றன. இவ்வுண்மையையே திவ்வியாகமங்களும் "நாஸ்திசப்தஸ்ய ஸம்பந்தோ நாஸ்திசப்தோ நிரர்த்தக: । ஜ்ஞாநேத்ஹிசப்தாஸ்ஸர்வே ஸர்வார்த்தவாசகா:" எல்லாச் சப்தமும் பொருளைக்குறிக்கின்றது. எல்லாப் பொருளும் சப்தத்தாற் குறிக்கப்படுகின்றது. ஒவ்வொரு சப்தமுமுண்டான சமயத்தை நாம் உணர்வோமாயின் எல்லாச்சப்தங்களும் பொருள்களைக் குறிக்கின்றமை தெரியப்படும். சேதனுசேதன விருவகைப்பிரபஞ்சத்திலும் பொருட் சப்தாவபோதகமுண்டு. அப்படியே சப்தங்கட்கு அர்த்தாவபோதகமுமுண்டு.

கண்ணுக்கு விஷயமாகும் பொருட்பிரபஞ்சம் எவ்வாறு முதல்வனுடைய அறிவையும் வல்லமையையுங் காண்பிக்கின்றதோ அவ்வாறே "சாஸ்திரமானது" அவனுடைய பேரறிவையும் பெருந்தன்மையையும் காண்பிக்கின்றது. ஒன்று அவன் தொழில் (Work) மற்றொன்று அவன் மொழி (Word) ஒன்று முதல்வனை காண்பிக்கின்றது. மற்றொன்று முதல்வனைக் கூறுகின்றது. இரண்டினுலும் பெறப்படுமுண்மை ஒன்றே. ஒன்றற்கொன்று மாறுபாடாகக்கொள்வது மூதறிஞர் கொள்கையன்று.

முதல்வன் பொருட்பிரபஞ்சத்திற்குக் கர்த்தனுயிருத்தலைப் பஞ்சகிருத்தியங்களை விளக்கும் "ஆநந்த நடராஜவடிவமும்" சொற்பிரபஞ்

சத்திற்குக் கர்த்தனுயிருத்தலைச் சாஸ்திர உபதேசத்தன்மையைக் காட்டும் மேதா தக்ஷிணமூர்த்தி வடிவமும் விசதப்படுத்தும்.

*அவனது அருட்டிறங்கள் திருக்கோயில்களிற் பிரதிஷ்டிக்கப் பட்ட பொருளுருவங்களால் குறிக்கப்படுவன போலவே, ஆகமச் சொற் சத்தங்களினுலும் குறிக்கப்படுகின்றன.*

*இனி எவ்வாறு சாத்திரமவன் வாய்மொழி யென்பதையுங் கவனிப்பாம் "ஶப்தா³ர்த²காவிமௌ ஜ்ஞேயௌ ஶாம்ப⁴வ்யாக்ஷயே விபூ⁴தயே। ஸ்தூ²லஸூக்ஷ்மாபராவைதே ஸூக்ஷ்மாசிந்த்யா ஸ்வரூபத: ॥ ஸூக்ஷ்மா ஶக்திரிஹ ஸ்த²ா அஸௌ வ்யாப்தா அவிநாஶிநீ ॥" இறைவனது விபூதியாகிய சப்தம், அர்த்தமென்பவைகளில் "சப்தம்" எனும் விபூதியானது ஸ்தூலம, ஸூக்ஷமம், பரமென மூத்திறப்படும். ஸ்தூலமானது சுரோத்திரேந்திரியத்திற்கு விஷயமாவது. ஸூக்ஷமம் ஒருவாறு மனதினுலுணரப்படுவது பரமென்பது காணங்களையும் இந்திரிகளையுங்கடந்தது இவைகளை பரை, பச்யந்தி, மத்திமை, வைகரி என நான்காகும் இதிறபரையே பல ஸ்தானபேதங்களையடைந்து வைகரியாயிற்று. இப்பரையானது வாகீச்வரவரி எனவும் பெயர் பெறும். இது சிவதத்துவத்தின் பிரதம ஸ்பந்தத்தினுல் எழுந்த பரநாதமாம். சலனப்பட்ட போது சிவதத்துவமடைந்ததைப் பிந்துவென்று கூறினும். இந்தப்பிந்துவே பரையெனுஞ் சத்தத்தினுல் குறிக்கப்பட்டு, சாந்தியதீதை எனும் பொருளின் பெயராயமைந்தது. சாந்தியாதீதையே நிவிருத்தி பரியந்தமான பொருளாய்ப்பவித்ததுபோல யததற்கனுகுணமாக பரநாதமே வைகரியாதிகளாய்ப் பவித்தது. இச்சபத மெவ்வாறு சாத்திரமாயிற்றெனில் கூறுதும்.*

*சிவசக்தி நேரே யதிஷ்டிப்பதால் சிவதத்துவமெனப்படும் குடிலை (வளைந்து வியாபகமாயிருக்கும் பொருள் என்பது அதன் கருத்து) எனும் பொருளுண்டு இதனுள்ளும் புறம்பும் வியாபகமாயிருக்கும் பொருள் இச்சாஞான கிரியாவாகிய சிவன். இச்சிவனதிச்சையால் ஆன்மாக்களின் பொருட்டு அவனதுசித்சக்தி இச்சிவதத்துவத்தை க்ஷோபித்தது. அச்சத்தியின் அசைப்பினுலுண்டாகிய அசைவு சிவதத்துவ முழுமையும் வியாபித்தது. இதிலுண்டாகிய அதி ஸூக்ஷ்ம ஓசையுட னுயரக்கிளம்பியபேரொளிக்குப் பரநாதமென்று பெயர். அவ்வசைவினுலுண்டாகிய திவ்விய ஒளிப்பரப்பிற்கு (கீழ் வட்டத்திற்கு)ப் பரவிந்துவெனப் பெயர். இப்பரபிந்துவின் ஒளியினைத்தெனக் கூறமுடியாது. இவ்வாறே இப்பரநாதத்தின் இனிமையி*

… று. பிந்துவுருவங்களினழகிற் கிசைந்தவாறே நாதத்தினினிமையுந் தோன்றும். * ஸ்தூலத்தினின்றும் ஸூக்ஷ்மங்களுக்குச் செல்லும்போது அழகும், இனிமையும் அதிகரிக்குமென்பது சைவசித்தாந்தக்கொள்கை. அவ்வாறே தத்துவங்களுமமைக்கப்பட்டுள்ளனவென்பது அதன் றுணிபு. அதற்குத் தகுந்தவாறே யத்தத்துவங்களிலுறைவோராகிய ஆன்மாக்களின் தெய்வசம்பத்தும் சிவைச்யர்யங்களும் விளங்குமென்பதவர் கண்டவுண்மை. போநந்தத்தைப் பெருகுவிக்கும் பெருவண்ணங்களையுடைய பிந்துரூபங்களும் அவைகட்கிசைந்தவாறு போநந்தக்கடலில் மூழ்குவிக்குமினிய தெய்வீக இன்னிசையும் பொருந்திய பரநாதமும் ஒன்றற்கொன்று பொருத்தமுடைத்தாய் தெய்வத்தன்மையை விளக்காநிற்கும் ; ஸ்ரீ காளிதாஸ ரிவ்வுண்மையைப் பல வினியமொழிகளாற் கானஞ் செய்துளார் " அநாஹதமென்னும் பிரதேசத்தில் பெரியவாநந்தப்பெருக்கமுடையப் பரநாதமெனும் பெரிய வற்றுநதி யொன்றுண்டு. அந் நதிவழியே சென்ற புண்ணியவான்கள் பிறப்பிறப்பென்னுஞ் சுழிகளைக் கடந்த என்றுமோரியல்பொடு நிறுத்தவல்லதோர் " அமிருதாப்தியை " (Ocean of Immortality) யடையலாமென்றும் அவ்விடத்தே ஆன்மகோடிகளைச்சேர்க்கவல்ல அன்னையொருத்தியுண்டென்றுங் கூறியருளினர் "ஸஹஸ்ரநாநாத்ம நீரோஸ்ரவநிவர்த்யம்ச ஸ்ரீவித்யா ஸ்ரீவர்ணயிநீ" என்றும் " அநாஹதமெனும்பதத்தில், முத்தியில் என்றைக்கு மநுபவிக்குமாநந்தத்திற்கறிகுறியாய் அன்னையினருள்தானேவென்று சொல்லக்கூடிய சொல்லுக்கடங்காச் சுகவாரியொன்றுண்டென்றும் அதனினிமையைக் கண்ணீராருய்ப் பெருகவிட்டுச் சொல்ல வன்மையற்று உள்ளுருகித் தேம்பியழும் தெய்வஸம்பத்துடைய அன்பர்கள் ஒருவாறறிவார்களென்றார். " க்ஷநாக்ஷணை ஸநாஹதநாதிநெனாநாதா

---

* Cf " It has been always easy to deride and condemn the bodily side of our nature ; *but by the truest seers this has not been done.* The glorification and transfiguration of the body has been the theme of prophets and poets of profoundest insight " (*Sir oliver lodge.*)

Saiva Siddhanta concedes that man gets more and more glorious bodies capable of receiving and emitting more Light and more Love.

த்ரநா வஸிஷ்டந்தத்வமுபைதி। ப்ருத்ருஜ்யைவ நைநவா வஸி ஷ்யதோ நம் ஸம்ஸாரதிமிரம் ந்ருத்தஸிம்ஹேவ: ஸர்வைச்வர்யமத்யாத:" என்று கனுமழந்தார். இப்பரமாநந்த பாநாதத்தைப் பலவிதமாக உருவகப் படுத்தி வர்ணிப்பதுண்டு. எம்பெருமானது பஞ்சகிருத்திய கோலத் தைக்காட்டும் ஆநந்தநடராஜவடிவத்திலிதைக் காற்சிலம்பொலியென் றும; அபரமுத்தர்களை வாவென்றழைத்துக் கூவும் கண்டாரவமென் றும்; அனுசிருதாதிபுவனங்களிலுள்ள அபரமுத்தர்களெனப்படும் சிவரூபர்களான தன்னருமைக்குழந்தைகளுக்கு, இதுவரை ஸம்ஸா ரத்தில் கஷ்டப்பட்டு வருந்திவந்த இளைப்பாறும் பொருட்டு மகாப் பிரளயத்தில் போன்னையாகிய சிவசக்தி பாடும் தாலாட்டென்றும், அபரமுத்தத்தன்மையைவிட்டு பரமுத்தியடைவதற்கு மவ்வழியே சென்றன்னையினது முழந்தாளைத் தழுவி யவளது கருணைததும் பிய முகமண்டலத்தை நோக்கி யவளதீனமாய் நிற்க அவ்வன்னையும் வாரியெடுத்து மடிமீதிருத்தி, ஆநந்தஸ்தந்நியமுளம்பூரிக்க வூட்டி பக்கலிலிருந்தவல்லதாகிய அன்னையினதிருப்பைககாட்டவல்லமெட் டியின்மெல்லோசையென்றும், பலவிதமாகக் கூறப்படும். இத்தகைய பாநாதமே அவன் மொழி. இதுவே" ஓம்" எனும் தாரகம். அவி முக்தமெனும புருவமத்தியில் அஸிவருணை நதிகளாகிய இடாபிங்கலா வெனும் நாடிக ளிரண்டுங் கூடின காலத்தில் விசவமாயைக்கிறந்து படும் யோகிகளுக்கறிவுறுத்தும் தாரகம் எனும் பிரணவமாகும். இதுதான் முதற்சத்தம். இதுவே கடைச்சத்தம். துரிய சிவந் தவிற மற்றெல்லாச் சாஸ்திரங்களும், எல்லாத தத்துவங்களும், எல்லா அவத்தைகளு மிதிலடங்கும. துரியங்கடந்த சுடர்த்தோகை யுடனென்றும் பிறியாதேநிற்கின்ற பெம்மானுக்குடையாளமான வாக் கியமு மிதுவே. இதன் பெருமையைச்சொல்லாத ஆகமங்களில்லை. உபநிடதங்களில்லை. ஈசனொருவனுண்டென் றுணர்த்திய பதஞ்சலி பகவான் "க்லேசகர்ம விபாகாசயைரபராம்ருஷ்ட: புருஷ விசேஷ ஈச்வர:" அவித்தியாஸ்மிதா ராகத்வேஷாதிபஞ்சக் கிலேசங்கள், குசலா குசலாதி கர்மங்கள், அதனது போகங்கள், அத னது பற்றுதல்கள் முதலியவைகளில்லாதவன் ஈச்வரன்." என்று நிர் த்தாரணம் பண்ணினபிறகு "தத்ர நிரதிசயம் ஸர்வஜ்ஞபீஜம்" "ஸ பூர்வேஷாமபி குரு: காலேநாநவச்சேதாத்"—

மவன்குரு (உணர்த்துபவன்), 'காலத்தால் வரை

யறுக்கப்படாதவனுதலால்" என்ற ஸூத்திரங்களை ஏற்படுத்தி அதன பிறகு "தஸ்யவாசக: ப்ரணவ:"- அவனைக் காண்பிப்பது பிரணவம்:"—என்ற ஸூத்திரத்தை வைத்தார். அதன்பின்னர் "தஜ்ஜபஸ்தத் அர்த்தபாவநம்" எனும் சூத்திரமுணர்த்தப்பட்டது. இதன்பொருளை "பிரணவஜபத்தால் அதன்பொருளாகிய ஈச்வரனது பாவனை ஏற்படுகின்றது" என்ற வியாசபாஷியத்தாலறிகிறோம். "ப்ரணவஸ்ய ஜப: ப்ரணவாபிதேயஸ்ய சேச்வரஸ்ய பாவநம்।" என்பது வையாசிகபாஷ்ய வசனம். சாஸ்திரபிரமாணத்தா லறியக்கிடந்த ஈச்வரனை குருவென்றுங் கூறியதால், அவனைக்காட்டும் மொழி (வாசகம்) பிரணவமென்றதாலும் வாச்சியனுகிய சர்வேசனும் பரம குருவின் உபதேசமொழியும் பிரணவமேயாகும். ஆதலின் இப்பிரணவந்தான் ஈசனது மொழியாகிய சாஸ்திரம். இபபிரணவமே ஈசனைக் கூறும் சாஸ்திரம். இதனு லீசனைக்காட்டக்கூடியது மீசன் சொன்னது மான சாஸ்திரம் "ஓம்" எனுமொரு மொழியே. சப்தமனைத்திற்கும் "ஓம்" என்பதே வுண்மை என்பதைச் சில காரணங்களால் நிச்சயமாய் அறியலாம். ஒரு கிராமத்தில் திரளான ஜனங்கள் சேர்ந்து சில காரணங்களை முன்னிட்டு உறக்கப்பேசி யிரைச்சலிடுவதாக எண்ணுவாம்; அதைக் கொஞ்சதூரத்திலிருந்து கேட்பவனுக்கு அவ்விரைச்சல் "ஓ........." எனவே செவிபடும். அன்றியும் ஒருவன் றனது காதைச் சப்தம்படும்படி மெல்லப் பொத்திக்கொண்டால் கேட்பது 'ஓ' வெனுஞ் சத்தமே. அன்றியும ஒருவன் ஓர் மலையுச்சியினின்று நாற்பக்கங்களிலுங் தனது பார்வையைச்செலுத்தக் காணப்படுவது ஒரே வர்த்துளமான ஓர் காக்ஷியாகும். கண்ணை மூடிக்கொண்டு இவ்வுலக வடிவத்தை யுள்நினைப்பினும்படுவது "வட்டவடிவே." இவ்வடிவம் என்று மழியாதவடிவம்—இவ் "வோ" எனுஞ சப்தம். என்று மழியாதது. இதற்கும் பரமேச்வரனுக்கும "நித்தியஸம்பந்தமென்பதை வையாசிக பாஷ்யத்தில்"ஸம்ப்ரதிபத்திநித்யதயாநித்ய: சப்தார்த்தஸம்பந்த: இத்யாகமிந: ப்ரதிஜாநதே" "ஆகமிகர்கள் சத்தத்திற்கும் பொருளுக்கும் உள்ள சம்பந்தம் நித்தியமென்பதை உறுதிசெய்கின்றார்கள்" என்று சொல்லிவிட்டு பிரணவமெனும் வாசகத்திற்கு வாச்சியம் ஈச்வரனென மொழிந்திருப்பதால் சாஸ்திரம் என்பது "ஆகமமெனும்" பெயரால் வெளியாயது கண்டீர். அன்றியும், சைவாகமத்திலேயே இவ்வாறு கூறப்பட்டுளது. ஸ்ரீ பௌஷ்கரத்தில் பின்வருமாறு கூறப்பட்டுளது. "நிஷ்க்ராந்தாதார்யவக்த்ரா

[illegible]"

"நிஷ்களத்திலிருந்து நாதரூபமாக ஞானமார்க்கம் பிரவிர்த்தித்தது: இஃது வாக்குமுதலிய விந்திரியங்களில்லாதவனுக் கெவ்வாறெனின், வாக்கிந்திரியாதி துணைகளை யபேக்ஷிக்காத அவனுடைய வல்லமை எங்கும் பரவியிருக்கின்றது. கொஞ்சங்கூட மனமென்பதில்லாத அவன் அவ்வாறு மொழிந்தான் என்பதில் என்ன ஆச்சரியம். சாஸ்திரத்தின் பிரவிருத்தியானது (வெளிக்கிளம்பல்) சித்சக்தி வியாபாரத்தைப் பொருந்தியிருக்கின்றது. நாதபிந்துக்களினுடைய பிரவிருத்தியே சப்தங்களினுடை பிரவிருத்தியாகும். இச்சப்தங்கள் பாரம்பரியமாக (ஒன்றன்பின்னொன்றாக அல்லது வழிவழியாக பரம்பரையாக) சிவஞானத்தைக்காட்டுங் குறிகளாம்.

"[illegible] ॥" "ஜகத்தி னுதயகாலத்தில் சிவன திச்சையாகிய சக்தியால் எல்லா வானமகோடிகளுமுற்பவித்தவுடன் விச்வத்திற்குக்காரணமாகிய பிந்துவானது க்ஷோபிக்கப்பட்டது. அதிலிருந்து உள்ளவாறு (நாதமாகிய) சாஸ்திரம் உண்டாயிற்று" என்று பௌஷ்கரமுங் கூறிற்று. இதனால் முதல் முதலினுண்டான சாஸ்திரம் என்பது "பிரணவம்" இப்பிரணவமே நாசாகிதமென்றும் சிவனது சக்தியால் "உச்வாசநிச்வாசம்" போன்றதென்றும், இப் பிரணவமே பதே பதே வந்து பின்னர் சகலாத்மாக்களாகிய பிரமதேவன் முதலிய ஸ்தூலபிரபஞ்சத்திற் "அகாராதியக்ஷர சப்த சமூகங்களாய்ச் சுருங்கினவென்பது தோன்றும். இதனால் தார்க்கிகவை

சேஷிகர் ஈச்வரன் வாக்கென்று கூறும், "ஆகமமும்" மீமாம்சகர் அநாதியென்று கூறுமாம்நாயமும், ஈச்வரனிடத் துச்வாச நிச்வாச மாகயிருந்ததென்று வேதாந்திகள் கூறுவதும் இவ்வோமெனும் பிரணவமாஞ் சாஸ்திரமேயன்றி வேறன்று. பிரணவமே "வேத"மெனப்படும். இதனால் அகிருதகமாய், ஸ்வயம்புவாய், பிரம்மத்தினது உச்வாசநிச்வாசமாய், அநாதியாய், ஈச்வரனுடைய வாக்காய், ஈச்வரனைக்குறிக்கும் குறியாய நிகமம், ஆகமம், சப்தம், சுருதி எனப் பல பெயர்களால் வழங்கப்பட்டு வருவது பிரணவ சாஸ்திரமே. இவ்வுண்மையை யறியாதாரே, பதவாக்கியங்களாயுள்ள மற்றை இருக்காதிகளை ஈச்வரன் வாக்கென்றும், அநாதியென்றும், ஸ்வயம்புவென்றும், வெருவாறாய்க்கூறுவர். இவைகளில் ஈச்வரஞானமில்லையென்று யாங் கூறவில்லை. இவைகளைப் பிரமாணமென்றும் கழறியதில்லை. யாங் கூறவந்ததெல்லாங் கூடியனவைகள் ஆதியையுடையனவென்பதும, கிருதகங்களென்பதும் (செயற்கைகளென்றும்), ஈச்வரானுக்கிரகத்தைப் பெற்ற பிரமாதிகள் மூலமாக வெளிவந்தவைகளென்பது முண்மையே யன்றி, அபிமானமபொங்கிப் புலம்புமொழிகள் பிதற்றுரையென்பதுமேயாம். இவ்வாறேதான் ஆகமங்களும். ஆகமங்களும் கிருதகங்களேயாம். அநாதியன்று. சக்திநிபாதமடைந்த பெரியோர்களின் வாக்குகளே. வாக்கியரூபமான வேதங்களுமாகமங்களும் சிரவணாதிகளை யபேக்ஷிக்கும் "சகல வர்க்கத்தார்க்குறியனவேயாம்" சகல வர்க்கத்தார்களே சிரவணேந்திரியங்களாலும், வாக்கிந்திரியங்களாலும் சப்தோச்சாரண, சப்தசிரவணாதிகளை யபேக்ஷிக்குந் நீரராவர். சகல வர்க்கத்தாருக்கு மேம்பட்ட பிரளயாகல விக்ஞானகலாதிகளிவ்வித வபேக்ஷையைக்கொண்டவரல்லர். அசுத்த மாயா, சுத்த மாயாதி வியஞ்சகங்களை யபேக்ஷித்தவராயினும் அவர்கள் வைகரி வாக்கை யபேக்ஷித்தவரன்று. விக்ஞானகலர்களுக்கு இறைவன் அறிவுக்கறிவாய்நின்றுணர்த்துகின்றார். பிரளயாகலர்களுக்கு அறிவின் கண் பிரகாசிக்கின்ற சிற்சில தேஜோரூபங்களாலுணர்த்துகின்றார். சகலர்களுக்கே "செவி" "மொழி" யாதிகளைக்கொண்டுணர்த்துகின்றார். சிவாகமங்களிலிவ்வுண்மை செவ்வனே விளக்கப்பட்டுள்ளது. ஸ்வாயம்புவாகமத்தில் " [illegible]

अनुग्रहाय भूतानां सकलेभ्यः शिवज्ञानं विनिर्गतमनुत्तमम् ॥" சிருஷ்டிகளுக்குப்பிறகு மலமாயையாதிகளின் நிவிர்த்தியின் பொருட்டும், சிவத்வ அபிவியக்தியின்பொருட்டும் சிவனிடத்தினின்று ஞானம்பிரவிர்த்தித்தது. அது பிரணவம். அது முக்திக்குரிய சிவஞானமெனப்படும். இந்த ஒன்றே பத்துவிதமாக பிரணவர் முதலிய பதினமருக்கு (விஞ்ஞானகலர்க்கு) அறிவுக்கறிவா யுணர்த்தப்பட்டது. ஸ்ரீ காமிகத்திலும இவ்வுண்மை விளக்கப்பட்டுள்ளது.

இனி எவ்வாறு பிரணவநாதமானது வாக்கியரூபங்களாகிய சாஸ்திரமாயிற்றெனில்,

"नादोत्पत्तिर्भवेद्बिन्दुः स्बिन्दोर्जायतेऽक्षरम् ।
नादाच्च बिन्दुसंयोगात् ततो बिन्दोस्ततोऽक्षरम् ।
तस्माच्च द्वयं जज्ञे तत्तेषां भेदः षट्त्रिंशत् । स्वराश्च
जीवाः कायाश्च व्यञ्जनास्ताः । संयोगात् तत्त्वविच्छेद
सर्वज्ञानानि च । प्रणवात् विनिर्गतं तत्
शैवशास्त्रं विनिःसृतं सर्वविनिःसृतम् ॥
नवविंशतिनादानां सर्वासामपि निर्गतम् । सनादः
क्रियते विद्या पञ्चमेशिवनादकः । सूत्रं सक्षेत्रं सर्व
श्रुतिस्मृतिः सर्वदा । शब्दब्रह्मानुसूत्राः
सर्वं प्रणिहितं सर्वतः सर्वतन्त्रे सम्प्रदायिकम्
हेतुः । सर्वाश्च तन्त्रकाण्डाः सायम्भुवश्च दीक्षिताः ॥"

நாதத்திலிருந்து பிந்துவும், பிந்துவினிடமிருந்து அக்ஷரமுமுண்டாயிற்று. அதிலிருந்து இரண்டிரண்டுயிர்கள் உண்டாயின. அவைகளின் பிறிவு பதின்மூன்றும் பிந்துவிலிருந்து வர்ணங்களுண்டாயின. "அகாதி பதினாலும்" ஸ்வரங்களென்றும் ஜீவர்களென்றும் "ககாதிகள்" தேகங்களென்றும் எண்ணப்படும். இவைகளினாலேயே சாஸ்திரங்களுண்டாயின. இதனறியக்கிடந்தது யாதெனின், விஞ்ஞானகலர்களுக்கு எந்தப்பிரணவம் கேவலம் அரூபமாய் அவிகாரமாய் அகண்டமாயிருந்து வியஞ்சகமாயிருந்ததோ, அதுவே பிரளயாகலர்க்குப் பிந்துவின்னிகழ்ச்சியினால் "அகாராதி வர்ணங்களான பீஜாதிரூபங்களாயிற்றென்றும்" மீண்டும் அவ்வகராதிகளே "வாக்கியங்களாகி" சகலர்க்குதவிசெய்கின்றனவென்றும்

ஏற்படுகின்றது. "வாக்கியங்கள்" ஸ்தூலமென்றும் "வர்ணங்கள்" ஸூக்ஷ்மமென்றும் "பிரணவம்" பரமென்றும் கூறப்படும். இதனால் பிரணவமே "வர்ணங்களாகி, அவ்வர்ணங்களே வாக்கியங்களானதால், சிவஞானமாகிய பிரணவமே பாரம்பரியக்கிரமத்தால் எம்போன்றவர்க்குச் சிவஞானத்துக் குபகாரமாய் நிற்கின்றதென்றும் வாய்மை வெளிப்பட்டது. 'வேதாத்மநா ததா வ்யக்த꞉ ப்ரணவோ விக்ருதிம் கத꞉" அப்போது பிரணவமானது வேதரூபமாக விகாரத்தையடைந்தது" என்று வாயுசம்ஹிதை எடுத்திசைத்தது.

மேற்றிசையிலுள்ள வித்துவான்களிற் பலர் ஆதியில் மாந்தர்களுக்கு எழுத்துக்கள் கிடையாவென்றும், அன்னோர்களாதிகாலத்தில் சிற்சில அடையாளங்களைக்கொண்டே அறிந்தார்களென்றும், வித்தியாசங்களைத் தெரிவிக்கும்பொருட்டு சில உருவங்களைக்கொண்டார்களென்றும் (Pictorial writings,) அதன்பிறகே அதினின்று சிற்சில எழுத்துக்களைக்கொண்டார்களென்றுங் கூறுவர். பூர்வத்தில் ஈஜிப்துதேசத்தில் (Hieroglyphics) என்ற சிற்சில உருவத்தோன்றல்களே எழுத்துக்களாக உபயோகபபட்டு வந்தனவென்றும் கூறுவதுண்டு. பூர்வீக கிரேக்கர் முதலினோர் அவர்களிடமிருந்தே எழுத்துகளைக் கற்றுக்கொண்டனர் என்று அவர்களிற் பலருரைப்பர். இவ்விஷயத்தில் வைதிகசாஸ்திரங்களின் கொள்கை யெவ்வாறேவெனின், கூறுதும். சிவதத்துவத்தில் பிநதுநாதங்களின் சேர்க்கையாலே சிற்சில தேஜோரூபங்கள் தோன்றினவென்றும் அத்தேஜோரூபங்களே பலமாறுதல்களையடைந்து அகாராதியக்ஷரங்களாயினவென்றுந் திவ்வியாகமங்கள் முழங்கும். ஸ்ரீ பௌஷ்கரத்தில் "ஶிவேச்சாக்ஷோபிதே தாபிந்தோர்த்யஶ்ஶக்திரம்பிகா। ஶஶாங்கஶகலாகாரா ஶக்தித்ரயஸமுத்கதா꞉ । வாமா ஜ்யேஷ்டா ததா ரௌத்ரீ ஸந்தாநாமேந்துஸஞ்ஜ்ஞிகா । வாமா வேதாம்பவ ஜ்யேஷ்டா ரௌத்ரீ ஶம்ஹாரவேஶ்விதா । ஸாமாயா வரமேவைஷா ஜயாத்யா꞉ பரிகீர்த்திதா꞉ । ஜயா ச விஜயா சைவ அஜிதா சாபராஜிதா । நிவ்ருத்தி꞉ ப்ரதிஷ்டா ச வித்யா ஶாந்திஸ்ததைவ ச । இந்திகா தீபிகா சைவ ரோசிகா மோசிகா பரா । வ்யோமரூபா வ்யாபிநீ ச அநாதா நாஶ்ரிதா ததா । ஸூக்ஷ்மவ்யாப்த்யஷ்டகம் ஸ்வயம் ஶிவாத்யாவநீமோபரம் । தாத்ப்யஸ்வேத்வஸ்ய பஞ்சாஶத் ஹித்ரம் ஶபஞ்சவர்ணாஶ்ச விம்ஶதி꞉ । ஶிரஸ்யாஸாம் ஸ்திதா ரௌத்ரீ வக்த்ரம் வாமா

ப்ரகீர்திதா । அம்பிகாபாதஸம்பூதா ஜ்யேஷ்டாரௌத்ரீ ச வாமகா ஸ்திதா । அகார ஏஷ விந்யாஸ: ஆகாரம் ஶ்ருணுத த்விஜா: ॥” அவேச்சையினால் பிந்துவானது அசைவுற்றபோது பிறைச்சந்திரன்போன்ற வடிவுடைய அம்பிகாசக்தியானது தோன்றிற்று. அதனிடமிருந்து வாமை, ஜேஷ்டை, ரௌத்ரி எனப்பட்ட மூன்று சக்திகள் தோன்றின. வாமையானது உறங்கும் ஸர்ப்பம்போன்றது. தண்டம் (வளைதடி) போன்றது ஜேஷ்டை. ரௌத்திரிகொம்புபோன்றது. இந்த மாயையே ஜயை, விஜயை, அஜிதா, அபராஜிதா, நிவிருத்தி, பிரதிஷ்டை, சாந்தி, இந்திகா, தீபிகா, ரோசிகை, மோசிகை, வியோமரூபா, அநந்தா, அநாதாசிருதை முதலிய பாகுபாடுகளைக் கொண்டு விளங்கும். இச்சக்திகளால் சிவதத்வமுதல் பிருதிவிதத்வம் வரை வியாபிக்கப்பட்டுள்ளது. இச்சக்திகளிலிருந்தே 50 எழுத்துக்களும் தோன்றின.—இச்சக்திகளின் தலையில் ரௌத்ரியும், வாமை முகமாகவும், அம்பிகை பாகுவாகவும், ஜ்யேஷ்டை நீண்ட உடலாகவும் உள்ளது. இஃது அகாரம் (அ). இனி “ஆ”காரத்தைக்கேட்க.” என்றது. இதனால் எழுத்துக்கள் சிற்சில அடையாளங்களையுடைய சக்தியுருவத்தினின்று பேதபேதவந்ததென்பது வைதிக மதக்கொள்கை.

“ பஹுதாபாஸ்ஸம்ஸ்திதாவர்ணா: க்ருதகாऽசேதநாத்மகா: ।
வர்ணாஸ்ஸ்வரஸமாயோகாத் பதம் பதைஶ்ச வாக்யமிஷ்யதே । தஸ்மா
தர்த்த: ப்ரதீதிஸ்யாத் வ்யவஹாரநிபந்தநா । ஸர்வஜ்ஞாநாத்மிகா
ஜ்ஞேயா ஜகந்மாத்ருவ்யவஸ்திதா । யதாஸம்பூதா ஸா தேவீ ஶிவஶக்தி
ப்ரசோதித: । அநேந த்வபரா தேவ: காலே காலே வ்யவஸ்திதா ।
அநந்தஸூக்ஷ்மஶிவஶ்சைவ ஏகநேத்ரைகருத்ரகோ வ்யோமாதிநாயக: । ப்ராம்
ஹ்யாத்யா: காளிகாந்தாஶ்ச ஸப்தஸப்தவ்யவஸ்திதா: । ஸம்ஸ்காராஶ்ச தத்வ
விஜ்ஞேயா: ஸர்வாநுக்ரஹகாரிண: । ஜ்ஞாநஶக்திஸ்ததா ஜ்ஞேயா
மாத்ருகாமோகமாத்ருகா । தஸ்யாம் தத்ஜாயதே ஸர்வம் வாங்மயம்
ஸசராசரம் । உபாதாநம் து தாம் ப்ராஹுர் ஶிவோ பஹுதா
நிதம் । தந்த்ராணி காமிகாதீநி தஸ்ய வ்யாஸ்யா ஸ்திதாநிது ॥’

வர்ணங்கள் செயற்கையாய் அசேதனமாயுள்ளன வர்ணங்கள ஸ்வரத்துடன்கூடிப் பதமாகவும், பதங்கள்கூடி வாக்கியமாயும், இதனால் அர்த்தநிஸ்சயமும், இதனால் “பாஷை” (விவகாரத்திற்குரிய) யும் ண்டாயிற்று. இவ்வாறு ஜகத்துக்குத் தாய்போன்றதால் எழுத்துக்

கள் மாதிருகையாயிற்று. இவை சிவசக்திபேதங்களாக வகுக்கப் பட்டுள்ளன. "அகாராதிகளில் சிவனும், "க்" ஆதிகளில் தேவியும் இருக்கின்றார்கள். அகாராதிகள் எண்வகையாக ஈசசொரூபமாய் விளங்கும் "க்" ஆதிகள் 49 விதமாக விரிந்து பிராம்மியாதிகளாற் அதிஷ்டிக்கப்பட்டுள்ளன. முந்தினவைகளா (ஸ்வரங்கள்) ஈச்வரரூபங்களாகவும் பிந்தினவைகள் (வடிவங்கள்) ஞானசக்தி எனப் பெயர்கொண்டு வாக்குமயமாகிய சராசரப்பிரபஞ்சங்களைப்பெற்றது. இவைகளை யுபாதானமாகக்கொண்டு தேவன் (ஸ்ரீகண்டநாதன்) காமிகாதி திவ்வியாகமங்களைச் சொல்லியருளினர் எனப் பெறப்பட்டது.

இவ்வாறு பரநாதமே பரவிந்துவை க்ஷோபித்து அபரநாத அபரவிந்துவாகி வீணைகானமுங்கூட வெகு துச்சமாகத்தோன்றுமாறு இனிய ஸூக்ஷ்மகான விசேஷமாய்த் தோன்றிக்கொண்டிருக்க இதற்குத் தகுந்தவாறே அபரவிந்துவில் எவ்வகை யழகு மிதற்கு நிகராமோவெனச் சொல்லத்தகுந்த வனப்புடன் கூடிய தேஜோரூபங்களான "வர்ணங்கள்" பிரளயாகலர்களின் அறிவில் மின்னல்களின் விஜிரும்பணம்போலத் தோன்றி எல்லா வுண்மைகளையுந் தோன்றுமாறுதவும். இத்தகைய தேஜோரூபங்களிலிருந்து எழுத்துக்களுண்டாயினவென்று வேதாகமங்களின் கருத்தாகும். இவைகள் "அறிவின் வியஞ்சகங்கள்" என்பதைச் சிவாலயத்தில் தேவியினது ஸந்நிதியில் வாமா, ஜ்யேஷ்டா, ரௌத்திரியாதி சக்திகள் ஸர்வாலங்காரங்களைக்கொண்ட ஸ்திரீரூபங்களாக வமைக்கப்பட்டு விளங்க அவ்வுருவங்களின் கைகளில் வைக்கப்பட்டிருக்கிற திருவிளக்குகளே குறிக்கும். அனைத்திற்கும் பொதுவாய் "மாதிருகா விக்கிரகமொன்றமைக்கப்பட்ட காலத்தும் அதன் கையிலொரு பெரிய தீபமொன்று வைக்கப்பட்டு அதன் சிர முதலியவங்கங்களில் வாமையாதிகளின் சொரூபங்களாகிய சர்ப்பரூபம், தண்டரூபம், சக்கிரரூபங்கள் முதலியவைகள் சித்திரிக்கப்பட்டு விளங்கும். அல்லது திரிசூலம், சர்ப்பம், சக்கிரரூபம் முதலிய விளக்குகள், தேவியின் முன்புறம், பின்புறம், பக்கங்களில் ஸரமாகவும், தனியாகவு மமைக்கப்பட்டு விளங்கும். இவைகளனைத்தும் "அறிவின் வியஞ்சங்கள்" என்பது தோன்றவே "தீபங்களாக" அமைக்கப்பட்டு விளங்குகின்றன.

"அஷ்டௌ[illegible] தீபா[illegible] விந்யஸேத் [illegible] ।
தேஷாம[illegible] ॥" "எண்வகை தீபங்களைச்சுற்றிலும் மத்தியிலொன்றுமாக விளக்குகளை யமைத்து

அவைகளில் வாமையாதி ரூபசக்திகளைத் தியானிக்க" என்ற வாக்கியங்களு மிவ் வுண்மையை நிறுத்தும். இக்காரணத்தாற்போலும் கோயில்களிற் சிவ கைங்கர்யம்செய்யும் தாஸிகள் (Originally Nuns) எனும் ஸ்திரீகள் கும்பாதிதீபங்களை யேந்துகிறார்போலும். இதனால் சிற்சில அடையாளங்களைக்குறிக்கு முருவங்களைப் பிரதானமாகக் கொண்டே "எழுத்துக்கள் மீதான்றின" வென்று ஐரோப்பிய பண்டிதர்கள் கூறுவதுபோலவே நம் சமய சாஸ்திரங்களுங் கூறிய துண்மையே. மகோததிபோன்ற ஆகமங்களும் மந்திரசாஸ்திரங்களு மிவ்வுண்மைகளை யுத்கோஷிக்கின்றபடி, பல ரகஸ்யானுபவ நிலைகளுக்குரிய சூக்ஷ்மபுவனங்களிலுறையு மான்மகோடிகளுக்குச் சிவஞானத்தை வியஞ்சகஞ் செய்யும் "தேஜோரூபங்கள்" எழுத்துக்களாயினவேயன்றி சாதாரண கொக்கு கோழி முதலிய உருவங்களன்று என்பதை யுணர்வாராக.

வர்ணங்கள் என எழுத்துக்கள் வெளிப்பட்டதையுங் கவனிக்க. 'வர்ண' எனும் பதமானது "சுக்லவர்ணம், கிருஷ்ணவர்ணம்" என நிறங்கள் விஷயத்திலும், "பிராம்மணவர்ணம், சாதுர்வர்ணம்" என்பனவாதிகளில் வகுப்புகளின் விஷயத்திலும் அவனைப்பற்றி வர்ணித்தான், என்பனவாதிகளில் குணம் அழகு முதலிய விடங்களில் "சொற்கள்" விஷயத்திலும் பிரயோகிக்கப்பட்டு வருகின்றமை உலகானுபவம். இதற்குக் காரணம் யாது? எழுத்துக்களுக்கும் குணம், அழகு, நிறம், வகுப்பு முதலியவைகளுக்கும் யாது சம்பந்தம்? "வர்ண" எனும் தாதுவினடியாகப் பிறந்த சொல்லாகிய வர்ணமென்பதற்கு அநேகார்த்தம் உண்டோ? இஃது அநேகார்த்தத்தைத் தரும் பதமென வையாகரணிகள் எடுத்தாண்டதில்லை. ஆகவே இப்படிப் பல விஷயங்களிற் பிரயோகிப்பதற்கு இப்பலவிஷயங்களுக்கும் ஓர் சம்பந்தம் இருந்தாலன்றி பிரயோகிக்க இடமில்லை. அச்சம்பந்தம் யாது? கூறுதும். வர்ண என்பது குண விஷயத்திற் பிரயோகிக்கப்படலே யதன் பொருள். குணத்திற்கும் அழகிற்கும் பொருத்தமுண்டு. அழகிற்கும் நிறங்களுக்கும பொருத்தமுண்டு. நிறங்களுக்கும் உருவங்கட்கும் பொருத்தமுண்டு. உருவங்கட்கும் எழுத்துக்களுக்கும் பொருத்தமுண்டென்றோம். நிற (Color) பேதத்தால் வகுப்புகளின் (Caste) பேதமும் பெறப்பட்டது. இதனால் "திவ்விய தேஜோரூபங்களுக்கும் நிறங்களுக்கும்" சம்பந்தமுண்டானது ஸகஜம். ஆனதுபற்றியே "அதர்வசிகையாதி உபநிஷதங்களில் "பிரணவத்தை யுற்றுக் கூறுங்கால் "அதற்கு ஸர்வ

வர்ணத்தையும் ஒப்பியதென்க.—பிரம்ம, விஷ்ணு, ருத்திரர்களைக் கடந்த சிதாகாச துரிய சிவத்தையுற்றுக் கூறுங்கால் "ஸர்வவர்ண" என்று எல்லா நிறங்களையும் அதற்கு எடுத்திசைத்தது. திரிமூர்த்திகளில் ஒருவராகிய விஷ்ணுமூர்த்தியை விளக்கவந்த பாஞ்சராத்திரமும் அவனது வியூகங்களாகிய அநிருத்த, பிரத்தியும்ந, ஸங்கர்ஷணதிகளைக் கடந்த வாசுதேவரூபத்தைக் கூறும்போது பலவர்ணங்களை எடுத்திசைத்தது. எனவே நிறத்திற்கும், ரூபத்திற்கும், ஸம்பந்தமிருத்தலினாலும் அத்தகைய ரூபங்களே எழுத்திற்கும் காரணமாதலினாலும், வர்ணம் எனும்பதம் நிறத்திற்கும் எழுத்துக்களுக்கும் உபயோகப்படுத்தப்பட்டது. பெரும்பான்மையில் ரூபவிசேஷத்தில் குணவிசேஷமுண்டு. ஸுரூபத்திற்கும், ஸுகுணத்திற்கும், குரூபத்திற்கும், துர்குணத்திற்கும் ஸம்பந்தப்படுத்துவது வழக்கம். இந்த ஸ்காந்தத்தில் சுப்பிரமணியர் சூரனாதிகள் விஷயத்திலும், இராமாயணத்தில் இராமனாதிகளிடத்தும் அரக்கர் விஷயத்திலும் எடுத்துக் காட்டப்பட்டது. ஸுரூபிகளான தேவர் மனுஷ்யர்களை நற்குணவான்களாகவும், குரூபிகளான அரக்கர்களைத் துஷ்டர்களாக்கவும் கதாசிரியர்கள் வரைந்தனர். இந்த பெரும்பான்மையிலும் உலகானுபவத்திற்கு ஒத்துமிருக்கின்றது. ஆகவே அழகு, நிறம், உருவம் குணம் என்பவைகளுக்குச் சம்பந்தமுண்டு. ஸ்ரீகாமிகத்தில் "ஒவ்வொரு நிறத்திற்கும் ஞானார்த்தமுண்டென்றும், அந்நிறங்களைக்கொண்ட உருவங்கட்கும் ஈச்வரகுணங்கட்கும் ஸம்பந்தமுண்டென்றும் வியக்தமாய்க் கூறப்பட்டிருக்கின்றது. இப்படிப்பட்ட குணவிசிஷ்ட தேஜோரூபங்களே நமது எழுத்துக்களுக்கு மூலகாரணம்.

அறிவிற்குறைந்த மாந்தர்களன்றோ ரூபங்கொண்டறிய வேண்டும்? எம்மிலுமுயர்ந்த பிரளயாகலர்க்கு எற்றுக்கோ இவைகள் எனின் அற்றன்று; எமக்குப படர்க்கையான உருவங்கொண்டு முன்னிலையினின்ற ஆசான் உணர்த்துவது போன்றல்ல. பின்னர் யாதெனின், நமக்குக் கேட்டகாலையில் விளங்குவதைவிட கண்டகாலையில் அதிகமாய் விளங்குவதுபோலவே பிரானது உண்மைகள் அவர்களது ஆன்மாக்களில் என்றைக்கும் கண்டவாறே பிரகாசித்து விளக்கும் உருவங்கள் குணரூபங்களாகையால் ஈசனது தன்மைகள் அவர்களறிவின்கண் செவ்வனே அறியக் கிடக்கின்றனவென்பதே இதன் உண்மைப்பொருள். அதாவது "ஸாக்ஷாத்காரம்" எய்தப்பெற்றவர்களே அவர்கள். ஸாக்ஷாத்காரமென்புழி கண்முன் வரச்செய்

தல் என்ற பொருளையல்லவோபயக்கும். பிரும்மஸாக்ஷாத்காரம் என்புழி பிரும்மதர்சனத்தை உள்ளதுள்ளவாறாக கைவரப்பெறல் என்பது பொருள்படும். பிரளயாகலர்களினுடைய ஆன்ம அறிவின்கண் பிரகாசியாநின்ற பேருண்மைகளை விளக்கும் பெரிய வுருவங்களின் மாறுதல்களே நமது எழுத்துக்களுக்கு மூலகாரணம் * முதல்வ

* Pictures degenerated, into dashes—as the Evolutionist Henry Drummond would say of the Chinese writing Nay of all ideograph. If man is to rise from low to high, as the Evolutionist puts it, under the aegis of God, then correspondingly Divine knowledge must descend from high to low.

"The Evolution of writing" says Professor Drummond "went through the same general stages as the evolution of speech First there was the onomotopœtic writing—as it were, the growl writing the ideograph, the imitation of an actual object" etc Ascending from this growl writing to the invention of telephone, he asks. "Is this the end? It is by no means likely. The mind is feeling about already for more perfect form of human intercourse than the telegraphed or telephoned words.

Telepathy has already become a word, not a word for thought reading or mustle reading, but a scientific word. It means "the ability of one mind to inpress, or to be impressed by another mind otherwise than through the recognised channels of sense." "From the growl of a lion we have passed to the whisper of a soul; from the motive fear, to the motive sympathy from the icy physical barrier of space to a nearness closer than breathing from the torturing slowness of time to times obliteration. If Evolution reveals anything, if Science itself proves anything, it is that Man is a Spiritual Being and that the direction of his long career is towards an ever larger, richer and more exalted life." In the chapter on Involution in the same volume he puts thus "Instead of abolishing a creative hand, evolution demands it" and quotes with approval Balfour Stewort and Tait, thus "Consider the position into which Science has brought on. We are led by Scientific logic to an Unseen and by Scientific analogy to the Spirituality of this unseen. Infine our conclusion is that the visible universe has been developed by an Intelligence resident in the universe."

If it is thus granted that man evolves from low to high and that there is a Divine Intelligence lending its helping hand through all stages to uplift man and that through the medium of matter, then we must, proceeding on strictly logical lines, grant that corresponding to the Evolution of soul from low to high, there must be an Involution from high to low, *i. e.* from God to Man—a gradual decent of course. Saiva Siddhanta clearly tells us that there is such an Involution. If **Kshityadi Kutilaprantha**, from Earth to

னொருவனுளன் என்றும் முன்னுக்கு வரும் வழியுண்டென்றும் முனியாதுரைக்கும் மதத்தில் முதல்வனிடமின்றி வேறெதனிடமிருந்து எதையும் எதிர்பார்க்கும்?

இவ்வுலகத்திற் பல பாஷைகளிருக்கின்றனவே. எதற்குரிய எழுத்துக்களவ்வாறு தோன்றினவெனின், ஒருவித சாஸ்திரநெறியிலும்நிற்காது, ஒருவித ஸூக்ஷ்மதத்துவங்களையும் மூலமாகக் கொள்ளாது குரங்கின் கிலுகிலா சப்தம்போன்றும், ஆடுகளின் மேமே சப்தம்போன்றும் பாஷை யமைத்துக்கொண்டவர்களுடைய பாஷைக்குரிய எழுத்துக்களி லிவ்வுண்மை காணமுடியாது. "ஏ, பீ, அலிப், பே" முதலிய எழுத்துக்களில் ஒரு எழுத்துக்கும் மற்றொரு எழுத்துக்கும் யாது சம்பந்தம்? உயிர் எழுத்து மெய்யெழுத்து ஜீவாக்ஷரம், தேகாக்ஷரம் என்று திவ்வியாகமங்களிற் பெறப்பட்டது போல இந்தப் பாஷைகளில் உயிர் எழுத்துக்கள் ஒரு தொகுப்பாகவும் மெய்யெழுத்துக்கள் ஒரு தொகுப்பாகவும், உயிர்மெய்கள் ஒரு தொகுப்பாகவுமமைந்ததுண்டோ. "அம்முறையே எழுத்துக்களும் மோசையும் பிறக்கு"மென்று கூறிய நியாயநெறிப்படித்தான் மேற்கண்ட எழுத்துக்களின் உற்பத்திக்கிரமமமைந்ததோ? "குரங்கிலிருந்தும் மாந்தர் பிறந்தனர்" என்று கூறுவதுபோலவே குரங்கினுடைய கிலுகிலா சப்தம்போன்றல்லவோ அவர்களுடைய பாஷையுமமைந்துகிடக்கின்றது. தெய்வமொன்றுண்டென்னும் பெருஞ்சிந்தை

---

Kutila, is an expression pointing out Evolution, there is a similar expression "**Sivatatvadi Bhoomyantham**"; from Sivathathva to Earth, pointing out the Involution. Yes, the Divyagamas expressly state that there is Arohana as well as Avarohana, that just as the Parasakthi of the Lord gradually assumes the Adi, Icha, Gnana Kriya forms to lend its helping hand to the inert soul, the Anava-bound Atman, implicitly through matter and explicitly through the highly evolved souls, Kriya Sakthi takes the soul to the highest Parasakthi. It is this that is represented by the egress of the idols through the five portals of the temple during utsavas. He that has eyes to see, let him see and this vision of the souls' progress helped on by the Divine Grace, constitutes real Darsana. Yes, if man has learned language and writing from the growl (Sound) and from objects (Sight) it does not disprove the existence of a language from God and of writing from the Devine forms through Nada (Sabda) and Bindu (Artha). He who has given eyes to see and ears to hear might have given language and forms capable of making Him known to the soul, since the mind is capable of thinking on Him.

கொண்டயாம் தெய்வசம்பந்தத்தை விடேமாகையால் எமது பாஷை யுந் தெய்வ சொரூபத்தைக்கொண்டதென்போம். ஆகையால் தெய்வ பாஷை, தெய்வ எழுத்துக்கள் என்பன ஆத்மா னாத்ம விவேசனமா கப்பொருந்திய தெய்வபாஷைக்கே யுரியன. தேகவிலக்ஷணமாக ஆத்மாவும், இவ்வாத்மாவிற்குத் தாரகமாகிய முதல்வனும் உண்டே னும் ஆஸ்திகவழிக் காதாரமுள்ள வரையாம் பாஷை முதலிய எவற் றையும் அன்பிற்கும் அருளுக்கு முறைவிடமாகிய அண்ணலிட மிருந்தே பிறக்கச்செய்வேம.

உண்மையில் "வித்தை" என்பது ஸர்வலோக மாதாவாகக் கருதப்பட்டு ஆணவவிருட்டைத்துறத்தவல்ல சிற்சத்தியாகிய சிவ வொளியே "வியலீம் வித்யாஶோபாஹ: ஸகலஜநநீம் ஏகவந்தநீயம்" என் றும "வித்யாதிபாம் ப்ரஸாதிரமஸ்ய ஶிரோருஹாணாம் தாம் இதி தாப ஸத்வைதவிது விதஶங்கர ப்ரபவேஶாத்ம ஜம் தேவீம் ஜநந்யஶரண: ஶரணம் ப்ரபத்யே" என்றும ஸ்ரீ காளிதாஸர் வியந்தார். வேதத்தின் ரகஸி யத்தை யுணர்ந்தார்கள். 'வித்தை' என்று கொண்டாடுவது "சங்கர னது திவ்யரூபத்தில் பச்சைத்துளிர்விட்ட தேவியே என்று கூறப்பட்டுளது. இஃதவர்கொண்டது மாத்திரமன்று திவ்யாகமத் தில் "பரஸம்வித்ஸ்வரூபிண்யா ஶக்த்யா பரமேயாயத"-பரமசக் தியே பரஸம்வித்ஸ்வரூபிணி. இத்துடன் கூடியவனே அவன் என்று கூறப்பட்டுளது. இச்சிற்சக்தி மாதாவாகவே, இச்சிற் சக்தியினது இயற்றலா லுண்டாகிய வியோமசப்த அக்ஷரங்களும் ஆன்ம அறிவிற்கு வியஞ்சகமாதலால் அவைகளுக்கு "க" எனும் பிரத்தியயம்சேர்ந்து "மாதிருகா" (தாய்போன்றது) எனப்பெயர்கொண்டனவென்க.

இதுகாறும் யாங்கூறியவாற்றால் "பரஸம்வித்சொரூபிணியும் பிரபோதாநந்தரூபிணியும்" ஆகிய பரசிவசித்சக்தியே "வித்தை" எனவும், அவ்வருட்சத்தியினது காருண்யத்தால் ஆன்மாவானது பரதேஜஸில் பரதேஜஸாக மறைந்து, சிவத்திற் சிவமாய் நின்று, தான்வேறு அதுவேறின்றித்தானே அதுவாய் அதுவே தானாய் இரண்டற்று அனுபவிக்கும்போது நிகழும் ஞானநுபவமே ஆகம மாகும். ஞானம் என்பது விளக்கமாயின் ஆண்டு நிகழும் விளக்கத் தைத் தவிற வேறெதை விளக்கமென்பாம். ஆகவே பரஸம்வித் சொரூபிணியாகிய பரசிவ சித்சக்தி முத்தனுக்குள்ளிருந்து விளக்கும் விளக்கத்திற்கே முக்கிய விருத்தியால் உபதேசம் அல்லது ஆகமம்

என்று பெயர். இதுவே உண்மையிலும் உண்மை. ஏனைய வாக்கிய ரூபம், அல்லது பொருளுருவாதிகளால் விஞ்ஞான கேவலாதி உயிர் வர்க்கங்களுக்கு ஏற்படும் விளக்கத்திற்குக் கௌணவிருத்தியினாலேயே ஆகமமென்று பெயர் கூறலாமன்றி முக்கிய விருத்தியாலன்று. ஆனதுபற்றியே வாக்கியரூபமான திவ்யாகமங்கட்கு "ஞானஸம்ஹிதைகள்" என்றும் "பிரபோதத்தின்பொருட்டு அருளப்பட்டன" வென்றும் உண்மையி லுணர்த்தப்பட்டது. ஸ்ரீ வாயுஸம்ஹிதையில் இக்காரணம்பற்றியே "வாராரோஜ்ஞாநஸம் ஹிதா: | யாஸ்வாராஹிதா: காரணஸ்வஸிஸ ॥" என்றும் "ஶிவஜ்ஞாநஸம்ஹிதா ஸா" என்றும் வெளியாயிற்று. அன்றியும் ஸ்ரீ காமிகாதிகளில் அத்தகைய ஞான விளக்கத்தை விரிக்கும் காரணத்தினாலேயே "ஶஸ்த்ர ஶஸ்த்ரம்" "ஸூக்ஷ்ம ஸூக்ஷ்மதரம்" "தத்வாத் தத்வதரம்" என்று ரகஸியத்தில் ரகஸியமென்றும் உண்மையில் உண்மையென்றும அடிக்கடி அடிக்கடி எடுத்து எடுத்து உத்கோஷிக்கப்படுகின்றது. "ஏகமேவ ஶிவஜ்ஞாநம் விஹிதம் ஶாஸ்த்ரவாதிந:" என்று ஒன்றாகிய சிவஞானமே பிரணவாதிபதின்மருக்குப் பதின்முறையாக விளக்கப்பட்டதென்று காமிகததில் கண்டாம். மேலும் அவைகளே "ஶிவாத்யாவதாரகை: ஷட்ஷஷ்டி: கதிதம் ஶிவாஜ்ஞயா" சிவனுணைப்படி பத்தும் பதினெட்டுமாக சிவ, ருத்திரர்களெனப்பட்ட அறுபத்தறுவர்களால் வெளிப்பட்டன என்று பெறப்பட்டது. "ஏதாநேவாயுஸ்ஸு ஸ்வாத்ம தேவர்ஷிபி: | ஸம்க்ஷேபதோ கதிதம் ஸர்வலோகாநுகம்பயா" இவைகளைக்கேட்டே தேவர்களும் ருஷிகளும் எல்லோரிடத்திலுங்கொண்ட இரக்கத்தினல் சுருக்கமாகக் கூறினர்கள் என்று விளக்கப்பட்டது.

நம்பரதகண்டத்தில் நம்மவர்கள் பிரமாணமாக எடுத்தாள்வது வேதம் எனப்படும். வேதம் என்பது யாது? அது ருக், யஜுஸ், ஸாம, அதர்வணுதிகள் என்று வெளிப்படுவது மாத்திரமா? இதைத் தவிர மற்றவைகள் வேதமாகாதோ? அதற்குப்பிரமாணம் இன்றோ? ஆ! உயர்ந்த ஞானத்திற்கு "வேதம்" என அமர்ந்ததைக்கேட்கும் போதே அளவில்லா வாநந்தமுண்டாகிறது. ஆன்மசொரூபம், பா

மான்மசொரூபம் முதலியவைகளை அறியாது மூச்சுக்காற்றேயான்மா வென்றும், தேகமே ஆன்மா ஆனதால் அது புதைக்கப்பட்டால் பின்னர் தீர்ப்புநாளில் அவைகளை எழுப்பி அந்தத்தேகங்களையே கடவுள் விசாரிப்பார் என்றும் கூறும் புன்மதங்களைப்போல நம்முடைய நூலுக்கு "புத்தகம்", என்னும் பொருள் தாவல்ல பெயர்கள் அமைந்ததோ வெனின், ஆ என்ன இனிமை! என்ன அழகு! அறிவு எனப்பொருள்படும் "வேதம்" எனும் சொல்லால் அமைந்தது பிரத்தியக்ஷம். இப்பெயரை யார் தந்தார், எங்குகாணப்படுவது எனின் இருக்கு வேதத்திலேயே அடிக்கடிப் பல்லாயிரம் இடங்களில் "வேதம் வேதம்" எனக்கேட்கின்றோம். இருக்காதிகளே வேதமாயின், இவ்வாறு வேதம் விதித்தது என்றும், இவ்வாறு வேதம் கூறிற்று என்றும் வெளிவருவதின் பொருள்யாது? "திரயீ" எனப்படும் ருக், யஜுஸ், ஸாமம் எனும் மூன்றே வேதங்களா? அல்லது "த்ரயோ வேதா:" என்றபடி ருக், யஜுஸ், ஸாமம், அதர்வண எனும் நான்குமாத்திரந்தான் வேதங்களா? அல்லது "அநந்தா வை வேதா:" வேதங்கள் பலபல என்றபடி. இவைகளைத் தவிர வேறு ஞானங்களும் வேதமாகுமா? அன்று; மூன்றாகிய இருக்கு, யஜுஸ், ஸாமாதிகளே முந்தியன; பின்னர் தான் அதர்வணம் உண்டாயிற்று என்று களிக்கலாமா? இதற்குப் பிரமாணமுண்டோ? ருக் வேதந்தான் ஆதி; பின்னர் தான் மற்றையவைகள் உண்டாயின என்று சில நவீன புத்திமான்கள் கூறுகின்றார்களல்லவா? அதைப்போலவே இதுவும் எண்ணத்தகுந்ததா? எனின் கூறுதும். இப்போது காணப்படும் இருக்காதிகளைக்கண்டு தானே அவ்வாறு அவர்கள் ஊகிக்கவேணும். நல்லது! ருக் வேத முதல் மந்திரத்திலேயே "அக்நிமீளே புரோஹிதம் யஜ்ஞஸ்ய தேவம்ருத்விஜம் ஹோதாரம் ரத்நதாதமம்" என்ற மந்திரம் காணப்படவில்லையா? ஈண்டு, ஹோதா, புரோஹிதன், ருத்துவிக்குகள் முதலியவர் கேட்கப்படுகின்றனர். ஒரு யாகத்தில் பலருக்குப் பல தொழில்களுண்டு. இதில் ஒருவர்க்கிருந்த தொழில் மற்றவர்களுக்கில்லை. ஹோதா எனப்பட்டவன் ருக்வேதத்தைச் சார்ந்தவன். அத்வர்யு என்பவன் யஜுர் வேதத்தைச் சார்ந்தவன். உத்காதா என்பவன் ஸாமவேதத்தைச் சார்ந்தவன். பிரம்மா அல்லது புரோஹிதன் என்பவன் அதர்வணத்தைச் சார்ந்தவன். இவ்வாறு இருக்வேத முதல் மந்திரத்திலேயே நான்கு வேத பிரஸ்தாபமும் தொழில் வேறுபாடும் காணப்பட, என்ன யுக்தி

கொண்டு ருக்வேதம் முந்தியது. மற்றையவேதங்கள் பிந்தியன என்று கூறத்துணிந்தார்களோ அறிகிலேம்! அன்றியும் இருக்குவேதத்தில் "𑌸𑌾𑌮𑌾𑌥𑌰𑍍𑌵𑌣𑌿" என்றும் அதர்வணே என்றும் அதர்வவேத பிரஸ்தாபம் கேட்கப்படுகின்றதே. அதர்வணவேதம் பின்னர் உண்டானதெனில் அதற்குரியவனல்லவோ ஸோமயாகாதிகளில் பிரம்மா என்னப்பட்டான். "𑌪𑍍𑌰𑌾𑌜𑌾𑌪𑌤𑍍𑌯𑍋 𑌵𑌾 𑌰𑍋𑌹𑌿𑌤𑌃 𑌕𑌾𑌯𑍇𑌨 𑌹𑌵𑌿𑌰𑍍𑌧𑌾𑌨𑌹𑌸𑍍𑌰𑍋𑌤𑌃 ॥" "𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌤𑍍𑌵𑌂 𑌸𑌰𑍍𑌵𑌯𑌜𑍍𑌞𑍇𑌷𑍁 𑌆𑌥𑌰𑍍𑌵𑌣𑌸𑍍𑌯 𑌦𑍍𑌵𑌿𑌜𑌃 ॥" என்ற வாக்கியங்களால் எல்லா யக்ஞங்களிலும் ஆதர்வண த்விஜனல்லவோ "பிரம்மா" எனப் பட்டான். அவனல்லவோ "புரோஹிதன்" எனப்பட்டான். தேவர்களுக்குக் குருவான "பிருகஸ்பதியும்" அஸுரர்களுக்குக் குருவான "சுக்கிரனும்" அதர்வணத்தைச் சார்ந்தவரல்லரோ. அக்காரணம்பற்றியே "பிருக்வாங்கிரஸ்" வித்தை என்று ஆதர்வணம் வெளியாயிற்று. இவ்வதர்வண வேதத்தைச் சேர்ந்தவனே முக்கியவிருத்தியால் பிராம்மணனாயினன். இவனல்லவோ புரோஹிதன் ஆனான். இப்படிப்பட்ட முக்கியவேதம் இல்லையென யார்கூற முந்துவார்கள்? மறறைய வேதங்களைச்சார்ந்தவர்களுக்குப் "புரோஹித" த்தொழிற் கிடையாது. புரோஹிதனாவான் தன் பொருட்டு, அல்லது அல்பகார்யத்தின்பொருட்டு, அல்லது மிகவும் இழிந்தகாமியாதி கர்மத்தின்பொருட்டு பிரவர்த்திப்பவன் அல்லன். ராஜராஷ்டிரக்ஷேமத்திற்கும், தேச தேசியர்களுடைய க்ஷேமத்தின் பொருட்டும் பாடுபடும் பரமகுணவானே புரோஹிதன் ஆதலால் புரோஹிதன் என அவன் வெளிவருவானாயினன். மற்றைய வேதங்களிலிருந்தார்களுக்கு இப்படிப்பட்ட பெருங்காருண்ய வியாபாரத்திலதிகாரம்கிடையாது. அவர்களுக்குள்ளது யாதெனின் "𑌵𑍈𑌤𑌾𑌨𑌂 𑌕𑌰𑍍𑌮𑌵𑍇𑌦𑍇𑌷𑍁 𑌕𑌰𑍍𑌮𑌵𑌸𑍍𑌤𑍁 𑌗𑍃𑌹𑍍𑌯𑌤𑌃"– யக்ஞகாரியமும் கிருஹ்ய காரியமுந்தான். ஆனால் ஆதர்வணிக்கோவெனின் "𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌕𑌂 𑌪𑍌𑌷𑍍𑌟𑌿𑌕𑌂 𑌚𑍈𑌵 𑌤𑌥𑌾𑌹𑍍𑌯𑌭𑌿𑌚𑌾𑌰𑌣𑌂 𑌚 𑌯𑌤𑍍"– என்றபடி சாந்திகம், பௌஷ்டிகம், அபிசாரணம் என்றமூன்று கர்மங்களாகும். ராஜராஷ்டிரங்கள், தேச தேசியர்களைப்பீடிப்பதும் மகா மாரிபோன்ற பெருவியாதிகள், பெரும் விபத்துக்கள் முதலியவைகள் அணுகாமல் பாதுகாக்கும் கர்மம் சாந்திகமாகும். மீண்டும் அவர்கள் மென்மேலும் புஷ்டியை அடையச்செய்வது பௌஷ்டிகம். அரிஷ்டங்களைப் போக்குவது

அபிசாரணம். இம்மூன்றும் லோகக்ஷேமத்தின் பொருட்டு ஏற்படு மவைகள். இஃதறியாதாரே அபிசாரமிருத்தலேனுக்கி அதர்வணத் தைத் தாழ்ந்ததாகக் கூறுவர். "ஹிம்ஸா ஸம்ஹார நிக்ரஹாத்மகம் தந்த்ர வேதாங்கேஷு ச | ந தாந் ஸமாசரேத் ப்ராஜ்ஞ: க்ஷாத்ர யஜ்ஞ விரோதிந: | ப்ராஜாபத்யா: ஸமாரம்பா: ஸமாஹித தபோதநா: ப்ராஜ:" க்ஷாத்திரதர்ம விரோதியான யக்ஞாதிகள் பிராணி ஹிம்ஸையைக்கொண்டவைகள். (உண்மையில க்ஷத்திரம் என்பதற்கு க்ஷதம், அடி, திராணம், காப்பாற்றல், ஹிம்ஸையிலிருந்து காப்பாற்றல் என்பது க்ஷத்திரதர்மமாகும்.) அதைப்புரோஹிதன் உப யோகிக்கப்படாது. ஜனங்களுடைய க்ஷேமம் புரோஹிதனிடமும், புரோஹிதக்ஷேமம் ஜனங்கள் க்ஷேமத்திலும் வைக்கப்பட்டிருக்கின் றன. அபிசாரம் என்பது இனைத்தெனத் தெரியாதாரே அபிசாரம் இழிந்ததென்பர். "ஶாந்திகம் பௌஷ்டிகஞ்சைவ அரிஷ்டநாஶ ஶாதநம்" என்பதில் பிளேக், மாரி, போன்ற அரிஷ்டநிவர்த்தி யல் லவோ அபிசாரம் எனப்பட்டது. ஹிம்ஸாகர்மம் என்பது ஆதர் வணிக்குரியது அன்று. ஆயின் சிலதுஷ்டர்கள் துஷ்டமாக அபிசா ரம் செய்வாராயின், அதனால் அதன் கருத்து அவ்வாறு தான் என்று கூறுவது பொருந்தாது. சுக்ராசாரியார் அசுரர்களுக்கு விபரீதமாகக் கூறின், அதற்கென்செய்யலாம்; பிருகஸ்பதிபகவானைப் பார்த்துக் கொள்ளக்கூடாதோ? அதர்வணத்தில் ஞான பிரவர்த்தகமேமுக்கிய மென்பதை உபநிஷதங்களில் பிரசினமுண்டகம், மாண்டூக்கியம், அதர்வசிரஸ், அதர்வ சிகையாதிகள் கேவலம் பிரணவத்தை யும் அதன்வாச்சியனுகிய பரமேச்வரனையும் பற்றிக்கூறுவதே சாக்ஷி யாகும். அன்றியும் ருக்வேதத்தைச்சார்ந்த ஆச்வாலாயனர், சுக்ல யஜுர்வேதத்தைச் சார்ந்த காத்தியாயனர், முதலினோர் அதர்வண வேதத்தைச் சார்ந்த பிப்பலாதரிடம் ஞானேபதேசம் பெற்றனர். ஞானபரம்பரையே பிரம்மாவினது ஜேஷ்டபுத்ரனுகிய அதர்வாவி னிடமிருந்து பெருகிற்று. வாஜஸநேயஉபநிஷத்தில் ததீசி, அதர்வா முதலினோரிடமிருந்து ஞானபரம்பரை வந்ததாகக் கூறப்பட்டிருக் கின்றது. இக்காரணத்தால் எவ்வகையாலும் அதர்வணம்புதிதெனக் கூறமுடியாது. ஆயின் திரயி என ருக், யஜுஸ், ஸாமம் வெளி வந்த தற்குக்காரணம் யாது? "ஆயவ்யேணாத்ருசஸ் ஸமய: த்ரயீ தஸ்ய ஶாகா:" ஆதர்வணம் அடிமரமும் ருக், யஜுஸ், ஸாமங்கள் அதன்பெருங் கிளைகளும் ஆகும். தூரத்திலிருப்பவர்களுக்குக் கிளை

களேகாணப்படும். அடிமரம் காணப்படமாட்டாது. அதுபோலவே த்ரயீ என்பது யக்ஞாதி வெளிக்கர்மங்களுக்கு உபயோகிக்கப்பட்டும் ஆதர்வணம் ஆத்மவித்தைக்கு உபயோகப்பட்டும் வருகின்றன. மேலும் பிரணவத்தில் அகாரத்தில் இருக்கும், உகாரத்தில் யஜுஸும், மகாரத்தில் ஸாமமும், அர்த்தமாத்திரையில் ஆதர்வணமும் என விதிக்கப்பட்டுள்ளது. "அகாரம் பஹ்வ்ருசம் ப்ராஹுருகாரோ யஜுருச்யதே । மகார: ஸாமவேதஸ்ய ஶ்ருதிராதர்வணீ ஸ்ம்ருதா" என்றது, வாயு சம்ஹிதை மீண்டும் "ருக்வேத: புநராத்மேதம் ஜாக்ரத்த்வம் ப்ரோச்யதே । யேநாத்மா த்ருஷ்டவஸ்து நித்யமேவாத்மதர்ஶக: । யஜுர்வேதோ பாதவஸ்துஸ்வப்நாவஸ்தோச்யதே । மோஹாத்யுத்தநாவமிணதா வித்யாவித்யாயதேதாமயி । ஸாமவேத: ஸுஷுப்த்யவஸ்தைவம் ஶிவம் ப்ரோச்யதே । மாயேயம் ஶிவவேதம் தாமவேஸநாஹியதே । அதர்வணஸ்துரீயாவஸ்தா துரீயாதீதமேவ ச" என்ற வாக்கியங்களால் ருக், யஜுஸ், ஸாமம் என்பவைகளால் முறையே ஜாக்கிர, ஸ்வப்ந, ஸுஷுப்தி எனும் அவஸ்தைகளும், ஆத்ம, வித்யா, சிவதத்துவங்களும் குறிக்கப்பட, அதர்வணத்தால் துரியம் துரியாதீதங்களும், தத்துவங்கடந்த பதமும் வெளியிடப்பட்டன. அன்றியும் உபநிஷத்தில் "தஸ்ய யஜுரேவ ஶிர: । ருக் தக்ஷிண: பக்ஷ: ஸாமோத்தர: பக்ஷ: । அதர்வாங்கிரஸ: புச்சம் ப்ரதிஷ்டா" கிருஷ்ண யஜுர்வேதிய தைத்திரியத்தில் அதர்வணமே மூன்று வேதங்களாகிய ருக், யஜுஸ், ஸாமங்களுக்குப் பிரதிஷ்டா ரூபமாகக் கூறப்பட்டிருக்கின்றது. இதனால் மூன்று வேதங்கள் (Exoteric) பாஹ்ய ரூபமென்றும், அதர்வம் (Esoteric) ஆந்தர ரூபமென்றும் குப்தவித்தையென்றும் வெளியாகும். இதனால்வேதங்களுக்கு முன்பின் கூறுவதுமுடியாது. ஆகையால் நவீனபுத்திமான்கள் கூறுவதுபொருந்தாது. இனி வேதம் யாதெனின், கூறுதும். இப்போது காணப்படும்வேதங்கள் சிற்சில பிரயோகங்களை ஒட்டி அதற்கனுகுணமாகச் சேர்க்கப்பட்ட மந்திரங்களைக் கொண்டனவன்றி வேறல்ல. ஒரு கர்மத்தின் ஓர் பாகம் ஒரு வேதத்தின் ஒரு பாகத்தும், மற்றொரு பாகம் மற்றொரு வேதத்தின் வேறு பாகத்திலும் காணப்படும். ஆனால் சாக்ஷாத் அந்த அந்த கார்மத்தில் எல்லாம் ஒழுங்குபெற நடைபெறும். ஒரு கர்மத்தையோ, அல்லது ஒரு கொள்கையையோ பூர்த்தியாக ஓர் வேதத்திலிருந்தாவது

க்காணமுடியாது. ஆனதுபற்றி இக்கொள்கை வேதத்தில் கிடை யாது, ஆனதால் இது புதிதென்று சில நாஸ்திகர் கூறுவது கூடாது. ஓ! விக்கிரகாராதனம் வேதத்திற்கிடையாது; ஜந்மாந்திரக் கொள்கை வேதத்திற்கிடையாது; பாப்பிரம விஷயம் வேதத்திற் கிடையாது; காணப்படுவது பலதெய்வ வணக்கம்; அக்நியில் வழி பாடுதான் கண்டோம் என்று சில புன்மக்கள் கூறுவது ஓர் எள்ளள வும் பொருந்தாது. வேதங்கள் ஜனங்கள் அநுஷ்டித்தேவந்த எல் லாக் கொள்கைகளையும், எல்லாக் கர்மங்களையும் எடுத்துக்கூறுவதாக ஸங்கல்பித்துக்கொண்டு வரவில்லை. பல கர்மங்களையும் பல கொள்கை களுடன் ஜனங்கள் உண்மையில் பிரவர்த்தித்துவந்தகாலையில் சிற்சில கர்மங்களுக்குத் தக்கவாறு சில பிரயோகமந்திரங்களைச் சேர்த்துவை க்கப்பட்டவைகளே ருக்காதிகளேயன்றி அவைகளே எல்லாவற்றை யும் கூற முந்தவில்லை. இவ்வேதங்களில் காணப்பட்ட கர்மங்களுக் குக்கூட முதல் மத்தியம், அந்தமாதிகளைத்தெரிந்து காணமுடியாது. சில கர்மங்களின் மத்தியபாகம் மாத்திரந்தான் காணப்படும். சில கர் மங்களின் அந்தியபாகமே ஸூசிப்பிக்கப்படும். ஆரம்பபாகம் விடப் பட்டிருக்கும். அதனால் அநுஷ்டானமுறையில் எல்லாம் அநுஷ்டிக் கப்பட்டே வந்தனவன்றி விடப்பட்டு வந்தவைகளன்று. யஜுராதிக ளில் முதல்வனுக்கு உமாஸகாயத்வம் முதலியவைகள் கேட்கப்படும். கோயில்கள் விக்கிரகாராதனம் முதலியவைகள் அதர்வணத்தில் இருப் பதாகச் சூசனையாகக்காண்கிறோம். "தேவதாயதநாநி கம்பந்தே தைவதப்ரதிமா ஹஸந்தி" இதனால் இவ்வேதங்களில் நடத்தப்பட்டு வந்தவைகளில் சிற்சிலவைகளும் காணப்படுவதேயன்றி எல்லாம் காணப்படவில்லை என்று காணப்படாதவைப் புதிது என்று கூறமுடியாது. அநுஷ் டானமுறையில் பலவகைகள் தொன்றுதொட்டு வழிவழியாக அநுஷ் டிக்கப்பட்டேவந்தன. இனியுண்மையாதெனின், வேதங்களே பல வாறாகச்சிதறுண்டு கிடந்தன. பலர் பல காலங்களில் வேதங்களை ச்சேர்த்ததுண்டு. அடிக்கடி அவைகள் சேர்க்கப்பட்டும், ஒழு ங்கு படுத்தப்பட்டும் வந்தன. அவ்வாறு 28 பெயர்கள் பல விடங் களிலுமிருந்து பலவாறாய்க்கிடந்த வேதமந்திரங்களை ஒழுங்குபடுத் தினர்களென்று லிங்க, கூர்ம, சைவாதி மஹா புராணங்களிற் செவ்வனே கூறப்பட்டுள்ளது. அவர்களை இக்காரணம்பற்றியே "வியாசர்கள்" எனக்கேட்டோம் "ஸம்க்ஷிப்ய வேதம் ப்ராந்தம் ஸம்ருத்யா க்ருதவாநுமாஹிந: । வ்யாஸவேதத்யாஜொகே வேதவ்யாஸ

டதிரு-தஃ॥" என்ற வாக்கியப்படி இப்போது காணப்படும் வேதங்கள் சிற்சில கர்ம, பிரம்மாநுஷ்டான ஸம்பந்தமான மந்திரங்களை ஒருவாறு தொகுத்து, கிருஷ்ணதுவைபாயன வியாசரால் சேர்க்கப்பட்டவைகள். ஆகவே ரிஷிகள் மந்திர கர்த்தாக்களும் மந்திர திருஷ்டாக்களுமாகக் கருதப் படுகின்றனர். இதன் விரிவைப் பின்னர் கூறுவாம். இபபோது சில பாகங்கள் (கிலாநி) கிலங்கள் எனப்படும். இவைகள் இப்போதைய வேதங்களில் சேராதவைகள். அவைகளும் பிரமாணங்களே. அவைகள் வாஸ்தவத்தில் எந்த இடங்களில் சேர்க்கப்படவேண்டுமென்பதைத் தெரியாமல் பிரமாணங்களாகவே கொள்ளப்பட்டன வென்பது எம தபிப்பிராயம். இக்கிலங்களை சிராததாதி காலங்களில் அபிசிரவணம் செய்ய மனுவாதி ஸ்மிருதிகளில் விதியுண்டு. இதன்பொருள் யாதெனின் ஆரியஸமாஜத்தார் கொள்வதுபோல சில பாகந்தான் பிரமாணம் என்று கூறுவது அடாது. இவ்வேதங்களில் காணப்படுவதுதான் வைதிகமதமென்றும், இவ்வேதங்களில் காணப்படாது ஆரியர் அநுஷ்டித்து வரும் கோயில்வழிபாடு முதலியவைகளெல்லாம் புதிது என்றும் கூறுவது எவ்வளவும் பொருந்தாது. ஆகையால் "சாஸ்திரயோநித்வாத்" என்ற பிரமஸூத்திரத்தில் ஸ்ரீ கண்டயோகிகள் கூறுவதுபோல ருக், யஜுஸ், ஸாம, அதர்வண, புராண, இதிஹாஸங்கள் யாவுமே பிரமாணம். ஹிமசேது பரியந்தம் பிரதிகிராமங்களிலும் காணப்படும் சிவாலய, சிவாராதனுதிகள் யாவுமேவைதிகர்கள் கொள்கையாம். தர்மசாஸ்திரங்களிற்காணப்படாதவைகளைக் கிருஹ்ய நூற்களில் காணலாம். இவைகளில் காணப்படாதவைகளை "பழையன" என்று பொருள்படும் புராணங்களில் காணலாம். இவைகளிற் காணப்படுவனயாவுமே ஆரியர்களின் கொள்கைகளேயன்றி, எங்கிருந்தோ கைப்பற்றினர் யாரிடமிருந்தோ கற்றனரென்பது விழலர் வீண்சொல்லேயாகும். ஆதலால் "இதிஹாஸபுராணம் பஞ்சமம்" என்று சாந்தோக்கியாதிகளில் கூறப்பட்டது. தொன்று தொட்டு அநுஷ்டிக்கப்பட்டு வந்த பழையனவைகளும் வைதிகங்களுமே யன்றி வேறன்று. ஆகையால் வேதங்களை அறியவேண்டுமானல் இவைகளையும் அறிந்தாலன்றி அறியமுடியா தெனக்கொண்டு இவைகள் ஐந்தாம்வேதமென்றும் வேதோபபிருஹ்மணமென்றும் வெளிவந்தன. காலதேசத்தைப்பற்றிச் சில நழுவியும், சில சேர்க்கப்பட்டும் இருக்கலாம்.

அதை யாமாக்ஷேபிப்பதில்லை. ஆனால்பெரும்பான்மையிலும்காணப் படுமவைகளையும், கிருஹ்யஸூத்ரங்கள், கல்பஸூத்திரங்கள், தர்ம சாஸ்திரங்கள், புராணேதிகாசங்கள் முதலியவைகளிற் காணப்படும். தொன்றுதொட்டுப் பலபல்லாண்டுகளாக வநுஷ்டிக்கப்பட்டு வந்தவை கள் யாவுமே வேதசம்பந்தமேயன்றி வேறன்று. முடிவில் ஆரியர் களுக்கு அறிவின் விஷயங்கள்யாவும் வேதங்களே. அதனாலேயே தங்கள்தங்கள் பெரியஞானத்தை வேதமெனக் கூறினார்கள் என்பது தான் உணரத்தக்கது. இவ்வேதஞானத்தைப் பாரம்பரியமாகக் கேட்டு வந்ததால், கர்மவிஷயங்களுக்காக வுற்பட்ட சிற்சிலவைகளைத்தொகுத் துவைத்தார்கள். மற்ற விஷயங்களை ஆசாரிய சிஷ்யபரம்பரையாக அநுஷ்டித்து வந்தார்கள். அவ்விஷயங்களிற் சிற்சிலவைகளை ரக ஸியமெனக்கருதி வேறுநூற்களாகவும் திரட்டி வைத்தனர். எல்லாங் கூடி உயர்ந்த ஞானத்தை வேதமென்றும், பரமாப்தனிடமிருந்து வந்ததால் ஆகமம் என்றும், உயர்ந்த பக்குவத்தில் கேட்டதால் சுருதி என்றும், அவைகளை யநுஷ்டிக்க யோக்யமுடையதால் விதி நூலாக சாஸ்திரம் என்றும், அநுஷ்டிக்கவே சொல்லப்பட்டதால் "ஆம் நாயம்" என்றும் பரமனைப்போலவே அந்த ஞானம் என்று முண்மையாகி பரமனிடமிருந்து வெளிவந்ததால் நிகமம் என்றும் கூற ப்பட்டது. இதனால் காலதேச வர்த்தமானதிகளாற் கட்டுண்ணாது என்று மோரியல்போடு நின்ற ஞானமாகவிருக்கும் பெரிய ஞானமே ஆகமமாகும். அந்த ஞானத்தைக்கொண்ட நூற்களும் ஆகமமாகும். பின்னர் கர்மாதிவிஷயங்களைப்பற்றித் தொகுத்துவைக்கப்பட்டவை களுக்குச் சுருதியென்று கூறப்பட்டகாலத்து ரகஸியமாய் உத்தம பரிபாகிக்கு ஆசாரியனால் உணர்த்தப்பட்டு வந்த பரமஞானமானது "எல்லா வித்தைகளின் ஸாரமானதுபற்றி" "சுருதி ஸாரம்" "வேதஸாரம்" என்று விளிக்கப்பட்டுவந்தது. இத்தகைய வேதஸார சுருதிஸாரங்களே சைவாகமங்கள். எவ்வாறு சிவாகமங்கள் வேத ஸாரங்கள்? எவ்வாறு சிவாகமங்கள் பரதர்மபிரவர்த்தகங்கள்? இதற்குப் பிரமாணம் என்னை? இதற்கு ஆந்தர (internal) பாஹ்ய (external) சாக்ஷியங்கள் (evidence) என்னை? இவ்வாறு வேறு நூற்களும் வைதிகங்கள் எனக் கூறப்படின் அவைகட்கு என்னகதி? என்பன வாதிவிஷயங்களை அடுத்த இரண்டாம் அத்தியாயத்தில் விசாரித்துப் பரிஷ்கரிப்பாம்.

ஸ்ரீ மெய்கண்ட தேவன்றிருவடிவாழ்க.